ர், வகுளிநாதர், மதங்கநாதர், மச்சேந்திரநாதர், கடேந்திரநாதர், கோரக்கநாதர், என்னும், நவநாத சித்தர்களால் கற்பிதமான - கௌள யாமளாதி - இம்சை-மைதுநாதி-நிஷேதகர்ம்மமுள்ள சாஸ்திராந்திரங்கள், அபிசார கர்ம்மசரிதவியாதியாதியால், அகால மிருத்துரூபமான மரணசுழுத்தி விஷமூர்ச்சாதிரூபமோகநமும், அக்கிநிஸ்தம்பனே, ஜலஸ்தம்பனே, இந்திரியஸ்தம்பனே,கட்கஸ்தம்பனே, சிங்வைஸ்தம்பனே, கதிஸ்தம்பனுதி ஸ்தம்பனமும், பூர்வசுகாசிரமரிரசநாத்மகமான- உச்சாடணமும், வஸ்திராபரண வநிதாதி வஸ்துக்களை நிஜஸ்தானத்திலிருந்து அழைப்பிக்கும் ஆகருஷணமும், பிராண சிநேகமான இடத்தில் அந்நியோந்நிய விரோதமுண்டாக்குகிற வித்வேஷ்ணமுமான, ஷட்கருமங்களையும், ராஜவசியாதிவசியங்களையும், சுராசுரபூதக்கிரகா வேசங்களையும், பாதுகாசித்தி, அஞ்சநாசித்தி, குடிகாசித்தி- மூலிகாசித்தி, ரசவாதங்களையும் பிரதிபாதிக்கும்.

## சாக்தீகபாஞ்சராத்திரம்.

இதற்குமேல், சத்திதத்துவவாசியென்னும், ஒரு ஆத்துமனும், வாசுதேவனும் கிரமத்தில் பிரதிபாதிக்கப்பட்ட அநுக்கிரமத்தில் சாக்தீகம் - பாஞ்சராத்திரமென சாஸ்திராந்தரத்துவயமுண்டு. அவற்றுள் - சாக்தீகம் - சடாசடப்பிரபஞ்சமெல்லாம் சத்திபரிணாமமென்பது முதலாக மதவிஸ்தாரஞ்செய்யும்.

பாஞ்சராத்திரம் - பிருதிவியாதியான சாந்தமான சதுர்விம்சதி தத்துவத்துக்குமேல் குணதத்வாத்மக வாசுதேவனால் சக்திதாதாத்மீகமாயுண்டான கிருஷ்ண-அநிருத்த - மகரத்துவச - ரௌகிணேயரென்னும் நால்வராலுற்பத்தி முதலான கிருத்திய மென்று பிரதிபாதிக்



கும். இதன்மேல் லௌகிக- வைதிக - ஆத்தியாத்மக-ஆதிமார்க்கிக- மாந்திரிகமென பஞ்சவிதசாஸ்திரங்களுண்டு-அவற்றுள்.

## லௌகிகசாஸ்திரம்.

தந்மந்திரியாதிகளாற்சொல்லப்பட்ட ஆயுள்வேத தண்ட நீதிமுதலான சாஸ்திரம், திருஷ்டபலன்களைப் பிரதிபாதிக்கும்.

## வைதிகசாஸ்திரம்.

ஜைமுனி - அக்ஷபாத - கணதரென்னும் ரிஷீச்சுரர்களால் கிரமத்திற் சொல்லப்பட்ட- பூர்வமீமாங்கிசை-நியாய - வைசேடிகமென திருஷ்டாதிருஷ்ட பலன்களைப் பிரதிபாதிக்கிற சாஸ்திரத்திரயமுண்டு. அவற்றுள்-பூர்வமீமாங்கிசையென்பது உபக்கிரம முதலான சட்விதலிங்கதாற்பரியத்தால், வேதவாக்கிய விசாரபூருவகமாய்ச்,சோதிஷ்ட்ோம யாகாதிகர்ம்மங்களை விதியுக்தமாகச்சொல்லும்.

நியாயமாவது - பிரமாண - பிரமேய- சம்சய - பிரயோசன-திருஷ்டாந்த-சித்தாந்த-அவயவ - தர்க்க-நிர்ணய-வாத-ஜல்ப-விதண்டா - ஏத்துவாபாச - சல - சாதி நிக்கிரக, ஸ்தானமென்னும் சோடசபதார்த்தமுஞ் சொல்லிப் பிரபஞ்சத்துக்கு ஈச்சுரனே கர்த்தாவென்று நிச்சயிக்கும்.

வைசேடிகமாவது, திரவிய, குண,கர்ம்ம,சாமாந்நிய,விசேஷ, சமவாய அபாவமென்னும்-சத்தபதார்த்தப் பிரதிபாதகத்தால் பிரபஞ்சசொரூபத்தை விவகரிக்கும்.

## ஆத்தியாத்மீகசாஸ்திரம்.

கபில - பதஞ்சலி - வியாசரென்னு முனிவர்களால் கிரமத்திற் சொல்லப்பட்ட - சாங்கிய - பாதஞ்சல - வே

தாந்தமென - ஆத்மக்கியான பலன்களுள்ள ஆத்தியாத்மீக சாஸ்திரத்திரயமுண்டு-அவற்றுள்.

சாங்கியம் - நித்தியநிர்ம்மலமான ஆத்மசந்நிதாநத்தில் குணத்திரயாத்மகப் பிரகிருதியே பஞ்சவிம்சதி தத்துவாத்மகசகத்தாய் விவகரிப்பதே சம்சாரபந்தமென்றும்,சத்துவாதி குணத்திரயாநுக்கிரமத்தால் சேத்மப்பிரகிருதி-பித்தப்பிரகிருதி - வாதப்பிரகிருதியினுள்ள சாந்தி - குரோத - மூடாதிகுண யுக்தமான - உத்தம - மத்திம - அதம - புருஷத்திரய வர்ண்ண - நீதிமுதலானவைகளுண்டாமென்று சொல்லும்.

பாதஞ்சலம் - இயம - நியமாதி அஷ்டாங்கயோகத்தால், மனோநிச்சல சித்தியாமென்றுசொல்லும்.

உத்தரமீமாங்கிசை - உபநிஷதர்த்தப் பிரதிபாதகமான வேதாந்தம் - பிரபஞ்சத்துக்கு மித்தியாத்துவஞ்சாதித்து, அதனல் பிரமாத்தும - ஐக்கியத்துவம் வர்ண்ணிக்கப்பட்டும், பாஸ்கரீயம், மாயாவாதம், சத்தப்பிரமவாதம், கிரீடாப்பிரமவாதமென நான்குபேதமாம். இதற்குமேல்.

## ஆதிமார்க்கிகசாஸ்திரம்.

மாயாதத்துவ,வித்தியாதத்துவ,வாசிகளானருத்திரராற்சொல்லப்பட்ட பாசுபத - காபாலிக - மாவிரதமென ஆதிமார்க்கிகசாஸ்திரத்திரயமுண்டு. அவற்றுள்.

பாசுபதம், மாயாகர்ம்மாதிகளைச்சொல்லும்.

காபாலிகம், நரகபால பிக்ஷாடணுதிகளைச் சொல்லும்.

மாவிரதம் - அஸ்திதாரணுதிகளைச்சொல்லும்.



## நாநாமதஸ்தர்களுடைய ஆத்துமநிருபணம்.

இப்படிச்சொன்ன சமஸ்தமதாந்தரங்களில் பிரதிபாதிக்கும் ஆத்மசொரூபமாவது.

சார்வாகன் - ஆத்துமன்-தேகமேயென்பன்.

சார்வாகஏகதேசி - ஆத்துமன் - இந்திரியமேயென்பன்.

இரணியகர்ப்பனென்னுஞ் சார்வாக ஏகதேசி - ஆத்துமன் - பிராணனேயென்பன்.

சைநன் - ஆத்துமன் - தேகாதிவிலக்ஷணனுய் தேகபரிணமிதனுய், பரிணமித மத்தியையில் சங்கோசவிகாசதர்ம்ம யுக்தனுயிருப்பனென்பன்.

பௌத்தன் - ஆத்துமன் புத்தியேயென்பன்.

கௌள யாமளசாத்துமீகர் - ஆத்துமன் - ஆநந்தமேயென்பர்.

பாஞ்சராத்திரன், ஆத்துமன், நாடிமத்தியகதனுய், அணுப்பிரமாணமாகவே யிருப்பனென்பன்.

லௌகிகன்; ஆத்துமன் - தேகபுத்திர களத்திராதிரூபனென்பன்.

மீமாங்கிசபேதர்களான பாட்டப்பிரபாகரர் ஆத்துமன் ஸ்வதப் பிரமாணமான ஞானசொரூபனென்பர்.

நியாயவைசேடிகர்,ஆத்துமன்,ககனம்போல மகத்பரிணமனுய்,பாஷாணம்போலச்சடரூபனுனாலும்,மனசுசம்யோகத்தால் சித்துசம்யுக்தனு யிருப்பனென்பர்.

சாங்கியபாதஞ்சலிகர் - ஆத்துமன்; அசங்க சின்மாத்திரனென்பர்.

வேதாந்திகள்;ஆத்துமன்;ஞப்திமாத்திரனென்பர்

பாசுபத காபாலிக மாவிரதிகள்-ஆத்துமன்,நித்திய வியாபக சைதந்நியனென்பர்.

மாந்திரசமிஞ்ஞாசித்தாந்திகள் - ஆத்துமன், நித்தியவியாபக ஞாநக்கிரியா சொரூபனெனன்பர்.

## நாநாமதஸ்தர்களுடையமோக்ஷலக்ஷணம்.

இனி இந்தச்சகலசமயவாதிகளால் பிரதிபாதிக்கப்பட்ட மோக்ஷலக்ஷணமாவது.

சார்வாகலௌகிகர்-மரணமேமோக்ஷமென்பர்.

ஜைநன், ஆகாச மத்தியத்துளூர்த்தரோத்திரகமநமே மோக்ஷமென்பன்.

பௌத்தன், சுகதுக்காதிகளால் மயக்கப்படாமலிருக்கும் சுத்தபுத்தி சந்ததியே மோக்ஷமென்பன்,

கௌளயாமளர், ஆகாசகமநாதிசித்திப்பிராப்தியே மோக்ஷமென்பர்.

சாத்துவீகன்; ஆநந்தப்பிராப்தியே மோக்ஷமென்பன்,

பாஞ்சராத்திரிகள், வாசுதேவாத்துமகப் பிரகிருதியில் சொரூப ஆனியில்லாது அடங்குவதே மோக்ஷமென்பர்.

லௌகிகர், இகலோகத்தில் புத்திரதாராதிகளுடன் கூடிவியாதியாதி துக்கமில்லாமல், சுகத்திலிருக்கிறதே மோக்ஷமென்பர்.

பூர்வமீமாங்கிசிகள், சுவர்க்காதிலோகப் பிராப்தியேமோக்ஷமென்பர்.

நியாய வைசேடிகர், ஆத்துமன் சரீரேந்திரியாதிஇருப்த்தொருதுக்க ஆத்தியந்தநாசத்தால் பாஷாணம்போலிருப்பதே மோக்ஷமென்பர்.



சாங்கியர், பிரகிருதி புருஷவிவேகத்தால், அவித்தியா நாசமானதே மோக்ஷமென்பர்.

பாதஞ்சலிகர், யோகாப்பியாச பலத்தான் மநோலயத்துவாரத்தால் அஞ்ஞாநமழிந்ததே மோக்ஷமென்பர்.

வேதாந்திகள், பிரமாத்தும ஐக்கிய ஞானத்தால் விவகாராதி சம்சாரபந்த நிவர்த்தியே மோக்ஷமென்பர்.

பாசுபதர், பிரவாகேஸ்வரத்தால் ஈச்சுரத்துவம் அந்நியருக்குக்கொடுத்து ஆத்துமன் ஞப்திமாத்திரமாயிருப்பதே மோக்ஷமென்பர்.

காபாலிகமாவிரதிகள், கர்த்ருத்வமான சம்சாரபாவத்தை விட்டு, ஞப்திமாத்திரமாயிருப்பதேமோக்ஷமென்பர்.

மாந்திரசமிஞ்ஞா சித்தாந்திகள், ஆத்துமன் சடத்துவாதீத சிவசமாநத்துவமாவதே மோக்ஷமென்பர்.

இந்தவாதிகளில் சார்வாக - ஜைந - பௌத்த- மீமாங்கிச - சாங்கியரென்பவர் - நிரீச்சுரவாதிகள்.

மற்றவர்களெல்லாம் ஸேஸ்வரவாதிகள். இந்த மகாவாதிகளில் - சார்வாகாதிகளனைவரும், பேத வாதிகள். வெதாந்தியொருவனே அபேதவாதி.

## மீமாங்கிசசாஸ்திரவிவரம்.

இப்படிச் சொல்லப்பட்ட, சகலசாஸ்திரங்களுக்குள் - வேதம் (ச) வேதாங்கம் (சு) வேதோபாங்கம் (ச) இவை சதுர்த்தச வித்தையென்னப்படும். இந்தச் சதுர்த்தச வித்தையுள், மீமாங்கிசையாவது- மிகுதியும் விசிஷ்டமாய், இருபது அத்தியாயமாய், அர்த்தப்பிரதிபாதகத்தால் துவிபாகமாம். அவற்றுள், பிரதமபாகம், ஜைமுநிசூத்திரரூபத்தால், துவாதச அத்தியாயமாய், தர்மா

ர்த்தப் பிரதிபாதகமாய், லோக வேதாதிகரண மென்ப து முதலான, சகஸ்திரநியாயத்தால், பூர்வமீமாங்கிசை யென்னப்படும். அந்த ஜைமுநிசூத்திரத்துக்கு, சபரனு ல் சாபரமென்னும் பாஷியஞ்செய்யப்பட்டது. அதற் கே பாட்டாச்சாரியரால், வார்த்திகரூபத்தில் பாட்டமெ ன்றொரு மதாந்தரஞ் செய்யப்பட்டது. அந்த பாட்ட ருடைய சிஷ்யரான பிரபாகரரால் அந்தச் சாபரபாஷிய த்துக்கே பிரபாகரமென்றொரு மதாந்தரஞ் செய்யப்ப ட்டது.

இரண்டாம்பாகம் - வியாசசூத்திரரூபத்தால் எட் டத்தியாயமாய்ப் பரமாத்துமக பிரதிபாதகத்தால், உத் தரமீமாங்கிசை யென்னப்படும். அதனுள்-பூர்வம், நான்க த்தியாயமும் தேவதாகாண்டமாம். அதில் மந்திர வாத த்தைப்போலத் தேவதாலக்ஷணங்கள் பலபத்திராம ரால் பிரதிபாதிக்கப்பட்டது.

## வேதாந்தசாஸ்திரம்.

உத்தரமான நான்கத்தியாயமும் பிரமகாண்டமா ம். அதனுள், பரமாத்மஐக்கியப் பிரதிபாதகமாய்ச்ச ங்கராசாரியரால், பாஷியஞ் செய்யப்பட்டது. அந்த பா ஷியத்துக்கே விவரணசாரியரால், விவரணஞ்செய்யப் பட்டது. அந்த விவரணமே வேதாந்த சாஸ்திரமாம். அதன் விஸ்தாரமாவது.

பிரகரணோற்பத்தி முற்றிற்று.

---

உ

# விவேகசிந்தாமணியில்

## வேதாந்தபரிச்சேதம்.

.........................

### மங்களாசரணத்திரயம்.

ஆசீர்வாதம் நமஸ்காரம் வஸ்துநிர்த்தேசமென்னு மிவை சாஸ்திராரம்பத்திற் செய்யப்பட்ட மங்களாசர ணத்திரயமாம்.

### வியாக்கியானபஞ்சலக்ஷணம்.

பதம்-பதார்த்தம்-வாக்கியயோசனை- பரீக்ஷை, பரி காரமென்னுமிவை வியாக்கியான பஞ்சலக்ஷணமாம்.

### அந்வயபஞ்சலக்ஷணம்.

விசேஷண-விசேஷிய - கர்த்த-கர்ம்ம- கிரியையெ ன்னுமிவை அந்வய பஞ்சலக்ஷணமாம்.

### அநுபந்த சதுஷ்டயம்.

விஷயம் - சம்பந்தம்- பிரயோசநம்- அதிகாரமென் னுமிவை அநுபந்த சதுஷ்டயமாம். அவற்றுள் - சீவபிர ம்ம ஐமக்கியமே விஷயம். பிரதிபாத்தியப்பிரதிபாதகபா வகமே சம்பந்தம். சகலதுக்க நிவர்த்தியால் நித்தியாநந் தப்பிராப்தியே பிரயோசநம். சாதந சதுஷ்டய சம்ப ன்னனே அதிகாரி.

### சாதநசதுஷ்டயம்.

நித்தியாநித்திய வஸ்துவிவேகம். இகாமுத்திரார்த் த பலபோகவிராகம் - சமையாதி சட்க சம்பத்தி -முமு ட்சத்துவமென்னு நான்குஞ், சாதனசதுஷ்டயமாம். அ வற்றுள் சித்ரூபனன ஆத்மனே நித்தியன். மற்றவிஷ யமெல்லாம் மித்தையென்று தெளிவதே - நித்தியாநித் திய வஸ்து விவேகம்.

இகபரங்களில் வசிதாதிவிஷய போகமெல்லாம் கர்ம்மஜந்நியமாகையால், அநித்தியமென்றறிவித்து அந்த கர்ம்மமார்ச்சிக்கிற ஆதியிலே பிரயாசமும், அநுபவாநந்தத்தில் வைராக்கியமுமுண்டாகையால் துக்கரூபமென்று தெரிந்து மனதிற்பற்றறுததே இகாமுத்திரார்த்தபல போகவிராகம். சமையாதிசட்குணசித்தியே - சட்க சம்பத்தி. சகசசாயுச்சியமோக்ஷாபேக்ஷையே முமுட்சத்துவமாம். அவற்றுள் - சமையாதி சட்கசம்பத்தியாவது - சமை - தமை - திதீட்சை - உபரதி - சிரத்தை - சமாதியென (சூ) அவற்றுள் அந்தக்கரண நிக்கிரகமே - சமை. பாகியகரணநிக்கிரகமே - தமை. குரோதாதி துக்கங்களைப் போக்குகிறதே திதிக்ஷை. சகலகர்ம்மபரித்தியாகமே உபரதி. சுருதியிலும், குருவாக்கியத்திலும் விசுவாசமே சிரத்தை, குருபதேசம் சித்தத்தில்திடங்கொள்ளுவதே சமாதியாம்.

## சதுர்விதகுருசேவை.

அந்தசாதனசதுஷ்டய சம்பன்னனான அதிகாரி செய்யுஞ் சற்குரு சேவையாவது, ஆப்தம் - அங்கம் - ஸ்தானம் - சத்பாவமென்னுமிவை. அவற்றுள் - குருவுக்கு அநுகூலவிர்த்தியே ஆப்தம். குருபாதபிரக்ஷாளநாதியே அங்கம். குருவின் கிரகக்ஷேத்திராதி ரக்ஷணையே - ஸ்தானம். ஸ்ரீகுருவை சாக்ஷாத்பரமசிவனென்னும் விசுவாசமே சத்பாவமாம்.

## அதிகாரத்திரயம்.

கர்ம்மகாண்டி, பக்திகாண்டி, ஞானகாண்டியென வேறேமூன்றதிகாரிகளுண்டு. அவரில் தேககிரககிருத்தியாதிகளில் கிரமத்தில் யான் எனதென்னும், அகந்தையுள்ளவனே கர்ம்மகாண்டி. சகலகிரியைகளையும் ஈச்சுரா



ர்ப்பணஞ் செய்பவனே பக்திகாண்டி. சகல கர்ம்மத்துக்கும் தான் சாக்ஷிகனென்பவனே ஞானகாண்டி.

## அதிகாரபஞ்சகம்.

கர்ம்மி, முமுட்சு, அப்பியாசி, அநுபவி, ஆரூடனென வேறே ஐந்ததிகாரிகளுண்டு. அவரில், மூடத்தனத்தால் தன் சாதிகர்ம்மமாத்திரம்பிடித்துச் சதசந்மத்தில் முத்தனாகிறவனே கர்ம்மி. ஜகம் - அசத்தென்று தெளிந்து ஆத்ம கர்ம்மநிஷ்டனாய் மூன்று சந்மத்தில் முத்தனாகிறவனே முமுட்சு. சொப்நம்போலப் பிரபஞ்சம் மித்தையென்று அறிந்து அப்பியந்தரத்தில் தியாநாதி கர்மயுக்தனாய், இரண்டு சன்மத்தில் முத்தனாகிறவனே அப்பியாசி. விவகாராபேக்ஷைவிட்டு விவேகதற்பரனாகி ஏக ஜந்மத்தில் முத்தனாகிறவனே அநுபவி. விஸ்வ விகுர்தி தோன்றாமல் ஆத்மஞானத்தால், சத்தியோ முத்தியடைபவனே ஆரூடன். பின்னுஞ் சகம் மித்தை, கைவல்லியம் யாதோவென்னும் விசாரமுகத்தால் ஸ்ரீகுருவையடைந்து தத்வஞானியாய், மோக்ஷம், பெறுமவனொருவன் தேகாதிகள் அநித்தியமென்றறிந்து போகாபேக்ஷை தோன்றாமல், ஸ்ரீகுருவையடைந்து பிர்ம்மக்கியாநியாய்முத்திபெறுமவனொருவன். யாதாமொரு ஸ்ரீகுருவானவர் சிஷ்யனுக்கு உபதேசஞ்செய்யுமதுகேட்டு, ஆகஸ்மிகத்தால் ஆத்மஞானியாய் நிருவாணபதம் பெறுமவனொருவன். இப்படி விவேகவிரக்திதெய்வகதியாற்பெற்று முத்தராமவர் வேறே மூவருண்டு.

## அஷ்டகுரு.

அந்த ஸ்ரீகுருவே - சாதகரான சிஷ்யருக்கு உபதேசஞ்செய்யும் அதிகாரபேதத்தால், போதககுரு, வேதககுரு, நிசிதகுரு, காமியகுரு, சூசககுரு, வாசககுரு, கார

கசுரு, விகிதகுருவென அஷ்டபிரகாரமாவர். அவர்களில், சாஸ்திரார்த்தம் போதிக்கிறவனே போதககுரு. தத்துவதரிசகனே வேதககுரு. வசியாகருஷணாதிகளால்இகலோகத்திற் சுகமும், பரலோகத்திற் றுக்கமுங் கொடுக்கிறவனே நிசிதகுரு: சுகர்ம்மோபதேசத்தால் பரங்களில் சுகமெய்தப் பண்ணுபவனே காமியகுரு. விவேகமுகத்தால் சமையாதி சட்குணப் பிரதாயகனே சூசககுரு. விஷயம்மித்தியாதரிசநத்தால் ஆத்துமாநுராகப் பிரதாயகனேவாசககுரு. ஆத்மப்பிர்ம்மஐக்கியஞாயானப் பிரதாயகனே - காரககுரு. சம்சயநிரசநத்துவாரத்தால் நித்தியமுக்திப் பிரதாயகனே விகிதகுரு.

## சிஷ்யன்விதிவதுபசந்நத்துவம்.

இனிஅந்தச் சற்குரு சிஷ்யருடைய மத்தியில், யாதாமொரு அதிகாரி, தாபத்திரியாக்கினியால் வெதும்பிவியாகுல சித்தனாய், நான்யாரோ எனக்கிந்தச் சம்சாரம் எக்காரணத்தால் வந்ததோ, இது யாவர்முகத்தால் நிவர்த்தியாமோவென்று - விசாரித்துச் சகலபிரபுத்துவமும்விட்டுப் பத்திர புஷ்ப பலாதி சகபாணியாய், வித்தியாவிநய, வைராக்கியாதி சற்குணசம்பன்னரான, ஸ்ரீகுருவையடைந்து,

(சுலோகம்)

சைதந்யம்ஸ்ஸாஸ்வதம்சாந்தம்
வியோமாதீதம் நிரஞ்சநம்,
நாதபிந்துகளாதீதம்
தஸ்மைஸ்ரீகுரவேநம:

என்று, அஷ்டமந்திர பூர்வகமாய், பதத்துவய, கரத்துவய, புஜத்துவய, வக்ஷ, லலாடமென்னும் அஷ்டாங்கமும், நிலத்திற்படப் பிரணதனாய்ப், பின்னெழுந்து பயபக்



தியினாலே, இங்கரபாவமிகுந்து கரகமலங்கூப்பித் தனது சார்ப்பண்ணியமுங்காட்டி, குருமகிமையுங்கொண்டாடி, ஞான, வைராக்கிய, பல, ஐஸ்வரிய, கீர்த்தி, ஸ்ரீகளென்னும் சட்குண சாமக்கிரியையால் பகவானாகிய ஓ சற்குருவே! ஆயாசமில்லாமல் எந்தப்பிரகாரத்தால் எனக்கிந்தப்பவபந்தம் விடுவதென்று, விண்ணப்பஞ்செய்கிறதே சிஷ்யன் விதிவதுபசந்நத்துவமாம்.

## ஸ்ரீகுருவினுபதேசம்.

இப்படி உபசந்நனான சிஷ்யனுடைய அதிகாரம் பரீக்ஷித்துக் கிருபாவி லோசநத்தால் வீக்ஷித்து, அஞ்சாதேயென்று, அபயகரஞ் சிரசில்வைத்துச் சுருதியுக்திகளால் அவன்தேகாதி அநாத்துமபுத்தியைநேதித்து, நீயே பரப்பிரமமென்று உள்ளபடி யறிவிப்பதே ஸ்ரீகுருவினுபதேசாம்.

## உபதேசக்கிரமம்.

அந்த உபதேசகிரமத்திலே உத்தேசம், லக்ஷணம், பரீக்ஷையென்னுமூன்றும், போதப்பிரகாரமாம். அவற்றுள், தான்அநுசரித்திருக்கிற இஷ்டமானவஸ்துவினுடைய நாமமாத்திரங் கீர்த்திக்கிறதே உத்தேசம். ஆடுதோலுள்ளது பசுவென்பதுபோல அந்த வஸ்துவினுடைய அசாதாரண தர்ம்மஞ்சொல்லுவதே லக்ஷணம். லக்ஷிதமான வஸ்துவிற்கு அந்தலக்ஷணமுண்டோவில்லையோவென்று பார்ப்பதே பரீக்ஷை. அந்தவஸ்துசித்திக்கு அஷ்டபிரமாணமுண்டு.

## அஷ்டப்பிரமாணம்.

அவை, பிரத்தியக்ஷம், அநுமானம், ஆகமம், அருத்தாபத்தி, உப்மாநம், அபாவம், சம்பவம், ஐதீகமெ

ன்னும் எட்டுமாம். அவற்றுள், கடாதிதரிசநமே பிரத்தியக்ஷம். தூமத்தால் அக்கினியுண்டென்றறிவதே அநுமானம். அது பிரதிக்ஞை, ஏது, திருஷ்டாந்தமென மூன்றுவிதமாம். அவற்றுள், பர்வதத்தில் அக்கினியுண்டென்பதே பிரதிக்ஞை. தூமத்தாலென்பதே ஏது. மடைப்பளியைப்போலென்பதே திருஷ்டாந்தம். யதாதிருஷ்டார்த்தவாதியான ஆப்தவசநத்தால், நதிதீராதிகளில், பலாதிசத்பாவ ஞானமே ஆகமம். அர்த்தாபத்தியாவது, திருஷ்டார்த்தாபத்தி,சுதார்த்தா பத்தியென இரண்டாம்; அவற்றுள், பகலுண்ணாத தேவதத்தன்,தேகபீநத்துவங்கண்டு ராத்திரிபோசனம் பண்ணுவனென்றறிகிறதே திருஷ்டார்த்தாபத்தி. தேவதத்தன் கிரகத்திலில்லையென்றால்,அந்நியஸ்தானத்தி லிருப்பனென்றறிவதே சுதார்த்தாபத்தி. பசுவுக்கு தார்க்காணிப்பு மனாயென்னும் வாக்கியத்தைச் சிரவணத்தில் கேட்டவன், வநமெய்திக்கண்டவனுக்குத் தத்விஷயஞானமே உபமாநம். கடமில்லையென்றால் கடாபாவஞானமே அபாவம். சகஸ்திரசங்கியையில் சதசங்கியாஞானமே சம்பவம். இந்த வடவிருக்ஷத்தில் யக்ஷனிருப்பனென்னும் லோகவார்த்தையால் யக்ஷவிஷய ஞானமே ஐதீகம்.

## சமையிகள்கொண்டகோட்பாடு.

இந்தப்பிரமாணங்களில் சார்வாகனுக்குப்பிரத்தியக்ஷம் - க.ம். பௌத்த வைசேடிகருக்கு அநுமாநத்தோடு - உ - ம். சாங்கியருக்கு ஆகமத்தோடு - ௩ - ம். ஜைநருக்கும், நியாய யேகதேசிகளுக்கும், உபமாநத்தோடு ச - ம். பிரபாகரர்க்கு அர்த்தாபத்தியோடு - ரு - ம். பாட்டவேதாந்திகளுக்கு அபாவத்தோடு-சு - ம். புராணீகருக்குச் சம்பவ- ஐதீகங்களோடு எட்டுமாம். இனித்திருக்குதிரிசியமெனப் பதார்த்தத்துவயமுண்டு. அவற்றுள்.



திருக்குவினிடத்தில் - சுகதபேதம், சஜாதிபேதம், விஜாதிபேதமென நிராகரிக்கத்தக்கபேதத்திரயமுண்டு. அவைகட்குத்திருஷ்டாந்தம். ஒருவிருக்ஷத்திற்குப் பத்திர புஷ்ப பலாதிகளே சுகதபேதம். விருக்ஷாந்தரமே சஜாதிபேதம், பாஷாணாதியே விஜாதிபேதம். திருக்கான சத்ரூபபிரமம் ககனம்போல நிரவயவமாகையாலும், சத்துக்கு வேறொரு சத்தில்லாமையாலும், சுகதபேதம், சஜாதிபேத மில்லாதிருந்தாலும், சகத்காரண மாயையுண்டாகையால் விஜாதிபேதமுண்டெனின், சித்திரகனைவிட்டுச் சிந்திரசத்திக்கு வேறே தோன்றுவதில்லாததெப்படியோ அப்படிச் சின்மாத்திர பிரமத்தைவிட்டு, மாயைக்கு விலக்ஷணத்துவமில்லையாகையால் விஜாதிபேதமில்லையென்பதே நிச்சயம். இந்த அர்த்தத்தில், ‘‘ஏகமேவத்துதியமென்னும் பதத்திரயத்துக்கு ஐக்கிய, அவதாரணை, துவைத நிஷேதமென அர்த்தத்திரயமாகையால், அந்தக்கிரமத்தில், சுகத, சஜாதி விஜாதி பேதத்திரயமில்லை யென்பதே பிரமாணம்.

## கற்பிதத்துவயம்.

அத்தியாரோபம், அபவாதமெனக் கற்பிதத்துவயமுண்டு. அவற்றுள், உண்டான ரச்சு, சுத்தி, ஸ்தாணுவாதியில், கிரமத்தில் இல்லாத சர்ப்ப,ரசித, சோராதிகற்பிதம்போலச் சத்ரூபப்பிரமத்தில் இல்லாத மாயாப் பிரபஞ்ச கற்பனையே, அத்தியாரோபமாம். இது சர்ப்பமல்ல ரச்சுவே, இது ரசிதமல்ல சுத்தியே, இதுசோரனல்ல ஸ்தாணுவேயென்பதுபோல விசாரமுகத்தால், இது பிரபஞ்சமல்ல பிரமமென்பதே அபவாதமாம்.

## உபாயத்திரயம்.

அதத்துவியாவிருத்தி லக்ஷணை- தடஸ்தலக்ஷணை- சொரூபலக்ஷணையெனத் திருக்குரூபவஸ்து சாக்ஷாத்

காரத்துக்கு உபாயத்திரயமுண்டு; அவற்றுள், தேகாதி அநாத்துமவர்க்கங்களை யுத்தியால் நேதித்துநின்ற- ஆத்மனை அறிவிப்பதே அதத்துவியாவிருத்தி லக்ஷணையாம். விருக்ஷத்தின்மேலே சந்திரனிருப்பானென்பதுபோலப்பூதாதிசகத்காரணத்திருந்த ஆத்மனை- அறிவிப்பதே தடஸ்த லக்ஷணையாம். பிரகிருஷ்டோஷ்ணப் பிரகாசரூபமே சூரியனென்பதுபோல, ஆத்துமன் நிசரூபமறிவிப்பதே சொரூபலக்ஷணையாம்.

## ஆத்துமசொரூபலக்ஷண பஞ்சகம்.

சத்து, சித்து, ஆநந்தம், நித்தியம், பூரணமென ஆத்துமாவின் சொரூபலக்ஷணபஞ்சகமுண்டு. அவற்றுள், அறிவேன் அறியேனென்பதிலும், காமாதிவிருத்தி தோன்றுமிடத்திலும்,தோன்றாவிடத்திலும், சாக்கிராதி அவஸ்தையிலும், தனக்கொருவாதையில்லாமலுண்டென்பதே சத்துரூபமாம், சர்வாவஸ்தையிலும் விஷயங்களை இடைவிடாதறிகிறதே சித்ரூபமாம். பரமப்பிரீதியில் விஷயமாவதே ஆநந்தரூபமாம். சதோதிதமாவதே நித்தியரூபமாம். சர்வார்த்த சாதகமாகையால், சர்வசம்பந்தத்துவமே பூரணரூபமாம். சச்சிதாநந்தமே ஆத்மசொரூபமானால், சத்துஞ்சித்தும்போலச் சர்வபுத்திவிருத்தியிலும், ஆநந்தரூபத்துக்கு அபிவியக்தியுண்டாகவேண்டும். அஃதில்லாமையால் ஆநந்தம். ஆத்மசொரூபமல்லவென்றால் திருஷ்டாந்தம். உஷ்ணப் பிரகாசமான தீபப்பிரகாசமே கிரகத்தில் வியாபித்திருக்கும் உஷ்ணம் வியாப்தமாகாது.சலத்தில் உஷ்ணமே பிரகடித்திருக்கும், பிரகாசம் பிரகடிதமாகாது. காஷ்டத்தில் உஷ்ணமும், பிரகாசமும், இரண்டும் பிரகடமாயிருக்கும். அப்படியே பிரமத்தின் சத்து பாஷாணாதிகளில், அபிவியக்தியாகிறதல்லாமல் சிதாநந்தங்கள் பிரகாசி



யாது. புத்தியின் தமோகுணத்தால் அஞ்ஞாநமயமான மூடவிருத்தியிலும், ரஜோகுணத்தால் ராகமயமான குரோதவிருத்தியிலும், சத்துச் சித்திரண்டும் பிரகாசிக்கிறதல்லாமல், ஆநந்தம் பிரகாசியாது. சத்துவகுணத்தால், வைராக்கியமயமான சாந்தவிருத்தியில், சச்சிதாநந்தமென்னும் திரிரூபத்துக்கும் ஸ்புரணை காண்பிக்கும். ஆகையாலாநந்தம் ஆத்மசொரூபமாம். இந்தப்பஞ்சரூபத்துக்கும் உபாதிபேதமாவது.

## சத்துத்திரயம்.

வியாவகாரிகசத்து, பிராதிபாசிகசத்து, பாரமார்த்திகசத்து, எனச்சத்துமூன்றும். அவற்றுள்-சாக்கிரத்தில் கடாதிசத்தே வீதேககைவல்லியபரியந்தம் சுழுத்தி மூர்ச்சைமுதலான அவஸ்தையிற்றோன்றாமல், எழுந்தபொழுது முன்போலத்தோன்றுகையால், வியாவகாரிகசத்து. சுக்திகாரசித சொப்ந விஷயாதிசத்துத் தோன்றுகிறகாலத்தல்லாமல், விழித்தகாலத் தில்லாமையால், பிராதிபாசிகசத்து, சமஸ்தகற்பனைக்கும் அதிஷ்டானமாய்த் தோன்றாதடங்காதிருக்கிற பிரமசத்தே பாரமார்த்திகசத்து.

## சித்துசதுஷ்டயம்.

சீவ, ஈச்சுர, கூடஸ்த - பிரமமென்னுநான்கும் சித்துச்சதுஷ்டயமாம். இதற்கு திருஷ்டாந்தம்-சலப்பிரதிபிம்பாகாசம், மேகாகாசம், கடாவச்சின்னாகாசம், மகதாகாசமெனக்கிரமத்தில் திருஷ்டாந்தசதுஷ்டயமாம்.

## ஆநந்தாஷ்டகம்.

விஷயாநந்தம், பிரமாநந்தம், வாசநாநந்தம், முக்கியாநந்தம், நிசாநந்தம், ஆத்மாநந்தம், அத்துவைதாநந்தம், வித்தியாநந்தமென ஆநந்தம் அஷ்டபேதமாம். அவ

ற்றுள், வநிதாதிவிஷயலாபத்திற்றோன்றுவதேவிஷயாநந்தம். நித்திராகாலத்திற்றோன்றுவதே பிரமாநந்தம். நித்திரைதெளிந்துந் தெளியாவிடற்றிற்றோன்றுவதே வாசநாநந்தம். ஸ்தாநாஸ்தானமில்லாதவுபேக்ஷா புத்தியிற்றோன்றுவதே முக்கியாநந்தம். யோகாப்பியாசபலத்தால், மநோலயமானவிடத்திற்றோன்றுவதே நிசாநந்தம். பிரியமான வநிதாதி விஷயமத்தியையில் தானே பிரியாத்மகனென்றறிந்தவிடற்றிற்றோன்றுவதே, ஆத்மாநந்தம். நாமரூபப்பிரபஞ்சமெல்லாமித்தை. தானே சத்தியமென்று விவேகத்திற் றோன்றுவதே அத்வைதாநந்தம். தத்வமசியாதிவாக்கிய சங்கியமான அபரோக்ஷஞானத்திற்றோன்றுவதே வித்தியாநந்தம்.

## அபாவசதுஷ்டயம்.

பிராகபாவம், பிரத்துவம்சாபாவம், அந்நியோந்நியாபாவம், அத்தியந்தாபாவமெனப் பிரமசித்தியபதத்துட் புகாத அபாவசதுஷ்டயம் நான்கு. அவற்றுள்- மிருத்திகை முதலானதில் கடாதி முன்னில்லாததே பிராகபாவம். உண்டானகடம் பின்னில்லாததே பிரத்துவம்சாப்பாவம். கடத்திற்படமில்லை, படத்திற்கடமில்லை யென்பதே அந்நியோந்நியாபாவம். ககனகுசுமாதிகமே. அத்தியந்தாபாவமாம்.

## பரிச்சேதத்திரயம்.

காலபரிச்சேதம், தேசபரிச்சேதம், வஸ்துபரிச்சேதமெனப்பிரமபூரணபதத்துள் நிராகரிக்கத்தக்க பரிச்சேதத்திரயமுண்டு. அவற்றுள் - ஒருகாலத்துண்டு ஒருகாலத்தில்லை யென்பதே காலபரிச்சேதம். ஒருதேசத்துண்டு ஒருதேசத்தில்லையென்பதே தேசபரிச்சேதம். ஒருவஸ்துஇதுவாகும், ஒருவஸ்இதுவல்ல என்பதேவஸ்துபரிச்சேதம்.



## சீவநாமரூபவிவகாரம்.

பூர்வோக்த சித்துபேதமான சீவ, ஈச்சுராதிகளுக்கு - நாம, ரூப, விவகாரகற்பனையாவது சீவனே-விசுவ, தைஜச, பிராக்கியனென மூன்றும். அவற்றுள்-தூலசரீர வியஷ்டியபிமானி வியாவகாரிகசீவன், புத்திபிரதிபலிதசைதந்நியன், சிதாபாசன், விக்ஷேபரூபன் க்ஷேத்திரஞ்ஞன், சரீரி, பிரமாத்துரு, கர்த்துரு, போக்துரு, சமுசாரி, விஷயி, பாவாத்துமன், விஞ்ஞாநமயன், துவம்பதமுக்கியார்த்தன், முதலானவை விசுவனுக்குப் பரியாயநாமமாம். சூக்ஷமசரீரவியஷ்டியபிமானி, பிரதிபாசிகசீவன், சொப்நகற்பிதன், முதலானவை தைஜசனுக்குப் பரியாயநாமமாம். காரணசரீர வியஷ்டியபிமானி, அவித்தியோபாதிகன், முதலானவை பிராக்கியனுக்குப்பரியாயநாமமாம்.

## ஆத்துமத்திரயம்.

சீவாத்துமா, அந்தராத்துமா பரமாத்துமா வென ஆத்துமத்திரயமுண்டு, அவற்றுள் - தப்தாய பிண்டம்போலத் தேகங்கட்குள்ளே சம்பந்தித்துச் சகலசமுசாரவிவகாரமுள்ளவனே சீவாத்துமா. கமலபத்திரோதகம்போலச் சமுசாரம் பொருந்தியும் பொருந்தாதவனே அந்தராத்துமா. லோகவிவகாரத்துக்குச் சாக்ஷி சூரியனெப்படியோ அப்படிச் சீவாந்திரவிவகார சாக்ஷி கனே பரமாத்துமா.

## சமுசாரகற்பனை.

சலத்தின்சஞ்சலம், சூரியன்சஞ்சலமென்பதுபோலவும், மேகமோடச் சந்திரனோடு மென்பது போலவும், நதியிலே ஓடமோடத் தீரத்தின் விருக்ஷமோடு மென்பது போலவும், மணியின் துவாரத்திற் பிரகாசிக்கின்ற கு

ரியகிரணம், கையசைக்கும்போது அசையு மென்பது போலவும், தேகத்தின் சநநமரணம், ஆத்துமனுக்கென்பதுபோலவும், நிர்விகாராத்துமனுக்குத் தேகாதியுபாதியாலான அவஸ்தாகற்பநா சமுசாரவிவகாரமாம்.

## ஈச்சுரநாமரூபவிவகாரம்.

ஈச்சுரனே-விராட்புருஷன், இரணியகர்ப்பன். அந்தரியாமி யெனமூவராம். அவருள், தூலசரீரசமஷ்டியபிமானி ஈச்சுரன் தத்பதமுக்கியார்த்தன்,முதலானவை விராட் புருஷனுக்குப் பரியாயநாமமாம்.

லிங்கசரீர சமஷ்டியபிமானி, மகாப்பிராணன்-சூத்திராத்மன் - முதலானவை இரணியகர்ப்பனுக்குப் பரியாயநாமமாம்.

காரணசரீர சமஷ்டியபிமானி, அக்கியாநோபயிதசைதந்யன் காரணோபாதிகன், மாயோபாதிகன் -மாயாபாசகன், மாயாவயவி, ஜகத்தியோநி, ஆநந்தமயன் அக்ஷரன், அவ்வியாகிருதன், சபளப்பிரமன், சகுணப்பிரமன், பரன், பரமன், பரதேவதை, முதலானவை அந்தரியாமிக்குப் பரியாயநாமமாம்.

## அந்தாஈச்சுரன் தேகதிருஷ்டாந்தம்.

சித்திரபடமானது நாநாவர்ணங்கூடுமுன்னே வெள்ளைப்புடைவையென்றும், மேற்கஞ்சிகூழ் அநுலேபத்தால் கடிதமென்றும், மேல்நீலமஸிநாகாரத்தால் லாஞ்சிதமென்றும், மேலிதயோக்கியவர்ண பூரணத்தால் ரஞ்சிதமென்றும், சொல்லப்படும். அப்படிப் பிர்ம்மமுதல் மாயாதத்காரியாதீதமானதே சித்தென்றும், சர்வகாரணமான மாயோபாதியினால், அந்தரியாமியென்றும் அவ்வியக்தமான சூக்ஷ்மசரீர சமஷ்டியுபாதியினால்,சூத்ராத்துமனென்றும், வியக்தமான பஞ்சீகிருத பூதகாரிய



ரூப, தூலசரீர சமஷ்டியுபாதியினால், விராட்புருஷனென்றுஞ் சொல்லப்படும். பிர்ம்மத்துக்குச் சித்திரபடம் திருஷ்டாந்தமானால், அதில், சித்திரம்யாதெனில், விரிஞ்சனாதிதிரணாந்தமான சேதநபிராணிகளும், கிரியாதி அசேதந விஷயங்களுமான சடாசடரூபசகமென்றறி. பாரமார்த்திகமான சித்ரூபமொன்றில், மித்தியாத்மக பகுசேதநாசேதநரூபசகமிருக்கை யெப்படியெனில் சித்திரபடத்தி லெழுதப்பட்டு நாநாவர்ண பேதமான சீதாதிகளை நிவர்த்திசெய்வதற்குஅசமர்த்தமான வஸ்திராபாசங்களும், சீதாதிகளைப் பரிகாரஞ்செய்கிற சத்தியமான ஆதாரபடமும், ஏகாகாரமாக விருந்த போதைக்கும், சித்திரபடத்திலிருந்த கிரி, நதியாதிகள் அந்தசித்திராதாரபடத்துடன், சமானமாகாதபடியே சித்ரூபப்பிரமத்தில்,வெவ்வேறாகத் தோன்றப்பட்ட சிதாபாச சைதந்யரான வியாவகாரிகஜீவர்கள், சித்துடனே சமானமாய்த்தோற்றினும், மிருத்திகைமுதலான சடரூபங்கள் சமானமாகாததினாலே சேதநாசேதநமான சகத்து, சித்ரூபப்பிரமத்தில், கற்பிதமென்றே நிச்சயிக்கப்படும்.

## ஈச்சுரன்முக்கியகுணம்.

சர்வக்ஞத்துவம், சர்வேச்சுரத்துவம், சர்வநியந்தரத்துவம்,சர்வாந்தரியாமித்துவம், சர்வகர்த்தத்துவம்,சர்வசக்தித்துவாதிகளே ஈச்சுரனுடையமுக்கியகுணமாம்.

## ஈச்சுரன்பிரபுத்வ சாமர்த்திய குணத்திரயம்.

கர்த்ருத்துவம், அகர்த்ருத்துவம், அந்நியதாகர்த்ருத்வமென ஈச்சுரன் பிரபுத்துவ சாமர்த்தியகுணத்திரயமுண்டு.

## ஈச்சுரன்பஞ்சகிருத்தியம்.

சிருஷ்டி, திதி, சங்காரம், திரோபாவம், அநுக்கிரகமென ஈச்சுரன்பஞ்சகிருத்தியம் உண்டு ஆனால், நிரவி

காராத்துதிய பிர்ம்மசொருபனுன ஈச்சுரனிடத்தில், சிருஷ்டியாதிவியாபார வெகுகிருத்தியங்கள் எந்தப்பிரகாரத்தாலாமென்றுல், எப்படிச்சூரியன் இச்சா யத்நமில்லாமல், தன் வருஷகிரணத்தால், விருஷ்டிரூபமான சலத்தைவிட்டுப் பின்அந்த சலத்திற்றுனே பிரிதிபிம்பித்து மேகாதிகளால் அதனைமறைத்து, இமகிரணத்தால் அதனைத்தடுத்து உஷ்ணகிரணத்தால் அந்த சலத்தைத்திரும்ப வாங்கிக்கொண்டு அந்தப் பிரதிபிம்பத்தைத் தன்னுடனே கூட்டிக்கொள்ளுவன், அப்படியே ஈச்சுரனுந் தன் மாயாசக்தியுடனே கூடி சித்துப்பிரதானத்தால், நிமித்தியகாரணனுயும் சடப்பிர தானத்தால், உபாதாந காரணமாயும், புத்தியாதிகாரியங்களைச் சிருஷ்டித்துச் சீவரூபத்தாற்றுனே பிரவேசித்துக் கர்ம்மத்தால், போக்துருவென்றும், நியாமகசக்தியால் போக்கியபோக்துருக்க ளென்றும் நியமித்து ருத்திரரூபத்தால் அந்தக்காரியரூபங்களைச் சங்கரித்துப் பின் சுருதிகுருரூபத்தால் அந்தச்சீவனைத் தன்னுடனே ஐக்கியஞ்செய்துகொள்ளுவன்.

## ரூபத்துவயம்.

விபஷ்டி, சமஷ்டியென சீவ, ஈச்சுரருக்கு விபகாரவியாபகத்துவயமுண்டு. அவற்றுள். அநேகவிருக்ஷமுள்ளது ஒருவநமென்றுற்போல, அநேகசீவரெல்லாரையும், தன்னுத்துமனென்னும் அபிமானமே ஈச்சுரனுடைய சமஷ்டிரூபமாம். அந்த வநத்தில் இதுவொரு விருக்ஷமென்று வெவ்வேறே குறியிடுவது போலப் பிந்நாபிந்ந தேகத்துவாபிமானமே சீவனுடைய வியஷ்டிரூபமாம்.



## கூடஸ்தன்பரியாயநாமம்.

விசுவாதி;சீவத்திரயாதிஷ்டான சைதந்நியன்; துரியன், சுவயஞ்சத்தார்த்தன், சாக்ஷிகன், பாரமார்த்திக சீவன், பிரத்தியகாத்மன், அநுசந்தாத்துரு, அவச்சிந்ந சீவன், துவம்பதலக்ஷியார்த்தன் முதலானவை கூடஸ்தன் பரியாயநாமமாம்.

## பிரமத்தின்பரியாயநாமம்.

அந்தரியாமியாதி, ஈச்சுர திரயாதிஷ்டாத்துரு, பாமாத்துமன், பரதத்துவம், பரப்பிர்ம்மம், சர்வாதிஷ்டாத்துரு, விசுத்தசித்து, தத்பதலக்ஷியார்த்தன்; முதலானவை பிர்ம்மத்தின் பரியாயநாமமாம்.

மிருத்திகையொன்றே நாமரூபத்தால் கடாதி வெகுபேதமானுற்போலவும், சுவர்ண்ணமொன்றே வங்கிசாரம்பத்தால் கடக, மகுடாதியாபரணமானுற்போலவும், சலமொன்றே வாயுவசத்தால், பேந, புற்புத, தரங்காதி சமுதாயமானுற்போலவும், தீபமொன்றே கடத்தின் துவாரபேதத்தால், வெகுரூபமானுற்போலவும், மாருதமொன்றே வேணுரந்திரத்தால் மந்தா, மத்திம, தாரமானுற்போலவும், சுரமொன்றே - பாடுவான்குறிப்பால் நாநாராகமானுற்போலவும், ககனமொன்றே - கிரகாதியுபாதியால், அநேகமானுற்போலவும், தொனியொன்றே வாத்தியாதிபேதத்தால் அநேகமானுற்போலவும், கதலீதள நீபமொன்றே கணடத்தால், கரிதுரகாதி நாநாபேதமானுற்போலவும்; ரவியொன்றே ஜலகும்பாதிவசத்தால், நாநாபிரகாரமானுற்போலவும், இலக்கமொன்றே பிந்துபேதத்தால், தச, சத, சகஸ்திராதியானுற்போலவும், சித்தொன்றே பூர்வோக்த சீவேச்சுராதி பேதவிகாரமாய்ச்சென்று சொல்லப்படும்; இவையெல்லாந் திருக்குவிவேகம்.

## திர்சியவிவேகம்.

சந்திரனிடத்தில் அநாதிகளங்கமானதுளப்படிச் சந்திரனையாசிரயித்து அவனைமறையாமல் அவனால்விளங்குகிறதெப்படியோ அப்படியே நான்என்னை அறியேனென்னும் லோகப்பிரசித்தவிவகாரத்தால், ஆத்மனையடுத்து அவனைமறையாமல் அவனாலறிவித்துக்கொள்வதாகியும், அக்கினியின்சுடுந்தொழில், மணிமந்தராதிபிரயோகத்தால் பந்திக்கப்பட்டுத் தான் அக்கினிரூபமுமல்லாமல் அக்கினியைவிட்டுத்தோற்றுவதுஞ் செய்யாமல், ஸ்போடகாதிகாரியோதயமெப்படியோ அப்படியே பிர்ம்மசொரூபமுமல்லாமல், பிர்ம்மவிலக்ஷணமாயுந்தோன்றாமல் ஆகாசாதி காரியோதயமுண்டாக்குகிறவளாகியும், அகடிதகடநாசமர்த்தையாகியும், சர்வதத்துவங்களுக்குங் காரணமானதே திருசியரூப மாயாசத்தி.

## மாயாலக்ஷணபஞ்சகம்.

அசத்து, சடம், துக்கம், அநித்தியம், கண்டிதமென மாயாலக்ஷணபஞ்சகமுண்டு. அவற்றுள், சசசிருங்கமுதலானவை அசத்துரூபமாம். பாஷாணாதிகளே சடரூபமாம். ரஜ தமோமயமான புத்தியினுடைய குரோதமூடவிருத்தியாதிகமே துக்கரூபமாம். தோன்றிக்கெடுகிற தேகாதிகமே அநித்தியரூபமாம். காலபரிச்சேதாதிகமே, கண்டிதரூபமாம்.

## மாயாநிர்வாச்சியநவப்பிரகாரம்.

பின்ன, அபின்ன, பின்னாபின்ன, சத்து, அசத்து, சதசத்து, சர்வயவ, நிரவயவ, சர்வயவநிரவயவ, இவையல்லவென்பதே மாயாநிர்வாச்சியநவப்பிரகாரமாம்.



அந்தமாயையே - சுருதிசம்பந்தஞானம், யுக்திசம்பந்தஞானம், லோகசம்பந்தஞானமென்னும் ஞானத்திரயங்களுடனேகூடி கிரமத்தில், ககனகுசுமம்போலத்துச்சமென்றும், சுத்திகாரசிதம்போல அநிர்வாச்சியமென்றும், ஆத்மனைப்போல நித்தியமென்றுஞ் சொல்லப்படும்.

## மாயாநாமபஞ்சகம்.

தமசு, மாயை, மோகம், அவித்தை, அநுர்தமென மாயாநாமபஞ்சகமுண்டு. அவற்றிற்கு சீவசைதந்நியத்தை மறைக்கையால் தமசென்றும், சகத்ரூபமான தன்இதரதோற்றத்துக்குக் காரணமாகையால் மாயையென்றும், அப்படித்தோற்றினசகத்தில் சுத்திகாரசிதாதி விபரீதமுண்டாக்கையால் மோகமென்றும், வித்தையினிடமாய்க் கெடுகையால் அவித்தையென்றும், சத்ரூபத்துக்கு அந்நியமாகையால் அநுர்தமென்றும் பெயராம்.

## மாயாதர்மத்துவயம்.

சங்கோச, விகாசமென மாயாதர்மத்துவயமுண்டு. அவையெப்படியெனின், சித்திரபடமானது, தன்பிரசாரணையால், நாநாவித சித்திரங்காண்பித்துச் சங்கோசத்தால் அந்த நாநாசித்திரமுமறையும். அப்படியே மாயை தன் விகாசதர்ம்மத்தால் அகிலபிரஞ்சமுந் தோற்றுவித்துச் சங்கோசதர்ம்மத்தா லடங்கச்செய்யும்.

## மாயாகுணத்துவயம்.

அசுவதந்திரம், சுவதந்திரமென மாயாகுணத்துவயமுண்டு. அவற்றுள், மாயை மித்தையாகையால் சத்ரூபசைதந்நியம்விட்டுத் தானாகத்தோன்றாததே அசுவதந்திரமாம். சாக்ஷிகனுமாய், அசங்கனுமான ஆத்துமாவைச் சீவாதிப்பிரபஞ்சமயமாகப் பண்ணுவிப்பதே சுவதந்தி

ரமாம். மாயை மித்தையென்பது ககநகுசுமம்போலச் சர்வதாசூந்யமல்ல; சொப்பன தேகாதிகம்போலத்தோற்றிவிசாரிக்க இல்லாத மித்தையே மாயையென்றறி.

## மாயாவிர்த்தித்திரயம்.

விசுத்த சத்துவரூபமாயை, மலினசத்துவரூபமவித்தை, தமப்பிரதான ரூபப்பிரகிருதியென மாயாவிர்த்தித்திரயமுண்டு. அவற்றுள். மாயை சுழுத்திலயங்களிலே பிர்ம்மத்துடனே அத்தியாச ஐக்கியமாயிருந்து, பின் சாக்கிரசிருஷ்டியில் கிஞ்சித்துப் பேதாவஸ்தையாமளவில் அந்தப்பிர்ம்மசைதந்நியன் தன்னிடத்திற் பிரதிபலித்துத் தானே சர்வக்ஞத்துவாதிகுண விசிஷ்ட சைதந்நியனான ஈச்சுரனென்றும், பதிபதார்த்தமென்றும், பிரேரேகவிதுருவென்றுங், கொள்வதினால்; அந்த ஈச்சுரனுக்கு உபாதியாகி அமோக காரணியென்றும் சொல்லப்படும். அவித்தை தன்னிடத்திற் பிரதிபிம்பித்து, நாநாத்வத்தால் போக்துருக்களான பசுபதார்த்த சீவருக்கு உபாதியாகி மோககாரணியென்றும் சொல்லப்படும். பிரகிருதி போக்கியாத்மகத்துவத்தாற் பாசபதார்த்தமென்றும் குணத்திரய சாமாந்நியாவஸ்தையால் அந்த அவித்தையிற் பிரதிபிம்பித்த் சீவருடைய போகார்த்தமாய்ச் சகலகாரியமு மாகவேண்டி, ஈச்சுரன் சந்நிதானலக்ஷண வீக்ஷணமாத்திரத்தால், விரிந்து முதற் காலதத்துவமுண்டாய், மேற்காலவசத்தாற் பரிணமித்து, மகதத்துவமாம். அந்தமகதத்துவமானது; விதைத்துத்தண்ணீர்வார்க்க அங்குரமுமாகாமல், பீசநியாயமுங்காட்டாமல் உற்பிந்நாவஸ்தையையடைந்த பீசம்போலக் காரணப்பிரகிருதியுமல்லாமல், காரியகங்காரமுமல்லாமல், மித்தியாக்ஞாநநிர்விகற்ப சொரூப



த்தால், மத்தியாவஸ்தையாம். பின்னும் அந்தமகதத்துவத்திற் குணபேதமாய் மித்தியாக்ஞாந சவிகற்பசொரூபமான பிரதமாத்தியாசமென்னப்படுகிற மூலாகங்காரமுற்பத்தியாம்.

## குணத்திரயசிருஷ்டி.

சத்துவ, ரஜ, தமமெனக் குணத்திரயமுண்டு. பிரகாச, பிரவிர்த்தி, மோகமெனக் கிரமத்தில் சத்துவாதிகுணரூபமுண்டு. தைஜசம், வைகாரிகம், பூதாதிகமெனச்சத்துவாதிகுணங்களுக்குப் பரியாயநாமமாம். அவற்றுள்.

சத்துவகுணத்தில் - மநசாதி அந்தக்கரண சதுஷ்டயமும், சுரோத்திராதி ஞாநேந்திரிய பஞ்சகமுந்தோன்றும்.

ரஜோகுணத்தில் - வாக்காதிகர்ம்மேந்திரியபஞ்சகமும், பிராணாதிவாயுபஞ்சகமும உதிக்கும்.

தமோகுணத்தில் ஆகாசாதிபூதபஞ்சக முற்பத்தியாம்.

பின் பூதபஞ்சீகரண சம்மேளனத்தால் பிர்ம்மாண்டாபுவந சரீர கடாதிவிஷயங்களுண்டாம்.

அந்தமநசாதி அந்தக்கரணத்துக்குக் கிரமத்தில் விஷயங்களை, நினைப்பது, நிச்சயிப்பது, அபிமானிப்பது, அபதரிப்பது வியாபாரமாம். இதற்குச்சந்திரன், சதுர்முகன், க்ஷேத்திரக்ஞந், திரிபுராந்தகன் அதிதேவதைகளாம். இதயமேகோளகஸ்தாநம்.

அந்தச் சிரோத்திராதி ஞாநேந்திரியங்களுக்குக்கிரமத்தில், சத்தாதி விஷயங்களைக் கேட்டல், பரிசித்தல், பார்த்தல், ருசித்தல், மணங்கொள்ளுதல், வியாபாரமாம். இதற்குத் திக்கு, மாருதம், இந்திரன் வருணன், அ

ச்சுவினி அதிதேவதைகளாம். கர்ண்ணுதிகளே கோளகஸ்தானம்.

சுரோத்திராதி ஞானேந்திரியங்களுக்குப் பாகிய சத்தாதிவிஷயங்களை யறிகிறுப்போலச், செவியையங்குலியான்மூடப் பிராணவாயுசாடராக்கினியிலுள்ளசத்தக்கிரகணம் அங்கபானோத்காரமாக, சீதஸ்பரிசகிரகணம். நேத்திரத்தைமூட ஆப்பியந்தரதமோரூபகிரகணம். ஏப்பமாக ஆப்பியந்தரரசக்கிரணம். வாந்தியாக ஆப்பியந்தரகந்தக்கிரகணம். இப்படி ஆப்பியந்தரசத்தாதி விஷயக்கிரகணமுண்டு.

அந்தவாக்காதி கர்ம்மேந்திரியங்களுக்குக் கிரமத்தில்சொல்லுவது, வசனிப்பது, நடப்பது, பிடிப்பது, விடுவது, ஆநந்திப்பது வியாபாரம். இதற்கு அக்கினி, இந்திரன், ரவி, மிருத்தியு, பிரதேசன் அதிதேவதைகளாம். முகாதிகோளகஸ்தாநம்.

அந்தக்கரணஞானேந்திரிய கர்ம்மேந்திரியமென்னும்பதினுன்கும், ஆத்தியாத்மிகமாம். அவற்றின்விஷயமே ஆதிபௌதிகம். அதிதேவதையே ஆதிதெய்விகம் அந்தச்சந்திராதிதேவதைகளே விராட்புருஷன்.

அவனுடையதே தூலசரீரம். அந்தக்கரணேந்திரியாதிகமே இரணியகர்ப்பன் சூக்ஷமசரீரம். அந்தச்சரீரமே தமோரூபத்தால் அந்தரியாமிக்கு ஆவரணமாம்.

அந்தப்பிராணவாயு இதயஸ்தாநத்திலிருந்து, உசுவாச நிசுவாசம்பண்ணும்.

அபாநவாயு குதஸ்தாநத்திலிருந்து, மலமூத்திரத்தைக் கழிப்பிக்கும்.

சமாநவாயு நாபிஸ்தானத்திலிருந்து, உண்ட அந்நசாரத்தைச் சர்வாங்கத்துக்கும்பகுத்துக்கொடுக்கும்.



உதாநவாயு கண்டஸ்தாநத்திலிருந்து, வாந்திபண்ணுவிக்கும்.

வியாநவாயு சர்வாங்கத்திலு மிருந்து, தேகத்தை நிறுத்திவிக்கும். கிரமத்தில் பிராணவாயுவிற்றோன்றின நாகவாயு மெய்யை முறுக்கிக் கொட்டாவிவிடும். கூர்மவாயு விக்கலேப்பமிடும். கிரிகரவாயு தும்மலிருமலுண்டாக்கும். தேவதத்தவாயு சிரிக்கும், வசநிக்கும். தநஞ்சய வாயு துர்க்கந்தங்களை யெழுப்பிப் பிராணன்போயும் ஐந்துநாளிருந்து தேகத்தை வீங்கச்செய்து தலைவெடிக்கப்பண்ணிப்போம்.

நாகாதிவாயுவைந்தும், பாகியவாயுவென்று சொல்லப்பட்டு வாக்காதி கர்ம்மேந்திரியங்களைச் சேஷ்டிக்கிறதற்கேதுவாம். பிராணுதிவாயுவைந்தும், ஆப்பியந்தர வாயுவென்று சொல்லப்பட்டுச் சுரோத்திராதி ஞானேந்திரியங்களைச் சேஷ்டிக்கிறதற்கேதுவாம். வைரம்பன், முக்கியன், பிரபஞ்சன், அந்தரியாமி யென்னுமிந்நான்குஞ் சீவசம்பந்தவாயுக்களாய் மநசாதி யந்தக்கரணங்களைச் சேஷ்டிப்பிக்கும்.

அந்தப்பூமியாதி பஞ்சபூதங்களுக்குக் கிரமத்தில் தாரணை, பிண்டீகரணம், பாகஞ்செய்தல், உலாவல், அவகாசிப்பித்தல் வியாபாரமாம். இவைகளுக்குப்பிர்ம்மா-விஷ்ணு-ருத்திரன் - மகேச்சுரன்- சதாசிவன் - அதிதேவதைகளாம். கந்தாதியேகுணங்காளாம். அதெப்படியெனின், ஆகாசத்துக்குப் பிரிதித்தொநிரூபமானசத்தகுணம் - (௧) வாயுக்குச் சத்த, மநுஷ்ணுசீத ஸ்பரிசத்தோடு - (௨) அக்கினிக்குச் சத்த உஷ்ணஸ்பரிசம் பிரபாரூபத்தோடு-(௩) சலத்துக்குச்சத்தம், சீதஸ்பரிசம் சுவேதரூபம், மதுரரசத்தோடு(௪)- பூமிக்கு, சத்தம், க

டினஸ்பரிசம், நீலாதிவிசித்திரரூபம், மதுராதிநாநாரசம், துவிதகந்தத்தோடு (ரு.)

## திரிபுடி.

ஞாதுரு, ஞானம், ஞேயமெனத் திரபுடியுண்டு- அவற்றுள் மூலாகங்காரத்தில் பிரிதிபலிக்குஞ் சீவசைதந்நியமே ஞாதுரு. மநதிற் பிரதிபலிக்குஞ் சைதந்நியமே ஞாநம். பூதபௌதிகவிஷயங்களில் பிரதிபலிக்குஞ்சைதந்நியமே ஞேயம். அவற்றுள்.

மநமே - உச - ஆம் தத்துவம். மூலாங்காரமே - உரு-ஆம்தத்துவம். அகங்காரகதசிதாபாசசீவனே-உசு-ஆம் தத்துவம். மாயோபாதிகனான ஈச்சுரனே-உஎ-ஆம் தத்துவம். அகங்காரசீவர்க்கு அதிஷ்டானமானகூடஸ்தனே-உஅ-ஆம்தத்துவம். அந்தமாயா ஈச்சுரருக்கு அதிஷ்டானமான பிர்ம்மமே - உகூ - ஆம் தத்துவமாம்.

## பிரகிருதிகாரியோதயதுவயம்.

அவைகிரம சிருஷ்டியென்றும், யுகபத்சிருஷ்டியென்றுமிரண்டு. அவற்றுள் மூலப்பிரகிருதியில், மகத்தத்துவமும், அகமும், தன்மாத்திரபஞ்சகமுமெனச்சதப்பிரகிருதியுண்டு. அவற்றுள், பஞ்சபூதம் அதிற்பிரமாண்ட புவனசரீரகடாதி பிரபஞ்சோதயமே கிரமசிருஷ்டியாம். நிஸ்தரங்க சமுத்திரத்துள் ஏககாலத்தில், வாயுவசத்தால் விசித்திர, பேன, தரங்க, புற்புதாதிகளுதயமாபோலச் சச்சிதாநந்த பிரம்மத்தில் ஏககாலத்தில், மாயாமய நாமரூபப் பிரசாரணையே யுகபத்சிருஷ்டியாம். இந்த இரண்டுபிரகாரமும் சுருதிசித்த மாகையால், அங்கீகாரமாம். அவற்றுள்.

அதிரோகித பிர்ம்மசொரூபமான விகாரமில்லாத ஈச்சுரனால், சடப்பிரகிருதியில், சகலகாரியோதய மெப்



படியென்றால், இச்சாதிகமில்லாத சூரியனால் யத்தனாதிகமில்லாத சூரியகாந்தத்தில், அக்கினி ஜொலிக்குமாபோல ஈச்சுரனால், பிரகிருதியில் மகதாதி காரியோதயத்துக்கு விரோதமில்லை.

## மாயாகாரியோதயசதுஷ்டயம்.

விருத்தி, பரிணாமம், ஆரம்பம், விவர்த்தமென மாயாகாரியோதய சதுஷ்டயமுண்டு. அவற்றுள் படகுடீரபாவ, க்ஷீரதத்தியாகார, தந்துபட நியாய, ரச்சு சர்ப்பரூபமெனக் கிரமத்தில் திருஷ்டாந்த சதுஷ்டயமுண்டு. சத்ரூபப் பிரமத்தில், மித்தியாவஸ்து கற்பனைக்கு ரச்சு சர்ப்ப ஸ்தாணுசோர, சொப்பனேந்திரசால, கந்தர்வநகர, சுத்திகாரசித, நீலககன, மரீசிகாசல முதலானவை திருஷ்டாந்த சமூகமாம். நிர்விகார சொரூபாத்துவயனான ஆத்மனிடத்தில், மித்தியாவஸ்து கற்பிதமானால், அந்தப்பிராந்தி யாருக்குத் தோன்றினதென்றால், யாதாமொரு யோகீச்சுரனிடத்தில் சதி ரதி காங்க்ஷையென்னும் திரிவிதரூபங்களும் சொப்பனத்தில் ஏககாலத்திற் றோன்றினும், அதனால் அவனுக்கு யாதொரு ஆனியுமில்லாதது போலச் சாக்ஷிகனான, ஆத்மனிடத்திற்குணத்திரயாத்து மகப்பிரகிருதியில் பிராந்திஞாதுரு, பிராந்திஞாநம், பிராந்திஞேயமென்னும் திரிபுடிமயப்பிரபஞ்சம் ஏககாலத்திற் கற்பிதமானாலும் அந்த ஆத்மாவுக்குயாதொரு ஆனியுமில்லை.

ஈச்சுரனால் சிருஷ்டியான மாயாமய வியோமாதி பிரபஞ்சமானது, சொரூபத்தில் ஏகப்பிரகாரமாம்.

## விஷயத்திரயம்.

அதனிடத்தில் சீவபுத்தி கற்பிதமான, போக்கியத்வரூபமே பிரீதிவிஷயம். துவேஷவிஷயம், உபேக்ஷா

விஷயமெனத் திரிவிதமுண்டு. அவற்றுள், வநிதாதி விஷயமே பிரீதிவிஷயமாம். வியாக்கிராதி விஷயமே துவேஷ விஷயமாம். வீதித்திரணாதிகமே உபேக்ஷாவிஷயமாம். அந்த விஷயமொன்றில் ஈச்சுர நிர்ம்மிதமானஏகாகாரமும், சிவகற்பிதமான அநேகாகாரமுமானதற்குத் திருஷ்டாந்தமாம். ஈச்சுரனால் நிர்மிதமான ரத்நிவஸ்து தானொரு பிரகாரமா யிருக்கும்போதும், போக்துருக்களுடைய புத்தியுத்தி கற்பித நாநா விதத்தால் ரத்தினந்தன்னைப் பெற்றவர்களுக்குப் பிரீதிவிஷயமாம்; அதனைப் பெறுதவர்களுக்குத் துவேஷவிஷயமாம். விரத்தனுக்கு உபேக்ஷாவிஷயமாம். இதனை அபிவியக்தஞ் செய்யவேண்டி வேறுமொரு திருஷ்டாந்தங் காட்டுகின்றார்; அஃதியாதெனின்.

ஒருஸ்திரியின் மாம்சமயமான ரூபம் ஏகப்பிரகாரமாயிருக்க, அந்தஸ்திரி போக்துருக்களின் புத்தி கற்பிதாகாரத்தால், பிதாவுக்குப் புத்திரியென்றும், பக்தாவுக்கு வநிதையென்றும், சுதனுக்கு மாதாவென்றும், வெகுவித மானற்போல, சர்வவிஷயமும் இப்படி ஏகாநேகப்பிரகாரமாய் ஈச்சுரநிர்மிதமான, பிரபஞ்சமே பாதகமில்லையாகியும், குரு சாஸ்திரரூபத்தால் மோக்ஷசாதனமாகியும் தன்னால் விடுதற்கு அசக்கியமான தாகையால், அதை அங்ஙனநிறுத்திச் சிவகற்பித பிரப்ஞ்சமே அநேகா காரமானதனால், மோக்ஷாபேக்ஷிதராலே நிவர்த்திபண்ணுதற்கு யோக்கியமானது.

பிரபஞ்சத்துவயம்.

சாஸ்திரப்பிரப்ஞ்சம், அசாஸ்திரப்பிரபஞ்சமெனப்பிரபஞ்சத்துவயமுண்டு. அவற்றுள், ஆத்துமப் பிர்ம்மவிசாரமே சாஸ்திரப் பிரபஞ்சமாம். அது ஞானாதி



சாதனத்தால் ஆத்துமசாக்ஷாத்காரமானதற்குமேல்விடத்தக்கது. அசாஸ்திரப் பிரபஞ்சம் தீவரமென்றும் மந்தமென்றும் இருவகைப்படும். அவற்றுள், தீவரப்பிரபஞ்சமாவது காமக்குரோதாதிகமாம். மந்தப்பிரபஞ்சமாவது மனோகற்பித சாதிகாமாதிகமாம். இந்த அசாஸ்திரப்பிரபஞ்சம் ஆத்மசாக்ஷாத் காரத்துக்கு விரோதமாகையால், ஞானாப்பியாசத்துக்கு முன்னே விடத்தக்கது. இந்த உபயபிரபஞ்சமும், ஆத்ம சாக்ஷாத்காரமானதற்குமேல் மோக்ஷசித்தியாய்ச் சர்வதா விடத்தக்கதென்பதே ரகசியார்த்தமாம்.

உபாதித்திரயம்.

அவச்சிந்நோபாதி, பிரதிபிம்போபாதி, அத்தியாசோபாதியென உபாதித்திரயமுண்டு. அவற்றுள், பிரத்தியெகாத்துமனுக்குச் சுழுத்திருபாவித்தையே அவச்சிந்நோபாதியாம். தற்காரியமான புத்தியில் அந்த ஆத்துமன் பிரதிபலித்திருப்பதேபிரதிபிம்போபாதியாம். அந்தப் புத்திகதமாய்ச் சுகதுக்காதிகளை அந்த ஆத்துமன் புசிக்கிறுப்போ லிருக்கிறதே அத்தியாசோ பாதியாம்.

அத்தியாசசதுஷ்டயம்.

அதுவல்லாததை அதுவென்னும் புத்தியே சுத்திகாரசித திருஷ்டாந்தராத்தியாசலக்ஷணம். அந்த அத்தியாசமே மித்தியாத்தியாசம், இதராத்தியாசம், இதரேதராத்தியாசம், சத்தியாத்தி யாசமெனச் சதுர்விதமாம். அவை அக்கினிசம்பந்தத்தாற் ஜலத்துக்கு உஷ்ணமாவதுபோலப் பிரத்தியெகாத்துமன் சந்நிதியிற்கிரமத்தில், நடமாடுவன, பார்ப்பன, நினைப்பன, அறிவன சத்திகளுண்டாகிய தூலசரீரமே மித்தியாத்தியாசம். இந்திரியவர்க்கமே யிதராத்தியாசம். அந்தக்கரணமே யித

ரோதராத்தியாசம். மூலவாங்காரமே சத்தியாத்தியாசம். அகமென்பதிற் பிரத்தி யேகாத்துமா கங்காரமேரச்சு சர்ப்ப மென்னுமாப்போல, நிருபாதிகாத்தியாசம். அகங்கர்த்தா வென்பதில் படிகமணிக்கொத்த அகங்காரதர்ம்மாத்துமருக்கே சோபாதிகாத்தியாசம் இச்சாம்மியகமென்பதில், அந்தக் கரணதர்ம்மாத்துமருக்கே பிராவக ஜல பதங்கப் பிரதிபிம்பம்போலத்*தத்தர்ம்மாத்தியாசம். குடும்பாத்மருக்கே யகமென்பதில் புத்திர களத்திராதிகளுக்கே ஓடத்திலிருந்த விவகாரம்போலச் சம்பந்தமாத்திராத்தியாசம். இந்த அத்தியாசத்தால், நிர்விகாரனென ஆத்மனுக்கே சமுசாரகற்பனையாம்.

## பஞ்சாவஸ்தை.

சாக்கிர, சொப்பன, சுழுத்தி, துரியம், துரியாதீதமெனப் பஞ்சாவஸ்தையுண்டு. அவற்றுள், பஞ்சபூத, தசேந்திரிய, பிராணாதிவாயுபஞ்சக, அந்தக்கரண சதுஷ்டயமென்னுஞ் சதுர்விம்சதி தத்துவாத்துமகமான தூல சரீரத்தில், சத்துவகுண, அகாராக்ஷரவிஷ்ணு அதிதேவதை லோசனஸ்தானம்.

இதயகமல அஷ்டதளகத விசுவசீவனும் விராட்சகிதனென ஈச்சுரனும் ஏகமாய் வநிதாதி சமஸ்தவிஷயபோகமுஞ் சகல கரண சாமக்கிரியையால் அநுபவிப்பதே சாக்கிராவஸ்தை.

அந்த-(உக)-தத்துவத்தில்-தூலபூதம்(ரு.)சித்தமும் ஆங்காரமுமாகிய (உ)ம். நீக்கிநின்ற-(ἱள)-தத்துவமும், சூக்ஷமதனுவில் ரஜோகுண உகாராக்ஷர பிர்ம்மன் அதிதேவதை. கண்டஸ்தானம்.

இதயகமல கர்ணிகாதி தைஜசசீவனும், சூத்திராத்தும சகிதனென ஈச்சுரனும் ஏகமாய்ச் சாக்கிர வாசனா



போகத்தை மனமென்னுங் கரணத்தால் அநுபவிப்பதே சொப்பனாவஸ்தை.

பறந்துமேயப்பட்ட குஞ்சுகளெல்லா வற்றையுந் தன்பக்ஷத்துள் அடக்கிக்கொண்டு, நித்திரைசெய்யும் பதாயுத பக்ஷியைப்போலச், சமஸ்தகாரியமும் உட்கொண்டுதற்சமஸ்கார சகிதமாய், ஆத்மாசிரயத்தில் நிரவஸ்தையா யிருக்கப்பட்ட, பிரகிருதிரூபமான காரணதேகத்தில் தமோகுண மகாராக்ஷரருத்திரன் அதிதேவதை இதயஸ்தானம். தத்கமலகர்ணிகாக்கிரமத்தியகதி பிராக்கியசீவனும், அந்தரியாமி சகிதனென ஈச்சுரனும் ஏகமாய்ப், பிர்ம்மாநந்த விஷயபோகத்தை மாயாவிருத்தியென்னுஞ் சூக்ஷமகரணத்தால் அநுபவிப்பதே சுழுத்தியவஸ்தை.

இந்தச் சாக்கிராதி அவஸ்தைக்கு அவஸ்தாத்திரயம், தாமத்திரயம், புரத்திரயம்,ஸ்தானத்திரய மெனபபரியாயநாமங்களுண்டு.

அந்தச் சாக்கிரத்தில் தற்கமலமழிந்து, மனோவியாபாரமழிந்து, பரமாத்தும சிந்தனைசெய்வதே துரியாவஸ்தை.

அந்தத் துரியாவஸ்தையில், ஆத்துமனிடத்தில் மனோமக்நமாயிருப்பதே துரியாதீதாவஸ்தை. இந்த அவஸ்தைகளில், ஸ்தாபரங்களுக்குச் சுழுத்தியும், பசுக்களுக்குச் சொப்பனஞ்சுழுத்தி யிரண்டும், தேவர்களுக்குச் சாக்கிரமும், மனிதருக்கு அவஸ்தாத்திரயமும், உன்மத்தருக்குத் துரியமும், யோகிகளுக்குத் துரியாதீதமுமாம். அவற்றுள். முதன்மூன்றவஸ்தையும் மனிதருக்குத் தன்னிலிருந்து தானேதோன்றிச் சமுசாரகத்துவமாம். மற்றய விரண்டவஸ்தையும், யோகாப்பியாசபல

த்தால் பின்னும், மோக்ஷசாதநமா யிருக்கும். அந்த அவஸ்தைகளொன்றினி லொன்றில்லாமையாலும், காலதேசாதி நியமத்தில் தோன்றுவ தில்லாமையாலும், மித்தியாபூதமாம். அவற்றுள், அநுசூதனயிடைவிடாதறிகிற நிசதுரியனான ஆத்மனே சத்தியனும். அந்தச் சாக்கிர சொப்பநங்களில்; அறிவுண்டென்பது பிரசித்தம். சுழுத்தியி லறிவுண்டென்பதற்கு எழுந்திருந்தகாலத்தில், நானென்றுமறியாமல் நித்திரை பண்ணினேன்சுகத்திலே நித்திரைபண்ணினேனென்றுசொல்ல என்னகாரணத்தாலில்லையெனின், ஒருவஸ்துவை எடுப்பதற்குக் கூபத்தில்முழுகினவனுக்கு அந்த வஸ்து உண்டில்லையென்பதை யங்கிருந்துவெளியேபுறப்பட்டாலல்லது சொல்லுவதற்குக் கூடாததெப்படியோ, அப்படிச் சுழுத்தியில் அறிவுண்டானாலும், காலகர்ம்ம சமீரணவசத்தால் எழுந்திருந்து கரணசககாரியானலல்லது தானறிந்து சொல்வதற்குக் கூடாது. ஆகையால் சர்வ்வாவஸ்தைக்குஞ் சாக்ஷிகனான ஆத்மனுக்கே சச்சிதாநந்த சுவயம்பிரகாச ரூபத்துவம் அநுபவசித்தம்.

## கோசபஞ்சகம்.

அந்நமயம், பிராணமயம், மநோமயம், விக்ஞாநமயம், ஆநந்தமயமெனப் பஞ்சகோசமுண்டு. அவற்றுள், பிதா, மாதா, சுக்கில சோணிதத்தாலான தூலசரீரமே அந்நமயகோசமாம். சூக்ஷுமதநுவில், பிராணவாயு, கர்ம்மேந்திரியங்கள் கூடிப்பிராணமய கோசமாம். மநமும் ஞானேந்திரியமுங் கூடிமநோமயகோசமாம். பிரத்தியெகாத்ம சைதந்நியசாயையுடனேகூடி லோகாந்த குந்தம் போலிருந்த அகங்காரமும், ஞானேந்திரியங்களுங் கூடி விக்ஞாநமயகோசமாம். காரணதேகரூபமான அவித்



தையும், சாக்கிரத்தில் வநிதாதி விஷயதரிசந சாமீப்பிய சம்போகங்களால், கிரமத்திலுண்டான பிரியம், மோதம், பிரமோதமென்னுந் திரிவிதமுங்கூடி ஆநந்தமய கோசமாய். விக்ஞாநமய கோசரூபமான அகங்காரமே, ஆத்மாவென்பர். அறிவில்லாராகிய விவேகசூனியர். அகமென்னுந் தம்மநுபவத்தால் ஆத்துமாவென்றுஞ்சொல்லுவர். அதற்கு நீலோற்பலமென்னு மிடத்தில் நீலகுண விசேஷணத்துடனே விசேஷியமான வுற்பலமும் வேத்தியமாவது போலத் தேகோகமென்னு மிடத்தில், தூலதநுவினுடனே கூடிச்சுரோதாகமென்னுமிடத்தில் இந்திரியங்களுடனே கூடி, ஞாதாக மென்னுமிடத்தில் அந்தக் கரணங்களுடனேகூடி, பிரத்தியேகாத்துமனுக்குவேத்தியமாம். அதனல் அகங்கார மாத்துமாவல்ல. ஆனல், அசேதநா கங்காரத்துக்குப் பாகியாப்பியந்தரவிஷயங்களை யறிவதெப்படியெனின்; காந்தக்கல்லின் சந்நிதானத்தில், ஊசிசேஷ்டிக்கிறது போலவும், வெய்யிலேபிடித்த கண்ணாடியினுள் மனையிருள் வெளியாவதுபோலவும், பிரத்தியேகாத்துமன் சந்நிதானத்தில், சைதந்நிய பிரதிபிம்பந் தன்னிடத்தி லிருக்கையால் அந்தச் சடமானவகங்காரமேபாகிய விஷயத்தி லறிவுடனே கூடிச் சாக்கிரசொப்பனத்தில், சஞ்சரித்துச் சுழுத்தியில் அடங்கும். மற்றப் பிரபஞ்சத்துக்கு உபமானம். அகங்கார லயாவஸ்தாத்மகமான, சுழுத்தியுள் அவித்தையென்னும், உண்மனைச்சுவரையும், நித்திரையென்னுங் கபாடத்தையும், நிஷ்களரூபமான தன்னையுந்தானே பிரகாசித்திருப்பதே பிரத்தியேகாத்தும சோதியெனப்படும். பின்காலகர்ம்மசமீரணப் பிரேரகத்துவத்தால், காமசமான நித்திராகபாடந் திறக்கப் பின்அந்தஅவித்தையின் பிரதமாவஸ்தாத்மக தத்துவமென்னும், வாசற்படி

யிலிருந்த சாத்துவிகமான அகங்காரமென்னும் படிகமணி அந்தப் பிரத்தியேகாத்மப் பிரதீபப் பிரதிபிம்பகற்பிதமாய், முன்போலச் சீவனென்பித்துக் கொண்டு சொப்பனமான நடுமனையும் விளக்கி, பின் இந்திரியங்களென்னும், கவாட்சிவாசல்களாற் புறப்பட்டுச் சாக்கிராவஸ்தையான பாகியமுற்றத்தையும், பிரகாசிப்பிக்கும். பின்காலகர்ம்ம சமீரண பிரேரகத்துவத்தால், நித்ராகபாட மூடினவுடனே அந்த அகங்கார மென்னும் படிகமணி தனக்குக் காரணமான அவித்தையு ளடங்கலாற் சாக்கிர, சொப்பனமென்னும், பாகியமுற்ற நடுமனையிரண்டும் அந்தகாரமயமாய் அந்த அகங்காரமணியிற் பிரதிபலித்திருந்த, சித்திப்பிரகாசந் தனக்கு மூலபூதமான. பிரத்தியேகாத்மகப் பிரதீபத்தில் ஐக்கியமாம்.

இப்படிச்சாக்கிராதி அவஸ்தாத்திரயங்களில்; அகங்காரத்தின் பாவாபாவங்களை, அவிகாரனாய் அறியுமாத்துமனொருவன் வேறேயிருக்கையில் அகம் ஆத்துமனல்ல வென்பதே சித்தம்.

பாகியவிஷயத்துக்கு ஆத்துமனாய்ப் பிரத்தியேகாத்துமனுக்கு வேத்திய மாகையால், சடாசடரூபம் தர்ப்பணத்தின் பின்புறம்; முன்புறமும் போலப் பிரகாசாப்பிரகாசாத்துமகமான, அகங்காரத்துக்குத் தேகம். சிற்சாயாப் பிரத்தியேகாத்துமக னென்னும் இந்த மூன்றினுடனே சம்பந்தமுண்டு. அவற்றுள்.

அகமாத்துமா வென்பதனால், சிற்பிரதி பிம்பயுக்தமான, அகங்கார சம்பந்தத்தால், தூலதேகத்துக்கும் உஷ்ணாதிகளை யறிகிறதே கர்ம்மசநிதமாகிய கர்ம்மசமெனப்படும். அகஞ்சாநாமி யென்பதனாற்; சிற்சாயாவக



ங்கார சம்பந்தமே சிருஷ்டிதொடங்கி, மோக்ஷபரியந்தங்கெடாதாகையால் சகசமெனப்படும். அகங்க ரோமியென்பதனால் அகங்கனான பிரத்தியேகாத்துமாகாங்காரசம்பந்தமே, பிராந்தி சங்நியமெனப்படும். இவைமுதலானவெல்லாந் திர்சியவிவேகம்.

## சீவசப்தாவஸ்தை.

அஞ்ஞானம், ஆவரணம், விக்ஷேபம், பரோக்ஷஞானம், அபரோக்ஷஞானம், சோகநிவர்த்தி, நிரங்குசதிர்ப்தியெனச் சீவசப்தாவஸ்தையுண்டு. அவற்றுள் சமுசார சகத்திராணனான சிதாபாசசீவன் சுருதிவிசாரத்துக்குமுன் தன்னிஜரூபமான சுவயம்பிரகாச பிரத்தியேகாத்துமனை அறியாதிருப்பதே அஞ்ஞானமாம். பின் ஒவ்வொருவேளை சிதாத்மப்பிரசங்கம் வந்தவிடத்தில் பிரத்தியேகாத்துமனில்லை; அவனிருந்தால் தோன்றானோ வென்னும் இந்தவுபயவித சந்தேகமே அந்த அஞ்ஞான காரியமான ஆவரணமாம். பின், தானே கர்ம்மகர்த்துரு; தானே கர்ம்மபல போக்துருவென்று எண்ணுவதே விக்ஷேபமாம். பின் ஆத்துமன் அஸ்தித்துவஞ்சொல்லுகிற சுருதிகுருவாக்கிய வசத்தால், பிரத்தியேகாத்துமன் உண்டென்று தெளிவதே முதலாவது சத்தாவரண நிவர்த்தகமான பரோக்ஷஞானமாம். பின்நீயே பிர்ம்மமென்றுசொல்லும் வேதவாக்கியவிசாரப் பிரவாகவசத்தால், பிரத்தியேகாத்துமன் நானென்றறிவதே இரண்டாவதாகிய பானுவரண நிவர்த்தகமான அபரோக்ஷ ஞானமாம். பிரத்தியேகாத்துமன் சாக்ஷாத்கார மானதற்குமேல் நான்கர்ம்மகர்த்துருகர்ம்மபலபோக்துருவென்னுஞ் சுவயரூப துக்கபரித்தியாகமே சோகநிவர்த்தியாம். செய்யத்தக்க கிருத்தியமெல்லாஞ் செய்யப்பட்டது. எய

தத்தக்க பலமெல்லாம் எய்தப்பட்ட தென்னுஞ் சகசப
ரிதுஷ்டி யுண்டாயிருப்பதே நிரங்குசதிர்ப்தியாம்.
சோகநிவர்த்தி நிரங்குசதிர்ப்தியென்னும், இரண்
டவஸ்தையும் அபரோக்ஷ ஞானபலமாம். சுயம்பிரகா
சசித்ரூபனான ஆத்மனுக்கு நித்தியாபரோக்ஷத்துவமு
ண்டென்கையால், அவனுள் அஞ்ஞாநாதி சத்தாவஸ்
தைகூட அறியாததோவென்றால், திருஷ்டாந்தம் தச
புருஷ ரொன்றாகக்கூடி நதியைக்கடந்துபோய்த் தம்
மைப்பராமரிக்குஞ் சமயத்தில், அவ்ரில் நவசங்கியாபு
ருஷரை யெதிரிட்டெண்ணித் திரிவா னொருபுருஷன்
தன்னைத் தசமனென்றறியாததே அஞ்ஞானமாம். பின்
பு தசமனில்லை அவனிருந்தால் தோன்றானேவென்னு
ம் உபயப்பிராந்தியே அஞ்ஞாந காரியமான ஆவரண
மாம். பின்தசமன் நதியின் மிருதனானா னென்பதே வி
க்ஷேபம்.பின்வேறொரு ஆப்தவசனத்தால்தசமனைச்சுவ
ர்க்கம்போ லுண்டென்றறிவதே அந்தத் தசமனில்லை
யென்னு முதல் ஆவரணத்துக்கு விரோதமான பரோ
க்ஷஞானமாம். பின்னவசங்கியா புருஷருடனே கூட்டிக்
கிரமத்திலெண்ணி நீயே தசமனென்று தெளிவிக்கத்
தானே தன்னைச்சாக்ஷாத்காரமாகஅறிவதே தசமன்றோ
ன்றானே வென்கின்ற இரண்டா மாவரணத்துக்கு வி
ரோதமான அபரோக்ஷஞானமாம். பின்தசமன் மிருத
துக்கம்விடுவதே சோகநிவர்த்தியாம் பின்னிஜஸ்திதியா
யிருப்பதே நிரங்குசதிர்ப்தி.

## வேதவாகிக்கியத்திரயம்.

விதிவாக்கியம், நிஷேதவாக்கியம், சித்தார்த்தபோ
தவாக்கியமெனத் திரிவிதமுண்டு, அவற்றுள். யக்கியா
திசெய்ய வேண்டுமென்பதே விதிவாக்கியமாம். சுரா
பானாதி செய்யக்கூடாதென்பதே நிஷேத வாக்கியமாம்



விதிநிஷேத சூனியமாய்ப் பிர்ம்மாத்தும ஐக்கியவ
ஸ்து ரூபமாத்திரம் போதிப்பதே சித்தார்த்தபோதவா
க்கியமாம்.

## மகாவாகிக்கியம்.

அந்தச்சித்தார்த்த போதவாக்கியம், இருக்கு, எசுர்
சாம, அதர்வணமென்னும் நான்கு வேதங்களிலும்
கிரமத்தில், பிரதிபாதிக்கப்பட்ட (பிரக்கியானபிர்ம்ம,)
(அகம்பிரமாஸ்மி,) (தத்துவம்சி,) (அயமாத்துமா பிர்ம்
மமென) நான்குமகா வாக்கியமுண்டு. அவற்றுள், முக்
கியமானதத் துவம். சி மகாவாக்கியத்துக்கு தத் துவம்
அசி யெனப் பதத்திரயமுண்டு. அவற்றிற்கு, பிர்ம்ம,ஆ
த்தும, ஐக்கமென்று கிரமத்தில் பதத்திரயார்த்தமுண்
டு. பின்னபதபதார்த்த வாக்கியங்களுக்குச் சாமானாதி
கரணசம்பந்தம், விசேஷண விசேஷியசம்பந்தம், லக்ஷி
யலக்ஷண சம்பந்தமெனக் கிரமத்தில் சம்மந்தத் திரய
முண்டு. பதபதார்த்தங்களுக்கு வாச்சியார்த்தம், லக்ஷி
யார்த்தமென அர்த்தத்துவயமுண்டு. அவற்றுள், பூர்
வோக்த தூலாதி தநுத்திரயமுண்டு. சமஷ்டிரூபரான
விராட்புருஷன் இரணியகர்ப்பன், அந்தரியாமி யென்
னும் ஈச்சுரர்களும், பிர்ம்மமுங்கூடித் தப்தாயபிண்டம்
போல ஏகாகாரமாகக்காண்பதே, தத்பதத்துக்கு வாச்
சியார்த்தமென்றும், முக்கியார்த்தமென்றும் அபிதார்
த்தமென்றுஞ் சொல்லப்படும். தநுத்திரய வியஷ்டிரூ
பரான விசுவ-தைஜச- பிராக்கியசீவரூபமும். பிரத்தி
யேகாத்துமனுங்கூடித் தப்தாயபிண்டம்போலஏகாகார
மாகக் காண்பதே துவம்பதத்துக்கு வாச்சியார்த்தமெ
ன்றும், முக்கியார்த்தமென்றும், அபிதார்த்தமென்றுஞ்
சொல்லப்படும்.

விராட்புருஷாதிகளை வேறுபடுத்தின நிருபாதிக பிர்ம்மமே தத்பதத்துக்கு லக்ஷியார்த்தமென்றும் சோதித சுத்ததத்பதார்த்தமென்றும், சொல்லப்படும்.

விசுவாதிகளை வேறுபடுத்தின நிருபாதிகப் பிரத்தியேகாத்துமனே துவம்பதத்துக்கு லக்ஷியார்த்தமென்றும், சோதித சுத்த துவம் பதார்த்தமென்றுஞ்சொல்லப்படும்.

அந்த லக்ஷணவாக்கியமாவது ஜகர்லக்ஷணை - அஜகர்லக்ஷணை-ஜகதஜகர்லக்ஷணையெனத்திரிவிதமுண்டு; அவற்றிற்குக் கங்காயாங்கோஷப் பிரதிவசந்தி. குந்தாப்பிரவசந்தி சோயங் தேவதத்தகா எனக்கிரமத்திலுதாகரணத் திரயமுண்டு. அவற்றுள்.

கங்காயாங் கோஷப்பிரதிவசந்திக்கு, அர்த்தம்-கங்காசத்தம் பிரவாகரூபமான தன்முக்கியார்த்தகோஷம், இடைச்சேரிக்காசிரய மாகாமையால், அதைவிட்டு அதன்தீரத்தைப்பற்றும். இதுஜகர்லக்ஷணை.

குந்தாப்பிரவசந்திக்கு அர்த்தம் - குந்தசப்தம்தன் முக்கியார்த்தத்தை விடாமல், குந்ததாரிகளைப்பற்றும். இது அஜகர்லக்ஷணை.

சோயந்தேவதத்தகா என்றது சகாவென்னுஞ் சப்தம் பூதகாலதேச வயோவிசிஷ்டனை, தேவதத்தனைச்சொல்லும். அயமென்னுஞ்சப்தம், வர்த்தமானகாலதேச வயோவிசிஷ்டனை தேவதத்தனைச்சொல்லும். இந்தவுபய விரோததர்ம்மமுள்ள, பதார்த்தங்களுக்கு ஐக்கியங்கூடாமையால், அந்தவுப்பயபதார்த்தத்திலுள்ள விரோததர்ம்மாங்கிசம் விட்டு அவிரோத தர்ம்மாங்கிசமான தேவதத்தனைமாத்திரமே அங்கீகரிக்கப் பின் அவனேயிவன் இவனேயவனென்றிப்படித்தாதாத்மியமா



மென்று சொல்லுவதே ஜகதஜகர் லக்ஷணையென்றும், அர்த்தலக்ஷணையென்றும், பாகத்தியாக லக்ஷணையென்றும், பரியாயநாம முள்ளதாய், அசியென்னும்பதத்துக்கு, உதாகரணமாய், இதுவொன்றே சொல்லுதற்கு யோக்கியமாம். அதெப்படியென்றால், தத்தென்னும் பதம், வாச்சியார்த்தமான, சர்வக்ஞத்துவாதி குணவிசிஷ்டனான பரோக்ஷனான ஈச்சுரனையே சொல்லும். துவம் என்னும்பதம் வாச்சியார்த்தமான கிஞ்சித்துவாதி ஈசகுணவிசிஷ்டனான அபரோக்ஷனானசிதாபாசஜீவனையேசொல்லும். இந்தவுபயவிரோததர்ம்மமுள்ள பதார்த்தங்களுக்கு, ஏகத்துவங்கூடாமையால், அசியென்னும்பதம், அந்த வுபயபதார்த்தகதபரோக்ஷத்துவ, அபரோக்ஷத்துவாதி விரோததர்ம்மாங்கிசம்விட்டு, அவிரோததர்மாங்கிசமாகிய சைதன்யமாத்திரமானலக்ஷியார்த்தமாகிய பிர்ம்ம - கூடஸ்தனையங்கீகரிக்க, அதுவேயிது இதுவேயது வென்றிப்படித் தாதாத்மியகஞ்சொல்லும். பின், அந்தவுபயலக்ஷியார்த்தங்களில், பரோக்ஷத்துவ அபரோக்ஷத்துவாதிகளை, அவித்தியாகற்பிதமென்று போதிப்பதே சபலமாய ஆத்துமா அகண்டாகாசபோதமாத்திரசித்தேயென்பது வாக்கியார்த்தம்.

## சுருதியுக்தவாக்கியம்.

தத் துவம சிவாக்கியத்தால், பிரத்தியேகாத்ம பரமாத்மருக்கு ஏகத்துவ மாகையால், கடாதிவுபாதிநேதித்து, ஆகாசமொன்றென்பதுபோலவும், ராமச்சந்திரனை மநுஷத்துவம் விடுவித்து, நீயேவிஷ்ணுவென்பதுபோலவும், கர்ன்னனைவியாதபாவம் விடுவித்து, நீயே குந்திபுத்திரனென்பதுபோலவும், தசமன்மரணதுக்கம் விடுவித்து நீயேதசமனென்பதுபோலவும், சுபா

வசித்தார்த்த மல்லாமல் ஒருபுருஷனுக்கே சுவர்க்கமுண்டென்னும் வாக்கியம்போல அபேக்ஷையுண்டாக்குகிற அர்த்தவாதமென்றும், பிரதிமைதேவதாரூபமென்னும் வாக்கியம்போல உபாசநாபரமென்றும், மநுஷனைத்தேவேந்திரனென்னும் வாக்கியம்போல ஸ்துதிபரமென்றும், ஆனையரசனென்னும் வாக்கியம்போல உபசாரமென்றும், அக்கினிமாணவகனென்னும்வாக்கியம்போலக்குணசாதிரிசியமென்றும், இது கோவின்தேகமென்னும் வாக்கியம்போல ஜாதிவியக்திபரமென்றும், கடம் மிருத்திகைக்கு அநந்நியமென்னும் வாக்கியம்போலக்காரியகாரண மென்றும், நீலோற்பலமென்னும் வாக்கியம்போலக்குணகுணித்துவமென்றும், சீரந்த திக்குப் பேதமென்னும்வாக்கியம்போல விகாரமென்றும், வாரிகணங்களுக் கேகமென்னும்வாக்கியம்போல அங்கிசாங்கிசமென்றும், பிம்பப்பிரதிபிம்பங்களுக்கு ஐக்கியமென்னும் வாக்கியம்போலப் பிம்பப்பிரதிபிம்பவாதமென்றும், வெகுவிதத்தால் இப்படிப்பேதபரமாய்விகற்பித்துச் சொல்வனசுருதி விரோதமாம்.

## முத்திசம்சயநிரசனம்.

சகல பிரபஞ்சத்துக்கும் மித்தையாத்துவஞ் சொல்லும் வேதாந்தபக்ஷத்துள், சுருதிவிசாரத்தால் சத்தியமான முத்தியெப்படியாமென்றால், பிராந்தியானசொப்பன வனிதா சம்போகத்தில் சத்தியமாகவீரியம்விடுவது போலவும், சிலாகற்பிதபைரவாதி தேவதாசேவையில், சத்தியமானசம்பத்தாதி சித்திபோலவும், யதார்த்தமல்லாத தர்ப்பணப் பிரதிபிம்பாதி களிற், சத்தியமானமுகலாவண்ணியாதி திர்ஷ்டமாவதுபோலவும். பிரபஞ்சத்தில் மகசுருதிவிசாரத்தால் பரமார்த்தமானமுத்தி சித்தம்.



## முத்திவிக்நத்திரயம்.

அஞ்ஞாநம், சமுசயம், விபரீதமெனமுத்திவிக்நத்திரயமுண்டு. அவற்றுள் நான்பிர்ம்மமல்ல வென்பதே அஞ்ஞாகநம். நான்பிர்ம்மமாமோ அல்லவோ வென்பதே சம்சயம். நான்பிர்ம்ம மானாலும் சுருதியுத்தி யால் முன் சீவபாவமெனக் கிருக்கின்ற தென்கிறதே விபரீதம்.

## அஞ்ஞாநாதிகளுக்குவிரோதத்திரயம்.

சிரவண, மநந, நிதித்தியாசனமெனக் கிரமத்தில் அந்த அஞ்ஞாநாதிகளுக்கு விரோதத்திரயமுண்டு. அவற்றுள்சுருதிவிசாரத்தால்சூதகாதிகளில்திடபுத்தியாவதெப்படியோ, அப்படிப் பிரத்தியேகாத்துமப்பிரம்மஐக்கியமென்னும்உபநிஷத்துவாக்கியத்தால், சத்தவிதலிங்கதாற்பரியம் அவதரிப்பதே சிரவணம். அந்தச்சுருதி அர்த்தத்தையுத்தியாதிகளால், சிந்தனைசெய்வதே மநநம். அந்தநிச்சயமான அர்த்தத்திற் சித்தம் நிச்சலமாயிருப்பதே நிதித்தியாசனம். அவற்றுள்.

சிரவணத்திலுற்பந்நமான ஞாநத்தால் ஆத்தும சாக்ஷாத்கார மாகையால் சிரவணமே முக்கியாங்கி. மநந நிதித்தியாசநம் அதற்குச்சககாரிகளாகையால் முக்கியமல்ல, பாகியமான திருஷ்டாந்தம் அந்தப்பிரகாசமான தீபத்தின், சஞ்சலாவஸ்தையில், காரியசாமர்த்தியமில்லாமையால், வாயுசஞ்சாரத்துக்கு மறைவு படுவதுபோல மநநம். அதனுடைய திரியைத்தூண்டிப் பிரச்சுவலிதஞ் செய்வதுபோல நிதித்தியாசனம்.

## சத்தவிதலிங்கதாற்பரியம்.

உபக்கிரமம், உபசங்காரம், அப்பியாசம், அபூர்வதை, பலம், பூதார்த்தவாதம், திருஷ்டாந்தமெனச் சத்தவித

லிங்க தாற்பரியமுண்டு. அவற்றுள் சிருஷ்டிக்குமுன் சகத்து சத்ரூபப்பிர்ம்மமே யாயிற்றென்று பின்னந்தப்பிர்மத்துக்குச் சுவகதாதிபேதத் திரயம் நேதித்து அகண்டாகாசத்தைச் சொல்லுவதே, உபக்கிரமம். நாமரூபாத்மகசகத்தை அந்தப்பிர்ம்மத்திலே லயஞ்செய்துபிரத்தி யேகாத்துமனுக்கு அந்தப்பிர்ம்மத்துடனே ஏகத்துவம்போதித்து அந்தப்பிர்ம்மம். அத்துவைதமென்று சொல்வதே, உபசங்காரம். உபக்கிரமம், உபசங்காரமென்னு மிரண்டுங்கூடி யொருலிங்கமாகும். பிரத்தியேகாத்துமனே, பிர்ம்மமென்று மறுத்துஞ்சொல்வதே அப்பியாசம். அந்தப்பிரத்தி யேகாத்மனுக்குப், பிரத்தியக்ஷாதி பிரமாணதீதத் துவங்களைச்சொல்வதே அபூர்வதை, அந்தப்பிரத்தியேகாத்ம னொருவன யறியப்படுகை, சகலமும் அறியப்பட்டதென்று சொல்வதேபலம். பிரத்தியே காத்துமசுரூப நிர்விகார பிர்ம்மத்துக்குச், சிருட்டியாதி சகத்துச்சிந்தனை யென்னும் நியாயமுண்டாகையால், சகத்து, சிருஷ்டியாதி அநுக்கிரகாந்தமான பஞ்சகிர்த்திய கத்திருத்துவஞ் சொல்வதே பூதார்த்தவாதம். கடத்துக்குமிர்த்திகை, தந்துவுக்குவூர்ணநாபி நிமித்தம்போலச், சகத்துக்குக் காரணம் பிர்ம்மமென்று சொல்வதே திருஷ்டாந்தம்.

## மநநசகாயத்திரயம்.

யுத்தி, தர்க்க, அநுமாநமென மநநத்துக்குச் சகாயத்திரயமுண்டு. அவற்றுள் ஆத்துமா அநேகராய் வியாபகரொன்னும், சாங்கியாதிமதத்துள், அந்தச்சமஸ்தாத்துமருக்கும் பிரத்தியேக சரீரங்களில் சம்பந்த முண்டாகையால், இவனுக்கே யிந்தச்சரீரம் போகசாதனம்; அந்நியருக்காகாதென்று போக ஸ்திதிசொல்லக் கூடாது.



இவன் சுகிர்தாதிகளால் தேடப்பட்டதாகையால் இந்தச் சரீரமிவனுக்கே, அந்நியருக்கில்லையெனின் சுகிர்தாதிகமுஞ் சர்வ்வருக்குமுண்டு. இவன் பூர்வதேகாபிமானத்தால், செய்யப்பட்ட சுகிர்தாதிகம் இவனதேயெனில், அந்த அபிமாநமும் பூர்வதேகத்திலிருந்த அநேகாத்துமருக்கு முண்டென்றிப்படிச் சர்வ்வசாங்கரியமான அநவஸ்தா தூஷணம் நிராகரிக்கிறதற்கு அசக்கியம். அதெப்படியென்றால், சர்வ்வாத்துமரா யிருப்பாராகில், பின் னேகாத்துமபக்ஷத்தில் போகவிவஸ்தை யாகாதென்று, நாநாபக்ஷமாசரித்தாலும் போகவிவஸ்தை கூடாது. ஆகையால் ஏகாத்துமபக்ஷத்தில் பிம்பப்பிரதிபிம்பநியாயத்தால் உபாதிகளான அந்தக்கரணத்தினுடைய ஸ்தம்பகாலுஷ்யாதி நாநாத்துவதசையால், விசித்திர போகஸ்திதி சுவல்பமென்பதேயுத்தி தர்க்க அநுமான லக்ஷணம். அருஷ்மிசிராசாரியாதிகளால், கண்டநாதிகளில் பிரசித்தம். இதுசுகாநுபவப் பிரகரண மாகையால், கிரந்தம் வெகுவாமென்னும் பீதியால் பிரதிபாதிக்கப்படவில்லை.

## நிதித்தியாசநயோகபஞ்சகம்.

மந்திரயோகம், ஸ்பரிசயோகம், பாவயோகம், அபாவயோகம், மகாயோகமென நிதித்தியாசந ரூபயோகபஞ்சகமுண்டு. அவற்றுள், பிரணவாதி மந்திராநுசந்தானத்தாற் பரமாத்துமனிடத்தில் மனோலயமாவதே, மந்திரயோகம். அந்தமந்திர யோகசகிதமாய் மனோபவநங்களொன்றாய். மூலாதாரத்திலிருந்து சுழிமுனைநாடிமார்க்கத்துள்ளேறிச், சிரோமத்திய கதபரமாத்துமதேசினுள், அந்தமனோலயமாவதே ஸ்பரிசயோகம். சுவர்க்கமேமூர்த்தினி. திக்குகளேசுரோத்திரம். சந்திரசூரியரோ நேத்திரம். அக்கினியேமுகம். அந்தரிக்ஷமேநாபி. பூ

மியேபாதமான ஈச்சுரனுடைய விராட்புருஷ ரூபத்தைத் தியாகித்துப்பின்னும், அபரிமித சகஸ்திராபரணசகிதமான ஈச்சுரனுடைய திவ்வியமூர்த்தியைத் தியாகித்துப், பின்னந்த அவயவங்களை ஒன்றொன்றாய்விட்டு நின்ற அவயவிமாத்திரமான, சத்ரூபப்பிர்ம்மத்தில் மனோலயமாவதே பாவயோகம். கரணகோசரமாகாத பிர்ம்மாண்டத்துக்கு, அதீதமான நிருபாதிக பிர்ம்மத்தில் மனோலயமாவதே அபாவயோகம். சதோதயலயத்திலும், அறியேன் அறிவேனென்பதிலுந் தனக்கொரு ஆதியுமில்லாமல் ஓரேபிரகாரமான பிரத்தியேகாத்துமப் பிர்ம்மத்தில் மனோலயமாவதே மகாயோகம்.

## பிரதிபந்தத்திரயம்.

பூதப்பிரதிபந்தம். வர்த்தமானப்பிரதிபந்தம். ஆகாமியப் பிரதிபந்தமென ஆத்துமசாக்ஷாத் காரத்துக்குவிரோதத் திரயமுண்டு. அவற்றுள், மோக்ஷாபேக்ஷையால் சர்வ்வசங்கபரித்தியாகம் பண்ணி, ஸ்ரீகுருவையடைந்து, சிரவணாதிகஞ் செய்தாலும், முதல்கிரகஸ்தாச்சிரமத்தில் போகித்திருந்த வநிதாதிவஸ்துக்களை ரூபயௌவன சிங்காராதி சற்குணங்களநுபவித்தமை சமஸ்காரபலத்தால் வந்து வந்து உனக்குச் சுகதுக்கத்தை அடிக்கடிகொடுத்துச் சிந்திப்பித்து, ஆத்துமனைச் சாக்ஷாத்காரமாக வொட்டாததே பூதப்பிரதிபந்தம். ஜடபுத்தி ஜனசங்கதி விஷயாசக்திக்குத் தர்க்காபிமான சபலத்துவாதிகள் தத்துவவிசாரஞ் செய்தாலும், ஆத்மனைச் சாக்ஷாத்காரமாக வொட்டாததே வர்த்தமானப்பிரதிபந்தம். உனக்குச் சிலசனனம் வந்தாலல்லது பிராரத்தவிஷயந்தீராதென்கிற புத்தியோடு, பிர்ம்மலோக வாஞ்சையென்கிற தோஷத்துவய யுக்தனு யிருந்து, வேதாந்



தமறிந்தாலும் ஆத்துமனைச் சாக்ஷாத்காரமாக வொட்டாததே ஆகாமியப்பிரதிபந்தம்.

## அவதித்திரயம்.

அந்தப்பிரதிபந்தங் கெடுவதற்குக் காரணமாக ஞான வைராக்கிய உபரதியென்னும், முக்கியசாதநங்களை இடைவிடாதப்பியாசஞ் செய்கிறதற்குக் காரண சுவரூப காரியமென்னு மூன்றுலக்ஷணங்களைக் கிரமத்தில் வெவ்வேறாகச் சொல்லும்; அதெப்படியென்றால். ஞானத்துக்குச்சிரவணமே காரணம். ஆத்துமாகங்காரத்தினுடைய அத்தியாசவைக்கியம் வேறுசெய்வதே சுவரூபம்.

அகங்காரகதசம்சார ரக்ஷகத்துவமே காரியம். வைராக்கியத்துக்கு வநிதாதிவிஷயங்களில் அநித்தியத்துவாதி தோஷதரிசனமே காரணம். மேல் எந்தப்பிரகாரத்தினாலும், அகங்காரம் விடுவதே சுவரூபம். அந்த விஷயங்களில் புகாததேகாரியம். உபரதிக்கு, இயம நியமாதி அஷ்டாங்கயோகமே காரணம். மனோ நிச்சல சித்தியே சுவரூபம். மனோமக்கினமாயிருப்பதே காரியம்.

தேகாத்துமபாவந் திடமானதுபோலப் பிர்ம்மமே தானென்னுந் திடபுத்தியே ஞானாவதி. பிர்ம்மலோகாதி திரிணிகரமே வைராக்கியாவதி. சுழுத்தனைப்போலச் சகல காரியஸ்மரணமே உபரதியவதி. அந்தஞானவைராக்கியோபரதிமூன்றுஞ் சித்தித்தால் அவனுக்கு மகாதபசின்பலமாம். அவற்றுள் ஞானமின்றி வைராக்கியம் உபரதி யிரண்டும் சம்பூரணமானாலும், அவனுக்கு முத்திகூடாது. மகாசுகஸ்தானமான, பிர்ம்மலோகப்பிராப்தியாம். ஞானமொன்றிருந்து வைராக்கியம் உபரதியில்லாதவனுக்கும், மரத்துநுனிமூறிந்தால், அதன்மேலிருந்தவனுக்குப் பதநமிச்சையில்லையாயினும், பதநம்

சுபாவம். அதுபோலத் தேகாந்தத்தில் முத்திசித்தம்.
அதுவனாக்கும், பிராரத்தசஞ்சித சுகதுக்காநுபவமுண்
டென்பது சித்தம்.

## ஞானபூமிசப்தகம்.

சுபேக்ஷை, சவிசாரணை, தநுமாநசி, சத்துவாப
த்தி, சமுசத்தி, பதார்த்தாபாவனை, துரியகாமியெனச்
சப்தஞான பூமியுண்டு. அவற்றுள் நான் மூடனாயிருக்கக்
காரணமென்ன, ஸ்ரீகுருவினாலறியவேண்டுமென்பதே
சுபேக்ஷை. மேல்குருசாஸ்திராதியாற் சஞ்சித்தகிஞ்சித்
ஞானபலத்தால், சதாசாரபிரவர்த்தியே விசாரணை. மே
ல், சுபேக்ஷவிசாரணையின் பலத்தால், விஷயாசத்தை
கெடுவதே தநுமாநசி. மேல் அந்தப் பூமிகாத்திரயாப்பி
யாசபலத்தால், சாக்கிரப்பிரபஞ்ச மெல்லாம் சொப்பந
மென்றுகண்டு ஆத்மாவினுடைய சின்மாத்திராநுசந்தா
நமே சத்துவாபத்தி. மேல் சகலபிரபஞ்சமும் தோற்
றுதலடங்கிச், சுழுத்தனைப்போல் ஆத்மசின் மாத்திரா
க்ஷத்துவமே சமுசத்தி. மேல் சர்வ்வவாசநாபலத்தால்
காடநித்திரையடைந்தவன்போல ஆநந்தாத்மனிடத்தி
லயவுாமதே பதார்த்தா பாவனை. மேல் உண்டென்றாது
இல்லையென்றாது அகங்கிருதி, நிரங்கிருதி, தோற்றாத
தே கேவலம். ஞெப்திரூபமான அத்துவைத பதத்தில்
வெளியில் வெறுங்கடம்போல உள்ளும்புறமுஞ் சூநிய
மாயிருப்பதேதுரியகாமி.

## சட்சமாதி.

அந்தவுபரதிக்கநு சாரிகளான திரிசியாநுவித்த, ச
த்தாநுவித்த, நிர்விகற்பமெனப் பாஃகியாப்பியாந்தர
ங்க பேதத்தால். சட்சமாதிகளுண்டு. அவற்றுள் கடா
திவிஷயசமூகத்துள், ஒன்றனைக்குறித்து அதனுடைய



நாமரூபமான மாயாங்கிசங்களிரண்டையும் பிரித்துஅ
தனுள் அஸ்திபாதிப்பிரிய மென்னும் சச்சிதாநந்தப்பி
ர்ம்மாங்கிசத் திரயங்களை, அநுசந்தாநஞ் செய்வதே பா
ஃகிய தரிசியாநுவித்த சவிகற்ப சமாதி. அகண்டசச்சி
தாநந்தாத்துவிதிய சுவரூபம் பிர்ம்மமென்று தியாநி
ப்பதே பாஃகியசத்தாநுவித்த சவிகற்பசமாதி. இந்த
ச்சமாதி துவயாப்பியாச பலத்தால் பிர்ம்மாநந்தஸ்தாந
த்தில்,மநோமக்கிநமாய் நிஸ்தரங்க சமுத்திரம்போலநிச்
சலாத்துமகமா யிருப்பதே பாஃகிய நிர்விகற்ப சமாதி.
மநோகத காமசங்கற்பாதிகளே திர்சியம். நான்இதற்குச்
சாக்ஷிகனென்னும் அநுசந்தானமே அப்பியந்தர திர்சி
யாநுவித்த சவிகற்ப சமாதி. அசங்க சச்சிதாநந்த சுவய
ம் பிரகாசமே நானென்று சிந்தனைசெய்வதே அப்பியந்
தரசத்தாநுவித்த சவிகற்ப சமாதி.அந்தச் சுவாநுபூதிசு
காவேசத்தால் திரிசிய சப்த மிரண்டும்விட்டு,நிவாததீ
பம்போல நிச்சிந்தரூபமாயிருப்பதே அப்பியந்தாநிர்வி
கற்பசமாதி. இந்தச் சட்வித சமாதிகளினின்று கழித்த
யோகீச்சுரன் மநம் எங்கெங்கே சஞ்சரித்ததோ அங்கங்
கேசமாதியாம்.

## ஞானபலசதுஷ்டயம்.

துக்காபாவ, சர்வ்வகாமாப்தி. கிருதகிருத்தியத்
துவம், பிராப்தப்பிராப்பியத்துவமென ஞானபல சதுஷ்
டயமுண்டு. அவற்றுள் துக்காபாவம் இகபரலோக பே
தத்தால் துவிதமாம். அவற்றுள் தூலசரீரத்தில் வியா
தி துர்க்கந்தத்துவ குரூபத்துவாதிகளும்,சூக்ஷ்மதநுவி
ல் காமக்குரோதாதிகளும், காரணதேகத்தில் அந்தவி
யாதியாதிகளுக்குப் பீசபூதமான சமஸ்காரங்களென்
னும் திரிவிதசந்தாபமே, இகலோகதுக்கம். மித்தியாத்
மக மாயாகாரியமான தூலசரீராதிகளை வேறுசெய்விக்

கப்பட்ட அத்துவிதியனான பிரத்தியேகாத்தும ஞானத்தின்மேலே பரமார்த்தமான போக்கிய போக்துருக்களில்லாமையால், அந்தத்துக்கத்திரய சம்பந்தமில்லாதிருப்பதே, இகலோகதுக்காபாவம். சுகிர்த மெப்படிவருமோ, துஷ்கிருதமெப்படிப்போமோ வென்னுமிந்தச்சிந்தனையே பரலோகதுக்கம். சம்மியஞானாநந்தரம் கமலபத்ரோதகம்போல அந்தக் கர்ம்மத்துவயங் கூடுவதில்லை. எப்படியெனின் காஷ்டத்தில் நெருப்பிருக்கும் அந்நெருப்பில் காஷ்டமிராததுபோலக் கர்ம்மத்துவய விவகாரத்தில் விவேகியிருப்பன். அவனுள் அந்தக்கர்ம்மத்துவய விவகாரமில்லாமையாலும், தாவாநலம் பொருந்தப்பட்ட பர்வ்வதத்தை ஒருபக்ஷிமிருகங்களும் சேராததுபோல ஞானாக்கினிசொரூபனை அச்சுகிர்தாதிகள் பொருந்தாமையாலும், அந்தச்சிந்தனை தோன்றாதிருப்பதே பரலோக துக்காபாவம். சர்வைச்சுவரிய சம்பந்தனை சார்வபௌமாதி யிரணியகர்ப்பாந்தம் உத்தரோத்தரமாயிருக்கத்தக்க சதகுணோத்தராநந்தங்களெல்லாம் நிவர்த்தனை விவேகிக்குண்டாயினும், அந்த வாநந்தங்களெல்லாம், பிர்ம்மாங்கிசங்களாய் அகண்டாநந்தம் சித்திக்கையால், அதுவே சர்வகாமாப்தி. அந்த விவேகிக்குத் தத்துவ ஞானமாகிறதற்கு முன் இகலோக சம்பந்தமான இஷ்டப்பிராப்தி அநிஷ்டநிவர்த்திப் பொருட்டாகக் கிருஷிவாணிச்சியாதிகளும், சுவர்க்காதி சித்திப்பொருட்டாக யாகோபாசநாதிகளும், மோக்ஷசாதந ஞானசித்திப் பொருட்டாகச் சிரவணாதிகளுமென்னும், திரிவித கர்த்தவ்வியமாயிருக்கும். இந்தத் தத்வஞாநமானபின் சமுசார இகபோக இச்சை யில்லாமையால் கிருஷிமுதலான வியாபாரமுமில்லை. கவாக்ஷிகதசூரிய கிரணத்தில், காண்பிக்கிற பாமாணுக்கள், வெளியிலிருக்கிற பிரகாசத்திற் காண்பியாததுபோல, அஞ்ஞாநிக்கு விஷயமான கர்ம்மமெல்லாம், சம்மியக்ஞானமத்தியையில் தோன்றாமையால், யாகோபாசநாதிகளும், அனுஷ்டிக்கத் தக்கதில்லையாய்ப், பிர்ம்மாநந்தசாக்ஷாத்காரமாகையால் சிரவணாதிகமெல்லாம் கிருதப்பிராயமாம். இதுவே கிருதகிருத்தியத்துவம், தனக்கு விசிஷ்டபுண்ணிய பரிபாக முமுக்ஷுத்துவ குருபாத சாஸ்திரசிரவண ஆத்துமாநாத்துமவிவேக அஞ்ஞாநநிவர்த்தி, ஆத்துமசாக்ஷாத்கார சமுசார துக்கநிவர்த்தி, நிசாநந்தாதிசித்திகளே பிராப்தப் பிராப்பியத்துவம்.



## வித்தியாத்துவயம்.

சீவன்முத்தி, விதேககைவல்லியமென, வித்தியாத்துவயமுண்டு. அவற்றுள் விவேகிக்கும் அகமாத்துமருக்கும், அந்நியோந்நிய சம்பந்தலக்ஷணம், சமானமாயிருந்தாலும், விவேகிக்கு இதயகிரந்தியெல்லாம், சிதைந்தமையால், பரசரீரமெப்படியோ, அப்படியே சுவயசரீரத்திற்கூட அபிமானமில்லை. பிராரத்தபோகம் அநுபவ சாம்மியமாகையால், சாக்ஷாத்காரமற்ற பாலராதிகள்போல, மந்தாநு சந்தாநத்தால், போக்கிரபிமாநமுமாய்க் கடமுற்பத்தியானதற்குமேல் குலாலன் சக்கரம் பிரமிக்குமாபோலப் பிராரத்தவாசநாபலத்தால், சஞ்சரிக்கிறதே சீவன்முத்தி.

பிர்ம்மக்ஞானோதயமானபின். சூரியோதயத்தால், இருள்கெடுவதுபோல, ஞானத்தால் அஞ்ஞானகாரியமான சரீராதிகமழிந்து விதேககைவல்லியமாகாமல், மத்தியையில், சீவன்முத்திகற்பனை யெப்படியெனில், விவேகத்தால் ரச்சுசர்ப்பப் பிராந்திகெட்டாலும் தற்காரியமான பயகம்பிதமிருப்பதுபோல, ஞானத்தால், அஞ்

ஞானமழிந்தாலும் தற்காரியமானசரீராதிகளுக்கு ஸ்திதி
யுண்டாமாகையால், பிர்ம்மவித்தியோற் பத்திசமகால
த்தில் நிஸ்ஸேஷமாய்,அஞ்ஞானத்துடன் கூடின தேகப
தனமானாலல்லது, பிர்ம்மவித்தியாசம்பிரதாயம்விச்சித்
தியாம். ஆயினப்படியாயிற்றென்னைப்யாயின், ஈச்சுரனா
ல் பிர்ம்மன்பிர்ம்மனால், பிரசாபதி பிரசாபதியால், மநு
மநுவால், சகலருமறிந்தாரொன்று பிர்ம்ம வித்தியாசம்
பிரதாயஞ் சொல்லுகிற சாந்தோக்கியசுருதிக்கு விரோ
தமாம். ஆயினும், அஞ்ஞானிக்குச் சீவன் முத்திசித்திக்
கும் பொருட்டாய்ப் பிராரத்தகர்ம்மவாசனாஞ்ஞான லே
ச சத்பாவம் அங்கீகரிப்பதனால், தேகஸ்திதியும், சிஷ்
யோபதேசாதிகமும் சித்தித்திருக்கும். சீவன்முத்தனு
க்குச் சஞ்சிதகர்ம்ம ஞானாக்கினியால் சொற்பப்புல்லுப்
போலத் தகனப்படும், பிராரத்தகர்ம்மம் புசித்துத்தொ
லையும். ஆகாமியகர்ம்மம், அநாதிகாரியமாகையால்
பலியாதென்று அநுமியிக்கப்படும். ஞானாக்கினியால் த
கனமான சஞ்சிதகர்ம்மமே பிராரத்தபோகமீவதனால்,
முன்னுக்குத் தேகோற்பத்தி செய்யுமெனில், வறுத்தக
டலைமுதலானவை புசிக்கிறதற்கு மாத்திரம் உபயோக
மாவதல்லது அங்குரோற்பத்திக்குக் காரணமாகாததி
போல, ஞானாக்கினியால் தகனப்பட்ட கர்ம்மம் பிராரத்த
போகத்துடனே தீருவதல்லது, சன்மாந்தரத்துக் கே
துவல்ல. அந்தப்பிராரத்த கர்ம்மமானது லோகயாத்தி
ரைகளை,அதிகரியாத அஸ்மதாதி நாருக்கே யேகதேகத்
திலே யோக்கியமாம். அப்படித்தீராதிருந்தாலும் ஞா
னத்துக்கு திரோதானமில்லை எப்படியெனில், பால்ய,
கௌமார வார்த்திகாதிபேத முண்டானாலும், ஒன்றே
தேகமாவதெப்படியோ, அப்படியென்றறி. சகலவிஷ
யத்துக்கும் மித்தையாத்துவம் சாதிக்கப்பட்ட ஞானத்



துக்கும், விஷயங்களுக்குஞ் சத்தியத்துவஞ் சம்பாதி
த்திருக்கும், பிராரத்தபோகத்துக்கும், அந்நியோந்நிய
விரோதமுண்டாகையால், ஞானிக்கு அதெப்படிப்போக
சித்தியாமென்றால் மித்தியாத்மக சொற்பன இந்திரசா
லாதிகளில், கிரமத்தால் வனிதாதி சுவர்க்காதிதோற்றங்
களில், மைதுனாதி, விஷயாதி நிசபோகமாவதெப்படி
யோ அப்படியே வியாவகாரிக, பிராரத்தபோக விஷய
ங்களுக்குச் சத்தியத்துவதரிசன முண்டானாலல்லது ஆ
காதென்கிற நியமமில்லை. ஆகையால் பிராரத்தபோகத்
துக்கும், ஞானத்துக்கும் அந்நியோந்நிய விரோதமில்லை
அதனால், ஞானிக்கும் பிராரத்தபோக முண்டென்பது
சித்தம். இவ்விடத்தில் பிராந்திகெட்டால், அந்தக்ஷண
த்திலே சுத்திகா ரசித சுவரூபத்துக்கு ஆநியாவதுபோ
ல, ஞானத்தால் அஞ்ஞானமழிந்த மாத்திரத்திலேசத்துப்
பிரபஞ்சமுந் தோன்றுவதில்லை, ஆகையால், விவேகிக்
குப் பிராரத்தபோகம் எப்படியாமென்றால், சுத்திகாரசி
தமென்பது நிருபாதிகப்பிர்ம்மை.அதுகாரணத்தாற்றெ
ளிந்தபோது, ரசிதசுவரூபத்துக்குஆநியுண்டாம். இந்த
ச்சோபாதிகப் பிர்ம்மை அப்படியல்ல,தெளிந்தகுளத்தி
ன் தீரத்திலிருந்தவன் தானந்தச்சலத்தில்,அதோமுகனா
கித் தோன்றுவது பொய்யென்று புத்திநிச்சிதமானாலு
ம்,அந்த அதோமுகந் தோன்றியே யிருக்கிறதுபோல,அ
கங்காரசம்பந்தமான, சீவத்துவாதிகமெல்லாம்,மித்தை,
சத்தியமான பிரத்தியேகாத்மன் தானென்றறிந்தாலு
ஞ்,சீவத்துவாதி பிரபஞ்சமிருப்பதனால், சீவன்முத்தனு
க்குப் பிராரத்தபோக விவகாரம் அங்கீகரிக்கவேண்டும்.

## சீவன்முத்தனுக்குச்சற்குணசதுஷ்டயம்.

அந்தச்சீவன் முத்தனுக்கு மைத்திரி, கருணை, மு
திதை, உபேக்ஷையெனச்சற்குண சதுஷ்டயமுண்டு.

அவற்றுள். சற்புருஷசிநேகமே மைத்திரி. துக்காத்மர்களிடத்தில் இரக்கமேகருணை. சுகிர்தாதிகாரிகளிடத்தில், சந்தோஷமேமுதிதை, பாபிகளிடத்தில் ராகத்துவேஷமில்லாததே உபேக்ஷை.

சீவன்முத்தனுக்குப்பஞ்சப்பிரயோசநம்.

சீவன்முத்தனுக்கு ஞாநரக்ஷை, தபசு சர்வ்வசமவாதம், துக்கக்ஷயம், சுகாவிற்பாவம், எனப்பஞ்சப்பிரயோசநமுண்டு. அவற்றுள் வாசனக்ஷயம் மநோவியாபாரநாசங்களால், புத்தி நிர்ம்மலமாயிருப்பதே ஞாநரக்ஷை. பின்னதனால் இந்திரியங்களும், மநசும் ஏகாக்கிரமேதபசு. பின் தபோநிஷ்டனாகையால், ஆபாலபண்டிதரெல்லாரும் யோகீச்சுரரென்று ஸ்துதி நமஸ்காராதிகள்செய்வதே சர்வ்வசமவாதம். பின்அஸ்மிதாதி பஞ்சக்கிலேச மில்லாதிருப்பதே துக்கக்ஷயம், பின்னந்தச் சாதனங்களால், தனக்கொன்றும் பிரதிபந்த மில்லாதிருப்பதே சுகாவிற்பாவம்.

ஞாநதசச்சிந்நம்நிக்கிராநுக்கிரகம்.

அக்குரோத, வைராக்கிய, சிதேந்திரியத்துவ, தமை, க்ஷமை, சாப்பிரத்தியத்துவ, அலோப, தாத்திருத்துவ, அபய நிர்ம்மதமென ஞான தசச்சிந்நமுண்டு.

அந்தச்சீவன்முத்தனால், உதாசீந, பாபி, சிஷ்ய, பத்தசந நிக்கிராநுக்கிரகமுண்டாம்.

அவன்செய்கிற அசத்தான சரித்திரங்கண்டு உதாசீநஞ்செய்கிறவனுக்குப் புண்ணிய க்ஷயமும், அவன் தரிசநபரிசநத்தால், பாபிகளுக்குப் பாபக்ஷயமும், அவனால், சிஷ்யனுக்குமுத்தியும், அவனையநுராகத்தா லாசிரயிக்கும் பத்தனுக்குச் சுகிர்தாதிசயமுமுண்டாம். கத்திருத்வாதி கர்ம்மமில்லாதசீவன் முத்தனால் வேதாந்தவாக்கிய சத்திய தாற்பரியாநுகூலதர்க்க திருஷ்டாந் தாதிகளால், யத்ந புரசரமான பிர்ம்மோப தேசாதிகமெப்படியாமென்றால், அதிரோகிதபிர்ம்ம சுவரூபமாகையால் ராகத் துவேஷாதிகளில்லாத ஈச்சுரனுக்கு, ஜநங்களுடைய சுகிர்த துஷ்கிருதவசத்தால் அநுக்கிரக நிக்கிரக சேஷ்டை யுண்டாவதுபோலச், சாதகருடைய சுகிர்தாதிப் பிரவாகவசத்தால் ஞாநோபதேசாதிகளாம்.



பிரார்ரத்தகர்ம்மசமஸ்காரசதுஷ்டயம்.

சீவன்முத்தரிற் சொல்லப்பட்ட லக்ஷணங்களிலிராமல், வெகுபிரகாரமா யிருப்பதென்னெனின், பிராரத்தகர்ம்ம சமஸ்காரமானது, தீவர, மத்திய மந்த, சுத்தமெனச் சதுர்விதமுண்டு. அவற்றுள் சம்மியஞ்ஞானியானாலும், போகதாற்பரியனாய்ப் பசுவைப்போல, ஆத்மப் பிரீதிமாத்திரமாயிருப்பதே தீவர சமஸ்காரம். போகதுருக்கு முக்கியமானாலும், தான் ஆத்துமதாற்பரியனாய்ப் பாலனைப்போல, விநோதமாத்திரமா யிருப்பதே மத்தியசமஸ்காரம். போகதாற்பரியத்தில் உந்மத்தனைப்போலநிச்சிதமில்லா திருப்பதே மந்தசமஸ்காரம். சர்வ்வ வியாபாரமுமழிந்து நிருபாதிகாத்மனிடத்தில் தாற்பரியனாய்ப் பரமுத்தனைப்போலப் பரமசுகத்தி லிருப்பதே சுத்தசமஸ்காரம். இப்படிப்பிராரத்த சமஸ்காரத்திருந்த சீவன்முத்தர் நாநாவர்த்தனைகளி லிருந்தாலும் ருசுகுடிலகதியாகிய நதிகள்பலவும் சமுத்திரசம்பந்தத்திலொன்றேயாவதுபோல முடிவிடத்தில் பிர்ம்மசுவரூபமாயிருக்கிற முத்திசுகம் ஒரேபிரகாரமாம்.

பிராரத்தத்திரயம்.

இச்சாப்பிராரத்தம், அநிச்சாப்பிராரத்தம், பரேச்சாப்பிராரத்தமெனத் தேவாதிகளா லுபகரிக்கிற பிராரத்தத்திரயஞ் சுகதுக்கரூபமாம். அவற்றுள் தனக்கு அபத்திய சேவகாதிகத்தால், துன்பம் வருமென்றறிந்தவி

டத்தும், விடாமற்செய்விக்கிறதே இச்சாப்பிராரத்தம் தான் செய்யமாட்டேனென்றாலும் இராஜாக்கினைபோல இம்சாதிகளைச் செய்விக்கிறதே அநிச்சாப்பிராரத்தம். தனக்கு இச்சாநிச்சை யில்லாதிருந்தாலும், பரதாக்ஷிண்ணியத்தா லூட்டுவிப்பதே பரோச்சாப்பிராரத்தம்.

சீவன்முத்தர்களுடையவிசித்திரசரித்தியம்.

இந்தத்திரிவித பிராரத்தாநுசாரத் திருந்த சீவன்முத்தருக்கே, விசித்திரசரித்திர முண்டென்பதற்குச்சநக, சடபரத, யாக்ஞியவல்கிய, சுக, வாமதேவ, பிரகலாத, கௌதம, வசிஷ்ட, வாங்மீக, விசுவாமித்திர, தூர்வாச, வியாச, நாரதாதிவர்த்தனுபேதமே நிதரிசநமாம்.

அஞ்ஞாநிக்கும்ஞாநிக்கும்பேதம்.

இப்படிஞாநிக்குப் பிராரத்தபோகம் அங்கீகரிக்கிறதால், அஞ்ஞாநிக்கும், ஞாநிக்கும் பேதமென்ன வென்றால்; விராத்திய சுரோத்தியருக்கு, வேதாத்தியயநபரித்தியாக, வேதாத்தி யயநயுத்திகளாற், பேதமல்லது, ஆகாரம், நித்திரை, பேதமில்லாததுபோலஅஞ்ஞாநிக்கும், ஞாநிக்கும் இதய பந்த சம்பந்தா சம்பந்தபேதமல்லது போகஸ்திதிபேதமில்லை. தத்வஞாநத்தால் பிர்ம்மப் பிராரத்தமாப் வியாக்கிர சந்தரிசநம்போலச் சீவத்துவங்கெடுவதாய்த் தன்னுடையநாசத்துக்கு எப்படிச்சீவன்பிரவர்த்திப்பனென்றால், தேவத்துவவாஞ்சையால், கங்கை பிரயாகை யாதிகளில், நரத்துவ பரித்தியாகம் அங்கீகரிப்பதுபோலப், பிரத்தியேகாத்மப் பிர்ம்மரூபமாகவேண்டித் தத்துவஞாநத்தால். தன்னைநாசஞ்செய்யவுடன்படுவன்.

சீவந்முத்தருடையசாபாநுக்கிரக சாமர்த்தியம்.

வியாசாதிகள்போலச் சாபாநுக்கிரக சாமர்த்தியமெவனுக்குண்டோ அவனேதத்துவ ஞாநியல்லதுவே



றொருத்தனல்லவெனில், அந்தச்சாமர்த்தியம் தபசின்பலமல்லது, தத்துவஞாநபலமல்ல. ஆனால், தத்துவஞாநத்துக்குத் தபசேமூலமென்னுஞ் சுருதியுண்டாகையால் தபோரகிதனுக்குத் தத்துவஞாந மெங்கேயெனில், சாபாதிகளுக்குக்காரணம், சகாமிய தபசென்றும் நிஷ்காமியதபசினால் தத்துவஞாநமென்றும்அறி. அந்த வியாசாதிகளுக்கு, ஞாநசாமர்த்திய மிரண்டுமுண்டெனில், அவர்களுக்கு உபயவித தபசுமுண்டாகையால் ஞாநசாமர்த்திய இரண்டுபலமுமுண்டு. மற்றொன்றொன்றையாசரித்தவனுக்கு, ஒன்றொன்றேசித்திக்கும்; அதனால் விரோதமில்லை. சாபாதிசாமர்த்திய மில்லாமல், விதிருக்நியனை தத்துவஞாநியைக், கிரியாநிஷ்டரெல்லாம் நிந்திக்கிறாரோ வெனில், கிரியாநிஷ்டர்களையும், விஷயலம்படரான மூடர் நிந்திக்கிறார்கள். அந்தநிந்தையால் அவருக்கு வைஷம்மியமில்லை. அந்தவிஷயலம்படர் நிந்தையால் கிரியாநிஷ்டரானவர்க்கு எப்படி வைஷம்மியமில்லையோ அப்படியே தேகாத்துமபுத்தியுள்ள நிஷ்டர்செய்யும் நிந்தையால், தத்துவஞாநிக்கு யாதொரு ஆநியுமில்லை.

சீவன்முத்தன்லௌகிகனாவதனால், பிராரத்தவசத்தால், வித்வதவித்வதவஸ்தையிலிருந்தாலும், வாயுவசத்தாலான சிரதாசிரதமே கபடலக்ஷணம்போல, நித்தியநிர்ம்மலனாவன். மற்றும் அதிஷ்டமென்றுபரிசாரகனிடத்தில்சரிக்கு மூடனைப்போலக்கலாஞாநத்துள் மௌனனா யிருந்தாலும், கற்பிதத் துவைதபரசுருதி வாக்கிய வைகரிவிஷயத்துள் ஆலசியனாகும். மற்றும் அப்பிரஸ்துதமறியாத வெகுபாஷிதனைப்போல என்னவசநித்தாலும், கூடாவவிப்பிராயகற்பிதமான சத்தியாத்துவைத நிஷ்டநிகமாபிப்பிராயமாகும். மற்றும், ஆசாரிய

ணைப்போலச்சிஷ்யருக்கு உபதேசித்திருந்தாலும், ஆத்மநித்தியமுத்தனைப்போத்தியபோதகத்துவமாயாநிரசநாத்மகனென்னும், கிருதநிச்சயத்தால், கநகமணிபோலக், குருத்துவாபிமாநரகிதனாயிருப்பன். மற்றும் உந்மத்தனைப்போல, அநுசிதவக்துருவானாலும், துவைதபாவமழிந்தாத்மாராமனானதனால், சுரதசமயத்துள் அதிகாமரசத்து மிதுநவாக்கியம்போல அநபிதேயவிஷயமாகும். மற்றுங்கபிசாக்கிர காஷ்டனைப்போலக்கலகலெனப்பேசினாலும், பூரணைக்கியசுபாவ நிஷ்டனாவதனால், விரகிகள்மநம்போல அப்பிராப்பியாநுசந்தானமாகும். மற்றும், வெகுவியோகாநுபாவமுள்ள கிராம்மிய சநம்போலச், சோகஞ்செய்தாலும், சர்வேந்திரியங்களும், பிர்ம்மாங்கிசங்களென்று ஆலோசனைசெய்யாத கற்பிதசாதகாவஸ்தையில், நிக்கிரகித்த சர்வேந்திரியகர்ம்மவிஷயமான கருணாரசமாகும். மற்றும், விவிதவெகுரூபதரிசந விநோதத்துள், அஷ்டகாசஞ்செய்தாலும், விசித்திர புண்ணிய பாபாதிவிவகாரமுஞ் சத்திய மென்று பிரதிபாதிக்கிற மீமாங்கிசாதிதரிசநவிஷயமான பரியாசமாகும். மற்றும், விடனைப்போல ஸ்திரிலோலனாயிருந்தாலும், பூரணைக்கிய சுபாவனாவதல்லாமல், நிசாநந்தாநுபவியாகும். மற்றுஞ் சத்துருவைப்போலக் குரோதத்தால் சந்தாபஞ்செய்தாலும், க்ஷேத்திரதகநாக்கிநிபோல விசிஷ்டபலசம்பத்துக்கு ஆசிரயஞ்செய்வனென்று விசுவாசஞ்செய்யவேண்டும்.

### விதேககைவல்லியமடையுங்கிரமம்.

இதற்குமேல் எக்காலத்திலும், எத்தேசத்திலும், யாதொருசரீரமும் அடையாதே சச்சிதாநந்தப் பிர்ம்மசுவரூபத்தி லிருப்பதே விதேககைவல்லியமாம். அந்த விதேக கைவல்லியமடையுங் கிரமமாவது யாதொருமு



முட்சுவுக்கும் நித்தியகர்ம்மாநுஷ்டாநத்தால், தர்ம்மோத்பத்தி, தர்ம்மோத்பத்தியால் பாபக்ஷயம், பாபக்ஷயத்தால் சித்தசுத்தி, சித்த சுத்தியால் சமுசாரதோஷதரிசநம், சமுசாரதோஷ தரிசநத்தால் விஷயவிரக்தி, விஷயவிரக்தியால் மோக்ஷா பேக்ஷை, மோக்ஷாபேக்ஷையால் பாஃகியகர்ம்ம பரித்தியாகம், பாஃகியகர்ம்ம பரித்தியாகத்தால் யோகாப்பியாசம், யோகாப்பியாசத்தால் பிரத்தி யேகாத்துமப்பிரீதி,பிரத்தியேகாத்துமப்பிரீதியால் தத்துவமசிவாக்கியவிசாரம், தத்துவமசிவாக்கிய விசாரத்தால், அத்துவைதஞாநம், அத்துவைதஞாநத்தால் அவித்தியாநாசம், அவித்தியாநாசத்தால் துவைதப் பிராந்திநஷ்டம், துவைதப்பிராந்திநஷ்டத்தால் சுகதுக்கபரித்தியாகம், சுகதுக்கபரித்தியாகத்தால் ராகத்துவேஷ ஆனி, ராகத்து வேஷ ஆனியால் விதிநிஷேதநிரசநம், விதிநிஷேதநிரசநத்தால் புண்ணியபாபக்ஷயம்,புண்ணிய பாபக்ஷயத்தால் தேகாபாவசித்தி,தேகாபாவசித்தியால் சர்வ்வபாப விமோசநம், சர்வ்வபாப விமோசனத்தால் சர்வ்வோத்கிருஷ்டமான பரமஸ்தாநமான புநராவிர்த்திரகிதமான, சகலசாஸ்திர தாற்பரியவசநமான நாமசர்திக்கிரியாவாசனை புகாத மநோவாசாமகோசரமான நித்தியானந்த சுவரூபமா யிருக்கிறதே விதேக கைவல்லியம்.

இதுவேசுருதி. ஆசாரியப்பிரசாதசித்தி. இதுவேசகலசாஸ்திரார்த்த நிர்ணயம். முதலாவதுவேதாந்தபரிச்சேதம் சம்பூர்ணம்.

விவேகசிந்தாமணியில்

முற்றிற்று,

———

உ

சிவமயம்.

ஸ்ரீ குருப்யோ நமஃ

# விவேகசிந்தாமணியில்

## இரண்டாவது.

### சைவசித்தாந்தபரிச்சேதம்.

### க. வது - பிரகரணோற்பத்தி.

முன்பரிச்சேதத்தில் வேதாந்தசாஸ்திரந் தெளிவாய்ச்சொன்னேன், இந்தப்பரிச்சேதத்தில், பராற்பர சிவ சித்தாந்தத்துள் பக்தியைத் தெளியச் சொல்லுவேன் சாதகர்க்குச் சந்தோஷம் உதயமாக. அஃது இந்தச்சைவசித்தாந்த சாஸ்திரத்துள். இந்தலோகத்துள்ள பிரத்தியக்ஷபலத்தினால் விசுவாசங்கூடுதற்காக, விஞ்ஞான கேவலரொன்னும் ஆத்துமவர்க்கத்துள், அந்தந்தநாமதேயமுள்ளவர்களால் முறையே சொல்லப்பட்ட, காருடம் தக்ஷணம், வாமம், பூதங்களென நான்குதந்திரங்களுண்டு.

அவற்றுள். தற்புருடம், அகோரம், வாமம், சத்தியோசாதமெனச் சதுர்வித பிர்ம்மமூர்த்தி யுபாசனைகளும், சர்ப்பசிகிச்சை, சத்துருஜயம், இரசவாதம், கிரகஉச்சாடனார்த்தமாகக் கிரமத்தினால், காருடம், மாரணம் ஆத்மௌஷதப் பிரயோகங்களுஞ் சமாப்தங்களாம்.

### சித்தாந்தபேதங்கள்.

மேலும் அந்தச்சித்தாந்தம் காமிகம், யோகஜம், சிந்தியம், காரணம், அசிதம், திப்தம், சூக்குமம், சகத்திரம், அஞ்சுமான், சுப்பிரபேதகம், விசயம், நிசுவாசம்



சுவாயம்புவம், அநலம், வீரம், இரௌரவம், மகுடம், விமலம், சந்திரஞானம், விம்பம், புரோற்கீதம், இலளிதம், சித்தம், சந்தானசருவோத்தமம், பாரமேச்சுரம், கிரணம், பேதம், வாதுளம். என இருபத்தெட்டுத் திவ்வியாகம பேதங்களாம்.

### உ - வது. ஆகமோற்பத்தி.

மேலும், காமிகாதி ஆகமங்கள் சதாசிவன் சத்தியோசாத முகத்திருந்து ஐந்தும், வாமமுகத்திருந்து ஐந்தும், அகோரமுகத்திருந்து ஐந்தும், தற்புருட முகத்திருந்து ஐந்தும், ஈசானமுகத்திருந்து எட்டுஞ் சனித்தன. அம்முகங்களி லிருந்துண்டான, காமிகாதி சுப்பிரபேதகாந்தமான பத்தாகமங்களும், சிவபேதமென்றும், விசயாதி வாதுளாந்தமான பதினெட்டாகமங்களும் உருத்திரபேத மென்றும் சொல்லப்படும். இச்சிவருத்திரர்கள் ஆகமங்களிற்பிறந்த கிரமம் எப்படியெனின்.

க - வது. சிவபேதங்கள். (உ௯)

### க - வது. சத்தியோசாதமுகத்திருந்து.

க-வது. காமிகாகமமே முதல்பிரணவமென்பவன் அவனிலிருந்து திரிகலனும், இவனிலிருந்து அரனுந் தோன்றினர்.

உ-வது.யோகசாகமமே முதல் சுத்தாக்கியன்,அவனிலிருந்துவெகுவும்,இவனிலிருந்துவிபுவுந்தோன்றினர்.

ரு - வது. சிந்தியாகமமே முதல்தீப்தன், அவனிலிருந்து, யோகாஸ்வயனும், இவனிலிருந்து அம்பிகையுந் தோன்றினர்.

சு - வது. காரணகமமே முதல்காரணக்கியன், அவனிலிருந்து சர்வ்வனும், இவனிலிருந்து ஆதிபிரசாபதியுந் தோன்றினர்.

ரு - வது. அசிதாகமமே முதல்சிவன், அவனிலிருந்து சுசிவனும், இவனிலிருந்து, அச்சுதனுந் தோன்றினர்.

உ - வது. வாமமுகத்திருந்து.

சு - வது. தீப்தாகமமே முதலீசன், அவனிலிருந்து திரிமூர்த்திகளும், இவனிலிருந்து சிவோதாசனனுந், தோன்றினர்.

எ - வது. சூக்குமாகமமே முதல்சூக்குமன்; அவனிலிருந்து வைப்பிரவணனும், இவனிலிருந்து, சுப்பிரபஞ்சனுந்தோன்றினர்.

அ - வது. சகத்திராகமமே முதல்காலருத்திரன் அவனிலிருந்து பீமருத்திரனும், இவனிலிருந்து, தன்மனுந்தோன்றினர்.

கூ - வது. அஞ்சுமானகமமே முதல்மபு, அவனிலிருந்து உக்கிரனும்; இவனிலிருந்து தௌரசனுந் தோன்றினர்.

ய - வது; சுப்பிரபேதாகமமே முதல்தசகன் அவனிலிருந்து விக்கினேச்சுரனும்,இவனிலிருந்து சசியுந்தோன்றினர். இவை சிவபேதங்கள் இருபத் தொன்பதாம்.

உ-வது. உருத்திரபேதங்கள். (நசு)

க - வது. அகோரமுகத்திருந்து.

க- வது. விசயாகமமே முதல்ருத்திரன், அவனிலிருந்து அநாதியும், இவனிலிருந்து பரமேச்சுரனுந் தோன்றினர்.

உ - வது. நிசுவாசாகமமே முதலுதயன் அவனிலிருந்து கிரியை தோன்றினள்.

ங - வது. சுவயம்புவவாகமமே முதல் நிதனேசன் அவனிலிருந்து, சுயம்புவன் தோன்றினன்.



சு - வது. அநலவாகமமேமுதல் வியோமன், அவனிலிருந்து உருத்திரோதாசனன் தோன்றினன்.

ரு - வது. வீராகமமேமுதல்தேஜசன், அவனிலிருந்து பிரஜாபதி தோன்றினன்.

உ - வது. தற்புருடமுகத்திருந்து.

சு - வது. இரௌரவவாகமமே முதல்பிர்ம்மணேசன், அவனிலிருந்து நந்திகேச்சுரன் தோன்றினன்.

எ - வது. மகுடாகமமே முதல்சேஷாக்கியன், அவனிலிருந்து, மகாதேவன் தோன்றினன்.

அ - வது. விமலாகமமே முதல்சர்வ்வாத்மகன், அவனிலிருந்து வீரபத்திரன் தோன்றினன்.

கூ - வது. சந்திரஞானாகமமே முதலநந்தன், அவனிலிருந்து பிரஹஸ்பதி தோன்றினன்.

ய - வது. விம்பாகமமே முதல்பிரசாந்தன்; அவனிலிருந்து ததீசி தோன்றினன்.

ங - வது. ஈசானமுகத்திருந்து.

கக - வது. புரோற்கீதாகமமே முதல்சூலி, அவனிலிருந்து, கவசாக்கியன் தோன்றினன்.

கஉ - வது. இலளிதாகமமே முதல்மலையன், அவனிலிருந்து இலலிதன் தோன்றினன்.

கங - வது. சித்தாகமமே முதல்இந்திரன், அவனிலிருந்து தண்டேச்சுரன் தோன்றினன்.

கசு-வது. *சந்தானசருவோத்தம ஆகமமேமுதல் வசிஷ்டன், அவனிலிருந்து சைசபாயன் தோன்றினன்.

---

* ஓர் பிரதியில் சந்தானசருவோத்தம மென்னுமாகமத்தைச்சந்தானமென்றும், சருவோத்தமமென்றும் இரண்டாக்கிப் பேதகாகமத்தை நீக்கி (உஅ) ஆக எழுதப்பட்டிருக்கிறது.

கடு - வது. பாரமேச்சுராகமமே முதல்சோமன், அவனிலிருந்து நரசிங்கன் தோன்றினன்.

கசு - வது. கிரணகமமே முதல்தேவபிதன், அவனிலிருந்து சர்வ்வார்த்தகன் தோன்றினன்.

கஎ - வது. பேதாகமமே முதல்பவோற்பவனும்.

கஅ - வது. வாதுளாகமமே முதல்சிவாத்மன்; அவனிலிருந்து மகாகாளன் தோன்றினன். இவை ருத்திரபேதங்கள் முப்பத்தாறும்.

இன்னும் இவ்விருபத்தெட்டாகமங்களும் இரண்டு சங்கத்தின்மேல் ஒருபதுமமும் ஒரு அற்புதமும் பத்தொன்பது கோடியே முப்பத்தெட்டுலக்ஷத்து நாற்பத்துநாலாயிரங் கிரந்தசங்கியை உள்ளனவாம். அவற்றுள் (நூற்றுத்தொண்ணூற்றெட்டே) முக்கியமானவைகளாம். அவை மேற்கூறுதும்.

க - வது. காமிகம்.

உத்தரம்,வயிரோத்தரம்,நாரசிங்க மெனமூன்றும்.

உ - வது. யோகசம்.

வீணசிகோத்தரம், தாரதந்திரம்,சௌக்கியாகமம், சாந்தாத்தியாகமம், ஆத்மயோகம் எனஐந்தாம்.

ங - வது. சிந்தியம்.

சுசிந்தியாகமம், சுபகாகமம், வாமதந்திரம், பாபநாசகம். சர்வோற்பவம், அமிர்தாகமம் என ஆறும்.

ச - வது. காரணம்.

காரணதந்திரம், பாவநதந்திரம், தௌவுற்கியதந்திரம், மஹேந்திரதந்திரம்; வீமதந்திரம், மாரணதந்திரம், ஈசாநதந்திரம் என ஏழாம்.

ரு - வது. அசிதம்.

பிரபூதாகமம், பரோற்பூதாகமம், பார்வதீதந்திரம் பத்மசங்கிதை என நான்காம்.



சு - வது. தீப்தாகமம்.

அமேயாகமம், அப்பிரமாகமம், அஸ்வாகமம், அசங்கியாகமம், அமிதௌசேசாகமம்; ஆநந்தாகமம், மாதோற்பூதாகமம், அற்புதாகமம், அமிர்தாகமம் என ஒன்பதாம்.

எ - வது. சூக்குமம்.

சூக்ஷ்மசங்கிதையென ஒன்றேயாம்.

அ-வது. சகத்திரம்.

அதிதாகமம், அமலாகமம், சுத்தாகமம், அப்பிரமேயாகமம், சாதிபாநுகமம், பிரபுத்தாகமம், விபுதாகமம், அஸ்தாகமம், அலங்காராகமம்; சுபோதாகமம் எனப்பத்தாம்.

கூ - வது. அஞ்சுமான்.

வித்தியாபுராணம், பாஸ்வராகமம், நீலலோகிததந்திரம், பிரகரணகமம், பூததந்திரம், ஆத்மலங்காரம்,காசியபாகமம், கௌதமாகமம், மஹேந்திராகமம், பிர்ம்மாகமம், வசிஷ்டாகமம், ஈசானியோத்திரம் எனப் பன்னிரண்டாம்.

ய-வது. சுப்பிரபேதம்.

சுப்பிரபேதாகம மெனஒன்றேயாம்.

யக - வது. விஜயம்.

விஜயதந்திரம், உப்பவத்தந்திரம், சௌமியதந்திரம், அகோரதந்திரம், மிருத்தியுநாசதந்திரம், குபேரேசதந்திரம், விமலதந்திரம், மஹாகோரதந்திரம் என எட்டாம்

யஉ - வது. நிசுவாசம்.

நிசுவாசம், உத்தரநிசுவாசம், நிசுவாசமுஹோதயம், நிசுவாசநயனம், நிசுவாசகாரிகை, கோரசங்கிதை, சுசௌக்கியம், குய்யம் என எட்டாம்.

௰௩ - வது. சுவாயம்புவம்.

சுவயம்பூதம், பிரசாபதிமதம், பத்மதந்திரம் என மூன்றும்.

௰௪ - வது. அநலம்.

ஆக்கிநேயமென ஒன்றேயாம்.

௰௫ - வது. வீரம்.

பிரஸ்தாரதந்திரம், பிரஸ்புரதந்திரம், பிரபோததந்திரம், போததந்திரம், போதகதந்திரம், அமோகதந்திரம், மோகசமயதந்திரம், சகடதந்திரம், சகடீரதந்திரம், அலதந்திரம், விலேகநதந்திரம், பத்திரதந்திரம், வீரதந்திரம் எனப்பதின்மூன்றும்.

௰௬ - வது. இரௌரவம்.

காலதகநம், இரௌரவோத்திரம், கௌமாரம், காலம், மஹாகாளம், இந்திராகமம் என ஆறும்.

௰௭ - வது. மகுடம்.

மகுடம், மகுடோத்தரம் என இரண்டாம்.

௰௮ - வது. விமலம்.

அநந்தபோகாகமம், ஆக்கிராந்தாகமம், ஹிருத்தஹாசாகமம், அலிக்கிருதாகமம், அற்புதாகமம், மாரணதந்திரம் என ஆறும்.

௰௯ - வது. சந்திரஞாநம்.

ஸ்திரசங்கிதை, ஸ்தாணுசங்கிதை, மகாந்தசங்கிதை, நந்திசங்கிதை, நந்திகேச்சுரசங்கிதை, ஏகபாதபுராணம், சங்காரகம், நீலபத்திரதந்திரம், சிவபத்திராகமம், கலாபேதாகமம், ஸ்ரீமுகாகாகமம், சிவசாஸநாகமம், சிவசேகராகமம். தேவிமதம். எனப்பதினான்காம்.

௨௰ - வது. விம்பம்.

சதுமுகதந்திரம், மலேயதந்திரம், மஹாயோகம், ஸோஸ்தோபாகமம், பிரதிவிம்பாகமம், அர்த்தலங்காரம், வாயாவியதந்திரம், கௌடிகதந்திரம், குதாடிநிகாகமம், துலாவிருத்தம், துலாயோகம், குட்டிமதந்திரம், வர்க்கசேகரம், மஹாவித்தயம், மஹாசவூரம் எனப்பதினைந்தாம்.



௨௧-வது. புரோற்கீதம்.

கவசாகமம், வராகதந்திரம், பிங்களமதம், பாசபந்தசங்கிதை, தண்டதரதந்திரம், குசதந்திரம், தாரணம், சிவஞ்ஞாநம், விஞ்ஞாநம், திரிகாலஞ்ஞாநம், ஆயுர்வேதம், தநுர்வேதம், சர்வதமிஷ்ட்ரீவிபேதநம், சங்கீதம், பரதம், ஆதோத்தியம் எனப்பதினாறும்.

௨௨ - வது. இலளிதம்.

இலளிதம், இலளிதோத்திரம், கௌமார தந்திரம், விக்கிநேச்சுராகமம் எனநான்காம்.

௨௩ . வது. சித்தம்.

சாரோத்தரம், தேவேஸௌாத்தம், சாலபேதம் சசிமண்டலம் என நான்காம்.

௨௪ - வது. சந்தானசருவோத்தமம்.

இலிங்காத்திகூஷம், சுரத்தியகூஷம், சங்கரதந்திரம் மஹேச்சுராகமம், அசங்கியாதந்திரம், அநிலாகமம், துவந்துவாகமம், சிவதர்ம்மோத்தரம், வாயுப்புரோக்தம், திவ்வியபுரோக்தம், ஈசாநியம் எனப்பதினொன்றும்.

௨௫ - வது. பாரமேச்சுரம்.

மாதங்கதந்திரம், யக்ஷணிசாஸ்திரம், பத்மாகமம், பௌஷ்கரம், சுப்பிரயோகம், அம்சாகமம், சாமாநியாகமம் எனஎழாம்.

௨௬ - வது. கிரணம்.

காருடாகமம், நைருதாகமம், நீலதந்திரம், விருக்ஷாகம், பரணுகமம், வைக்கிரமாகமம், புத்தாகமம், பிரபுத்தாகமம், காலதந்திரம் என ஒன்பதாம்.

### உஎ - வது. பேதம்.

பேதாகம் என ஒன்றேயாம்.

### உஅ-வது. வாதுளம்.

வாதுளம், உத்தரவாதுளம்,காலஞ்ஞானம்,பிரலோகிதம், சர்வ்வாகமம், சர்வ்வாஷ்டாகமம், சிரேஷ்டாகமம், நித்தியாகமம், சுத்தாகமம், மஹாங்நம், விஸ்வாகமம், விஸ்வாத்மாகமம் எனப்பன்னிரண்டாம்.

### ஙூ - வது. கிரியாபாதம்.

இவ்வாகமங்களில் கிரியாபாதம், சரிதாபாதம்,யோகபாதம், ஞானபாதமென நான்குபாதங்களுண்டு.

அவற்றில் பதி, குண்டலிநி, மாயை, பசு, பாசம், தீக்ஷைஎன ஆறுபதார்த்தங்களும்; குருமுகத் திருந்து நிர்க்கதமான ஞாநமென்றும், பதியாதிபதார்த்தரூபஞேயமென்றும், இலிங்கார்ச்சநா லக்ஷணமான அநுஷ்டாணமென்றும், பஸ்மருத்திராக்ஷ தாரணாத்மகமான அதிகிருத ரூபமென்றும்; சிவமந்திரரூப சாதனமென்றும் சிவசமான முத்திரூப சாத்தியமென்றும் ஆறுபதார்த்தங்கள் பிரதிபாத்தியங்களாகும்.

### சப்தசைவபேதங்கள்.

முற்கூறிய முதற்கிரியாபாதத்துள் ஆத்மனுக்கே பசுத்துவக்ஷய,சிவத்துவாப்பிய வியக்தி,நித்தியகர்ம்மாதிகாரத்துவங்கள் சம்பாதித்திருப்பதே லக்ஷணமாகிச் சிவன்கிரியாசத்தி ரூபமானதே தீக்ஷையாகும். அந்தத் தீக்ஷாவிசேஷ யுக்தமான, அநாதிசைவம், ஆதிசைவம் மஹாசைவம், அநுச்சைவம், அவாந்தரசைவம், பிரவரசைவம், அந்தரசைவமெனச் சப்தவிதச் சைவங்களுண்டு. அவற்றுள் சதாசிவன்றானே அநாதிசைவன். சிவன்



பஞ்சமுகத்திருந்து தீக்ஷாதாரண கௌசிகாதிரிஷியீச்சுரரோ ஆதிசைவர். அந்தரிஷிவம்சரான தீக்ஷாதாரணதுவிஜரோ மஹாசைவர். சிவசமுஸ்காரியரான க்ஷத்திரியரோ அநுச்சைவர். சைவதீக்ஷா சம்பந்நரான வைசியசூத்திரரோ அவாந்தரசைவர். சிவதீக்ஷாயுக்தரான அம்பட்ட குலாலராதியரோ பிரவரசைவர். தீக்ஷாநித்தராய மற்றையவர்களே அந்தரசைவர்களாம்.

### சைவத்தின்உட்பேதங்கள்.

மற்றும்,அந்தச்சைவங்களே, வாம, தக்ஷண,மிசிர, சித்தாந்தமென நான்குபேதங்களாம். எப்படி யெனின் சத்திபரமானதே வாமமாம். வைரவபரமானதே தக்ஷணமாம். சப்தமாதுருகாபரமானதே மிசிரமாம். பரசிவபரமானதே சித்தாந்தமாம். மேலும் அந்தச்சைவங்களிலிருந்து முக்கியமான சாமாநியசைவர், மிசிரசைவர், சுத்தசைவர், வீரசைவரென நான்குசைவர்களுண்டு.

க-வது. அவர்களுள் யாரோனும் ஸ்ரீமத்விபூதிதாரணதிரத்தின் சுத்தாத்மனாகிச் சுவயம்புலிங்கம், அல்லது, தேவ, தாநவ, ருஷி, மாநவராதியர் பிரதிஷ்டைசெய்தலிங்கங்களைக் காணும்போதே, நமஸ்கார, பிரதக்ஷணபூஜாதிகமும், யதாசக்திசெய்தலும் சிவபக்த ஜங்கமவணங்குதலும், சிவபூஜாதிசிவார்ச்சனை,சிவார்த்தமானவியாபாரம், சிவகதா சிரவணவிச்சை, சிவத்தியாநம் சிவாநுகூலம்,பரமசாத்வீகமான அஷ்டவித பக்தியுக்தனாயிருப்பவனே சாமாநியசைவனாம்.

உ-வது. சடஸ்த சிவலிங்கபூசையுடனே, விஷ்ணு உமை, சண்முகன், விக்கிநேச்சுரன், சூரியன் என்னும் பஞ்சவிதப் பூஜைகளும், பிர்ம்மேந்திராதி தேவதாவாராதனைகளும், அவரவர் மந்திரங்களினாற், செய்ய சிவன்

சர்வாத்மகனென்னும் நினைவோடு விஷ்ணுவாதி தேவர்களைச் சிவபக்தரென்னும் பாவனையோடும் சமானபக்தியுக்தனுக விருப்பவனே மிசிரசைவனும்.

௩ - வது. அநாதிசைவனுன சதாசிவன் சத்தியோசாதாதி பஞ்சமுகத்திருந்து தீக்ஷாதாரண, கௌசிக, காசிப, பரத்துவாச, அத்திரி, கௌதமரென்னும் ஆதிசைவகோத்திர சம்பந்நனுகிய மஹாசைவனே சுத்தசைவனும்.

௪ - வது. வேதாகமபுராண இதிகாசசூத்திரபாஷியாதி சகலசாஸ்திர சம்பந்நனுகி ஸ்தூல சூக்ஷ்மகாரணமென்னுஞ் சிவலக்ஷணங்களும், சுத்த மிசிர சங்கீரணமென்னும் சிவசுவரூபங்களும், சிவாகருஷணுதி சகலதேவதாகருஷணங்களும், இலிங்கப்பிரதிஷ்டைமுதலான சகலதேவதா பிரதிஷ்டைகளும், இலிங்கஸ்தாபநாதிசகலதேவதாஸ்தாபநங்களும், நித்தியோற்சவ,மாசோற்சவ, ரதோற்சவ மாதியான கிரியைகளும், புஷ்ப, கந்த, தூப, மது, இக்ஷு, நாளிகேர, க்ஷீர, ரசநீசூர்ண, கிருத, தைல, ஜலவநமென்னும் சிவன் ஏகாதசவிதோவுற்சாகங்களும் விசாரித்தறிபவன் வீரசைவனும்.

இவைகளாலுண்டாகும் பயன்யாதெனின், சூரியனுல் ஆரோக்கியாதிகளும்,இந்திரனுல் சௌபாக்கியாதிகளும், அக்கினியால் ஐஸ்வரியாதிகளும், இயமனுல் பிதிர்யாநாதிகளும்,வாயுவால் பலமாதிகளும். துர்க்கையால் விஜயாதிகளும், சரஸ்வதியால் வாக்குசித்தியாதிகளும், இலட்சுமியால் சம்பத்தாதிகளும், சண்முகனுல் இஷ்டசித்தியாதிகளும்,சந்திரனுல் கீர்த்திசித்தசுத்தியாதிகளும், பிரமனுல் பிராமண்ணிய சாந்தியாதி சத்குணங்களும், விஷ்ணுவால் வேண்டிய முமுக்ஷுத்துவாதிகளும், விக்கிநேச்சுவரனுல் காரியசித்திகுருபத்தியாதிகளும்,ஸ்ரீ



குருவினுல் சிரவணுதி ஞானசாதநங்களும், ஸ்ரீபார்வதியால் சம்பத்விவேகாதிகளும், ஸ்ரீசிவனுல் போகஞானமோக்ஷாதிகளுமான எல்லாம், சகர்ம்மநிஷ்கர்ம்ம கிரியாபேதத்தினுல் சித்திக்குமென்பதாம்.

## ௪ - வது. விபூதிமாந்மியம்.

### கோக்களினியல்பு.

பின்னும் அந்தச் சைவக் கிரியைகளுக் கெல்லாம், ஸ்ரீமத் விபூதிதாரணமே முக்கியமாகும் அந்த விதானமுஞ் சுத்தசைவனறியவேண்டும்.

சத்தியாதிபஞ்சப்பிரமம்,பிருதிவியாதி பஞ்சபூதங்களிலிருந்து கிரமத்தில் - கபிலவர்ணத்தின் நந்தை, கிருஷணவர்ணத்தின் பத்திரா, இரத்தவர்ணத்தின் சுரபி, சுவேதவர்ணத்தின் சுசீலை, சித்திரவர்ணத்தின் சுமனையென்னும் கிரிசாங்காதிதோஷரஹிதமான சுலக்ஷணமுள்ள கோக்களினிடத்திலுதித்த கோமயமே யோக்கியமானதாம்.

### கோமயத்தின் இயல்புமுதலியன.

முற்கூறிய கோமயம் நவீனமான துர்க்கந்தாதிதோஷமில்லாததாயிருப்பதைப் பிரணவ பூருவமாகச் சத்தியாதி பஞ்சப்பிர்ம்ம மந்திரக்கிரமமாகக் கிரஹண, கவளன, சோஷண, தகன, சோதனமென்னும, பஞ்சக்கிரியைகளினுல், விபூதி, பஜிதம், பஸ்மம், க்ஷார, இரக்ஷை என்னும் பஞ்ச விபூதிகளைக் கிரமத்தில் தகிப்பதாம்.மேற்கூறிய விபூதியாதிநாமதேயங்களுக்கு, ஐஸ்வரியகாரணத்துவத்தினுல் விபூதியென்றும், சர்வாவயவபாசகத்தினுல் பஜிதமென்றும், சர்வாகபக்தஜநத்துவத்தினுல் பஸ்மமென்றும், ஆபத்திரக்ஷார்த்தத்தினுல் க்ஷாரமென்றும், பூதாதிபீதிரக்ஷணத்துவத்தினுல் ரக்ஷையென்றுங் காரணப்பெயர்வந்தன.

## விபூதியின் பஞ்சகற்பம்.

நந்தைமுதலான ஐந்து கோவர்ணக்கிரமமான விபூதியாதி ஐந்தும், நித்திய, நைமித்திய, காமிய, பிராயச்சித்த, முத்திகளென்னும் பஞ்சக்கிரியைகளுக்கும் கிரமத்தில் யோக்கியமான சமஸ்த பஜிதங்களானதே கற்பம், அநுகற்பம், உபகற்பம், அகற்பமென நான்கு திறமாம்.

அவைபூருவோக்த கிரஹண கவளனுதி விதிகளிற் செய்ததே கற்பமாம். வநத்திலுலர்ந்த கோமயத்தைப் பொடிசெய்து தரிப்பதே அநுகற்பமாம். முன் தகனமானதைப் பின்னும் வஸ்திரத்தினுல் சோதித்துக் கோமூத்திரத்திற் கலந்து, உருண்டைசெய்து முன்விதிப்படி தகித்துக் கொள்வதே உபகற்பமாகும். அந்நியராற்செய்யப்பட்டதே அகற்பமாம்.

## வர்ணுச்சிரமங்களுக்குரியவிபூதிகள்.

பிர்ம்ம, க்ஷத்திரிய,வைசியர்களுக்கு அக்கினிஹோத்திரசபூதியோக்கியமாம் கிரகஸ்தாச்சிரமிகளுக்கு விரசாநலாக்கினி, ஔபாசநாக்கினிகளின் விபூதியோக்கியமாம். பிரமசாரிகளுக்குச் சமிதாக்கினியின்பஸ்மம் யோக்கியமாம். சூத்திரர்களுக்குச் சுரோத்திரியாகார பசநாக்கினியின் பஜிதம் யோக்கியமாம். மற்றையோருக்குத் தாவாக்கினி யுதித்த பஸ்மம் யோக்கியமாம்.யதீச்சுரர்களுக்கு எல்லாவிபூதியும்யோக்கியமாம். அதீதாச்சிரமிகளுக்கு மசாநபஸ்பம் யோக்கியமாம். சமஸ்தருக்கும் தேவாலயஸ்தித பஜிதம்யோக்கியமாம்.

## விபூதியின் ஸ்நாநாதிவிதிகள்.

அந்த விபூதி ஸ்நாநம், உத்தூளனம், தாரணம் என மூன்றாம்.



ஸ்நாநமாவது அதை ஆசரிக்கிறவன், முதல் அஸ்தபாதஞ் சுத்திசெய்து சுவஸ்தலத்தில் நல்லாசநத்திருந்து, பிராணயாமத் திரயஞ்செய்து, பின்பஸ்மஸ்நாநஞ் செய்கிறேனென்றுசங்கற்பித்துக்கொண்டு திடமான, குத, வில்வ, அசோக, சிலா, வஸ்திராதி ஆதநங்களிலிருந்து, ரசிதமான ஆதாரத்தில் சுவஸ்திதமாக இருக்கின்ற ஸ்ரீமத்விபூதியைக் குரங்கமுத்திரையினுல் சத்தியாதி பஞ்சப்பிரம்ம மந்திர பூருவகமாக எடுத்து வாம அஸ்தத்தில் வைத்துக்கொண்டு,நமஸ்கார மந்திரத்தை உச்சரித்து, தக்ஷண அஸ்தத்தினுலேமூடி வலதுதொடையின்மேல்வைத்து மூலமந்திரத்தினுல் அல்லது அக்கினிமுதலான மந்திரங்களினுலாவது ஏழுதரம் மந்திரித்து மாநஸ்தோகதேயென்னும் மந்திரத்தினுலெடுத்துச் சிரசு,முகம்,இருதயம்,குய்யம்,பாதம், சர்வ்வாங்கமென்னும் ஆறுஸ்தானங்களில் அந்தந்தமந்திரோற்சாரணத்தால் கிரமத்தில் ஈசாநாதிபஞ்சப்பிர்ம்ம பிரணவ மந்திரங்களில் சிருஷ்டி, ஸ்திதி, சங்காரக் கிரமங்களை யறிந்து சம்புரோக்ஷணங்கள் செய்வதே ஸ்நாநமாம்.

உத்தூளனமாவது, மற்று மந்தச் சிரமுதலிய ஆறுஸ்தானங்களில் அந்தந்தமந்திரோற் சாரணக் கிரமத்தினுல், நான்கு, அல்லது ஐந்து எட்டு, பதின்மூன்றுதரம் ஒரேவேளையில் லேபனஞ் செய்வதே உத்தூளனமாம்.

தாரணமாவது,சீதளமான மந்திரோதகமிசிரமான விபூதியை மூலமந்திரம், திரியாயுஷ்மந்திரம், திரியம்பகமந்திரங்களை யுச்சரித்துச், சிவமூர்த்தியான யுக்தனுகித் திரிபுண்டரதாரண ஸ்தாநங்களில் தரிக்கவேண்டும்.

## திரிபுண்டரஸ்தாநவிவரம்.

திரிபுண்டரஸ்தானங்களெவையெனின், மூர்த்தினி,லலாடம்,கர்ணத்துவயம்,நேத்திரத்துவயம்,கிராணம்

முகம், வாகுத்துவயம், புஜத்துவயம், மணிபந்தத்து
வயம், ஸ்தநத்துவயம். வக்ஷம், உதரம், பாரிசத்துவய
ம், நாபி, கண்டம், பாயு, புருஷ்டம், ஊருத்துவயம், சா
நுத்துவயம், சங்கத்துவயம், பாதத்துவயம் என்னும்
(௩௨) ஸ்தாநங்கள்.

அல்லது, மத்தகம், அளிகம், கிரீவம், வாகுத்துவ
யம், இதயம், கர்ணத்துவயம், மணிபந்தத்துவயம், ஓஷ்
டத்துவயம், புஜத்துவயம், அபரம், நாபி, என்னும் (௧௬)
ஸ்தாநங்களும்.

அல்லது; சிரசு, பாலம், கண்டம், வாகுத்துவய
ம், இதயம், நாபி, புருஷ்டம், என்னும், (அ) ஸ்தானங்க
ளும்.

மேலும், சிரசு, லலாடம், சோத்திரத்துவயம். கண்
டம், புஜத்துவயம், வக்ஷம், புருஷ்டம், நாபி, கிராணம்,
என்னும் (௧௧) ஸ்தானங்களுமாம்.

இவற்றுள் (௧௧) ஸ்தாநங்களேமுக்கியமாகும். ஸ்தி
தபத்மாசநசீநரான, சுத்தபடிக சந்நிபரான, கபர்த்த, ச
ந்திரகலாபிரசந்நவதந, நீலக்கிரீவ, க்ஷௌமாம்பர, சர்ப்
பாபரணங்களுள்ள, மிருகி, டங்க, வரதாபயபாணியான
சர்வ்வலக்ஷண சம்பந்நரான, பரமாத்ம, சிவ, மஹேச்சு
வர, ருத்திர, ஸ்ரீகண்ட, சம்பு, ஈச்சுவர, மஹாதேவ, பசு
பதி, சங்கர, விரஷபத்துவஜனென்னும், ருத்திரர்களைச், சிர
சு, முதலானஏகாதசஸ்தாநங்களிலும்இருத்திஸ் மரித்து
த் திரிபுண்டரந்தரிப்பதே தாரணமாம். பிராமணரான
சதுராச்சிரமிகளுக்குச் சர்வ்வாங்க உத்தூளனமும், க்ஷ
த்திரியருக்கு முகந் தவிரச்சர்வ்வாங்க உத்தூளனமும்;
வைசியருக்குலலாடமாத்திர முத்தூளனமும், உரித்தா
ம். சூத்திருக்குத் தாரணமுரித்தாம்.



## திரிபுண்டரந்தரிக்கும்வகை.

திரிபுண்டரதாரணஞ் செய்யும்வகை, தக்ஷணகரத்
தின், தற்சநி, மத்திமை, அநாமிகை யென்னும் அங்கு
லித்திரயங்களால், அலோம, விலோமமாக, அகாரமே
அநாமிகை, உகாரமேமத்திமை, மகாரமே தற்சநி எ
ன்னும் பாவனையின் திரயங்குலிகளால், அங்கத்திரயம்
அக்ஷரத்திரயம், குணத்திரயம், லோகத்திரயம், ஆத்து
மத்திரயம், வேதத்திரயம், காலத்திரயம், ருத்திரத்திரய
ம், என்னும், தேவதாத்திரயாத்மகமான, அநுசந்தாந
பூர்வ்வமாகத்திரிரேகையும், ஷடாங்குலப் பிரமாணமா
க, நேத்திர யுக்மப்பிரமாணமாக லலாடாந்தம், கடின,
மலின, வக்ர, சிந்ந, தூர, கூடினதாகிய ஆறுதோஷர
கிதங்களாய், நய, சுப்பிர, நிரல், சாந்திர, சமீப, பிந்நமெ
ன்னும் ஆறு லக்ஷணங்களை யுடையதாய்த் தரிப்பதாம்.

## நான்குவர்ணத்தாருந்தரிக்கும்வகை.

பிராமணர் ஆறங்குலப் பிரமாணமும், க்ஷத்திரியர்
நான்கங்குலப் பிரமாணமும், வைசியர் இரண்டங்குலப்
பிரமாணமும், சூத்திரர் ஓரங்குலப் பிரமாணமும், திரிபு
ண்டரந் தரிப்பது தாரணையாகும்.

மேலும் கிரகஸ்தரும் ஸ்திரீகளும் திரிசந்தியாகா
லமும் ஜலமிசிரமாக விபூதிதரிக்கவேண்டும். யதீச்சுரர்
எப்போதும் ஜலமிசிரமில்லாமல் தரிக்கவேண்டும். வாந
ப்பிரஸ்தரும், கந்நிகைகளும், தீக்ஷாஹீநரும், மத்தியா
ந்நம் வரையில் ஜலமிசிரமாகவும், அதன்மேல் கேவல
விபூதியே தரிக்கவேண்டும்.

முற்கூறிய ஸ்நாந உத்தூளன தாரணங்களைக் கிர
மத்தினுல் விதியுக்தமாக ஸ்ரீமத்விபூதி தரிப்பதே, சிரோ
விருதமென்றும், பாசுபத விரதமென்றும், பெயர்பெற்
றுத் தோஷரோகாதி பீதிகளைவிடுவித்துப் போகமோ

க்ஷப்பிரதாவென்று வேதாகம புராணங்களிடத்தில் பிரசித்தமாகச் சொல்லப்பட் டிருக்கின்றது.

இப்படியே சமஸ்த மநு முநீச்சுவரர் தேவதைகளும், அர விசிஷ்டமென்று, தரிப்பார்கள். அநுஞ்ஞாகிருஷ்ணார்த்தம், மங்களார்த்தம், பௌத்திரார்த்தம், சிவார்த்தமாகப் பிராமணராதி வர்ணஸ்தரும், பிரமசரியாதி ஆச்சிரமிகளும் சாங்கியாதி மதாபிமாநிகளும், சர்வதா ஸ்ரீமத் விபூதிதரிக்கத் தக்கதென்று விஸ்வாசிக்க வேண்டும்.

## ௫ - வது. உருத்திராக்ஷமாந்மியம்.

### உருத்திராக்ஷோற்பத்திமுதலியன.

இதன்மேல் உருத்திராக்ஷதாரணமே கர்த்தவ்வியமாகும். அந்தவிதாநமுஞ் சுத்தசைவன் அறியவேண்டும். அது திரிபுரதகன லீலாசமயத்தில் ஈச்சுவரன் சந்திர சூரியாக்கிநி ரூபலோசநத் திரயத்திலான ஜலபிந்துக்களிலிருந்து, கிரமத்தில் சுப்பிரவர்ணத்தில் சோடசவிதமாயும், இரத்தவர்ணத்தில் துவாதசபேதமாயும், கிருஷ்ணவர்ணத்தில் தசபேதமாயுமிருக்கும், உருத்திராக்ஷங்களுடைய, நாமோற்சாரண தரிசந, பரிசந, தாரணத்தினல், உத்தரோத்தரமான அதிக புண்ணியங்களைக் கொடுக்க உலோகோபகாரமாகச் சநித்த, உருத்திராக்ஷங்களைக் கோவைசெய்யும்போது, மணிகளின் உந்நத தாநமே முகங்கள். நிமீலநஸ்தாநமே புருஷ்டங்களாம். முக கணித மறிவதற்கு ரேகைகளே முகங்களாம். மணிகளின்மூலமே பிர்ம்மா, நாளமேவிஷ்ணு, முகமேஉருத்திரன், கேசரங்களே சகலதேவதைகளாம். அதையறியும் லக்ஷணங்களை உபதேச கிரமத்தாலறிந்து பரீக்ஷித்துப்பிரக்ஷாளனுதி விதிகளால் சரஞ்செய்வதாம்.



### உருத்திராக்ஷமணியும் அங்கமுதலியன.

உருத்திராக்ஷமணிவோன் ஸ்நாநாதிகளால் சுசியாகவிருந்து சமஸ்த பாபக்ஷயார்த்தமாகச் சிவஞாந சித்தியார்த்தமாகச் சித்தசுத்தியாகவென்று சங்கற்பித்துக் கொண்டு, சிகைக்கு ஏகமுகமணி யொன்றும், மூர்த்திக்கு (௨) முகமணி (௰௩)ம், சிரோ ஊர்த்துவத்துக்கு (௰௧) முகமணி(௩௬) ம், கர்ணங்களுக்கு (௫)(௭) (௰) முகமணிகளில் ஏதாவது ஒவ்வொன்றும், கண்டத்துக்கு (௮)முகமணி(௩௨)ம்,உதரத்துக்கு(௬)முகமணி(௫௰)-ம், வாகுத் துவயங்களுக்கு (௰௩) முகமணி (௰௬) (௰௬) -ம், மணிபந்தத் துவயத்துக்கு (௯) முகமணி (௰௨)(௰௨)-ம், யக்ஞோப வீதத்துக்கு (௰௪) முகமணி (௱௮) ம், உரத்துக்கு எந்த முகமணியாயினும் (௫௪) ம், அந்தந்தமந்திரபூருவகமாகத் தரிப்பதாம். முற்கூறிய கிரமமுகமணிகள் கிட்டாதாயின், எந்தமுக மணிகளாயினும், அந்தந்த ஸ்தாநங்களுக்குச் சொன்ன கணக்கின்படி தப்பாது தரிக்கவேண்டும்.

### அவற்றின்தேவதைகளும்பயனும்.

ஏகமுகமணி பரமசிவன், பிர்ம்மஹத்தியாதி பாதகங்களைக் கெடுத்துச் சர்வ்வசித்திகளைக் கொடுக்கும். துவிமுகமணி ஈச்சுவரன், ஈசாநியர்கள், கோஹத்தியைப் பரிகரிக்கும். திரிமுகமணி அக்கிநி ஸ்திரிஹத்தியைக்கெடுக்கும். சதுர்முகமணி பிரமன் புருஷஹத்தியைத்தொலைக்கும். பஞ்சமுகமணி சதாசிவன் அபக்ஷியா பக்ஷணுதி தோஷங்களை நிவர்த்திக்கும். ஷண்முகமணி ஷண்முகன் புருண ஹத்தியாதிபாதகங்களைக் கெடுக்கும். சப்த முகமணி அநந்தன், கோஹத்தி சுவர்ணஸ்தேயாதி சகலகல்மஷங்களையுங் கெடுக்கும். அஷ்டமுகமணி விக்கிநேச்சுவரன் சமஸ்தபாதகங்களையும் சர்வ்வவிக்

கிரங்களையும் நிவர்த்தி செய்து முத்திகொடுக்கும். நவமுகமணி வைரவன், சகலகல்மஷங்களையுங் களைந்து புத்தி முத்திகளைக் கொடுக்கும். தசமுகமணி மாதவன், பூதபேதாள, மாரி, கண, பிர்ம்மராக்ஷஸ், பந்நகாதி பீதிகளை விடுவிக்கும். ஏகாதசமுகமணி ஏகாதசருத்திரர், அச்சுவமேதாதி புண்ணியங்களைக் கொடுக்கும். துவாதச முகமணி துவாத சாதித்தர்கள்- அக்கிநி, சோர, வியாக்கிர, கட்காதி பாதைகளைக்கெடுக்கும் திரயோதசமுகமணி மகேச்சுவரன் துர்க்கிர்த்தியங்களை நீக்கி, விவஹாரசித்தி, சுவர்ணதாநாதிபலன்கள், ரஃ ரசாயன, வாத, வசியாதிகளைக் கொடுக்கும். சதுர்த்தசமுகமணி மநுக்கள், சகலதேவதா பூச்சியத்துவப்பிரதாரி யென்றறிவது.

## ஏகமுகாதிமணிகளின்மந்திரங்கள்.

ஓம், ஹராம், ஶாம், ஹோம், ஹ்ரீம், ஹ்ரௌம், ஶ்ரீம், வ்ரூம், ஐம், வம், ஷோம், க்ஷாம், உம என்னுங் கிரமத்தின் அந்தந்த மந்திரபூர்வ்வமாகப் பிராமணர் முதலியோர்கள் சந்தியாவந்தநாதி கிரியாகாலங்களில் சார்வ்வதா தரிக்கவேண்டுமென்பதே நிச்சயமென்றறி.

## கூ - வது. பஞ்சாக்ஷரமாந்மியம்.

இப்படிப் பசித உருத்திராக்ஷ தாரணநிஷ்டனான சுத்தசைவன் பஞ்சாக்ஷராதி மந்திரசெப விதிகளை முக்கியமாயறியவேண்டும்.

## ஷட்விததாரணங்கள்.

மேலும் சித்த, சாத்திய, சுசித்த, விசித்த, மந்திரசித்தி, சூசகமான மாதுருகாசக்குரோததாரணங்களும், கூர்ம்மசக்குரோத தாரணங்களும், ககாகார விதாநதாரணங்களும், மந்திரஜநந ஸ்தாநமான மகாகாசக் குரோததாரணங்களும், மந்திரார்ச்சநாதி கரணமான யந்திரோத்தாரணங்களும், மந்திராநுசந்தான ஆஸ்ரேயமான கடோத்தாரணாதிகளும், பரீக்ஷித்து அறியவேண்டும்.



சுத்தப்பிரசாத, மூலப்பிரசாத, தத்துவப்பிரசாத, ஆதிப்பிரசாத, ஆத்மப்பிரசாதமென்னுஞ் சிருஷ்டிரூப பஞ்ச சிவமந்திரங்களும், மோக்ஷத, அபிவிர்த்தி, காமிய, சாந்திக, பௌஷிகமென்னும் பஞ்ச சதாசிவ ரூபஸ்திதி மந்திரங்களும், சிருஷ்டி, ஸ்திதி, லயமென்னும் மஹேசசுவரரூப திரிவிதசங்காரமந்திரங்களும் அறியவேண்டும்.

சாகல்லியப்பிரணவம், சாம்பவப்பிரணவம், சௌக்கியப்பிரணவம், சர்வ்வசிப்பிரணவம், சாயுச்சியப்பிரணவமென்னும் பஞ்சப்பிரணவ மந்திரங்களும்,

மூலபஞ்சாக்ஷர, ஸ்தூலபஞ்சாக்ஷர, சூக்ஷமபஞ்சாக்ஷர, மாயாக்கியபஞ்சாக்ஷர, பிரசாதபஞ்சாக்ஷரமென்னும் பஞ்சபஞ்சாக்ஷர மந்திரங்களும்,

சிவாஸ்திரம், க்ஷுரிகாஸ்திரம், பாசுபதாஸ்திரம், வியோமாஸ்திரம், அகோராஸ்திரமென்னும் பஞ்சாஸ்திர மந்திரங்களும்,

சத்தியோசாதம், வாமம், அகோரம், தற்புருஷம், ஈசாநமென்னும் பஞ்சப் பிர்ம்மமந்திரங்களும்,

காயத்திரி, மிருத்தியுஞ்சய, தக்ஷணாமூர்த்தி, நீலகண்ட, சரப, வீர, விக்கிநேச்சுவர, விசாக, வித்தியேச்சுவர, பிர்ம்ம, விஷ்ணு, சூரிய, வைரவாதி மகா மந்திரங்களும்,

துர்க்கை, சரஸ்வதி, இலக்ஷ்மி, கௌரி, அந்நபுவநேச்சுவரி, புவநேச்சுவரி, அஸ்வாரூடி, திரிபுராம்பிகை, ஆதிமகாசத்தி மந்திரங்களும்,

சித்தசாவர, சத்திசாவர, மேருதந்திர, சாகிநிதந்திர, டாகிநிதந்திர, கூஷ்மாண்டதந்திர, சல்லியதந்திராதி சித்த மந்திரங்களும்,

ஆந்திர, திரவிடாதி இலெளகிக பேத தேசபாஷா மந்திரங்களும் வெவ்வேறாக விவேகித்துப் பார்க்கவேண்டும்.

மேலும், அந்த மந்திரங்கள், இருதயம், சிரசு, சிகை. கவசம், நேத்திரம், அஸ்திரமென்னும் ஷடங்கக்கிரமத்தின், நமஸ், ஹர, வஷட், ஹூம், வௌஷடு, பட் என்னும் ஷட்பல்லவப்பிரயோகங்களும், சுப்பிர, பீத, ரத்த ஸ்படிக, சாமள, கிருஷ்ணமென்னுங் கிரமத்தால் அந்தந்த இருதயாதி அங்கவர்ணங்களும், பஞ்சாங்கமந்திரங்களுக்கே நேத்திரபல்லவம் விடவேண்டுமென்றும், அங்கஹீந மந்திரங்களுக்கு அங்கங் கற்பித்துக்கொள்ளவேண்டுமென்றும் நிச்சயித்துப், பின்னும் அந்த மந்திரஷட்பல்லவங்களில், கோப, உபசாந்தி, பூஜாவிதாநத்துக்கு இருதயபல்லவமும், ஓம வைசியாதிகளுக்குச் சிரபல்லவமும், இலாபாலாபாதிகளுக்குச் சிகாபல்லவமும், பேதந, மாரணப்பிரீதி நாசாதிகளுக்குக் கவசபல்லவமும், மோஹந, உத்தீபந, புஷ்டி, விஷயாதிகளுக்கு நேத்திரபல்லவமும், விக்கிந, கிரக, உச்சாடநாதிகளுக்கு அஸ்திரபல்லவமுமான மந்திராந்தத்தில் பிரயோகஞ்செய்ய வேண்டுமென்பதே விதிகளாம்.

## மந்திரசமுஸ்காரம்.

மேலும் வாதுளம், சாரதாதிலகம், மந்திரதேவதாப்பிரகாசிகை, பிரபஞ்சசாராதி மந்திரசகஸ்ரோத்தம், மஹாசக்கரகதமான மாத்திரைகளிலிருந்து மந்திரமுத்தரிப்பதே செநம், என்றும், பிரணவாந்தரிதஞ்செய்து செபிப்பதுவே ஜீவநம், என்றும், பின்னும் மந்திர வர்ணங்களையெழுதி வெவ்வேறே அந்தவர்ணங்களின், சந்தன, உதகங்களிலிருந்து வாயுவினல், செய்வது புடேவதாடந மென்றும், அந்த மந்திராக்ஷரங்களைக்



கணக்கிட்டுக் கரவீரபுஷ்பத்தினல் வாயுவின் திக்கிலிடுவது போதநமென்றும், பின்னும்அந்த மந்திராக்ஷரங்களைச் சங்கியைசெய்து அச்சுவத்தபல்லவங்களினல் மந்திராக்ஷரங்களுக்கு மந்திரோதகம் புரோக்ஷிப்பதே அபிஷேகமென்றும், மற்றும்அந்தமந்திரத்தை மநதில் ஸ்மரித்து ஆத்மவியோமாக்கிநியை மநயுகதண்டில், ஜோதிர்மாநூர்மதஃஎன்னும், மந்திரத்தில் சிவமந்திரமல்லாதமற்றமந்திரங்களினலே மலத்திரயமும் தகிப்பதே விமலீகரணமென்றும், மற்றச் சோதிர்மாநூர்மதஃ மந்திரத்தினல் மந்திரிக்கப்பட்ட குசோதகத்திருந்து மந்திராக்ஷரங்களுக்குப் பிரத்தியேகமாகச் சம்புரோக்ஷணஞ்செய்தலே ஆப்பியாயநமென்றும், மற்றமந்திரத்துக்கு மந்திரோதகத்திருந்து தர்ப்பணங் கொடுப்பதேதர்ப்பணமென்றும், "தாரா மாயா ரமா யோஹோ, மநோ தீபந முச்சியதே" என்னுமந்திரம் தீபநமென்றும், மேல்செபிக்கிறதற்கு யோக்கியமானமந்திரமும் பிரகடநஞ்செய்யாதிருப்பதே குப்தமென்றும், சொல்லுகிறமந்திர தச சமுஸ்காரங்களையும் விசாரித்துப் பின்னுஞ் சகலமந்திரங்களிலும் முக்கியமானது பிரணவமென்றே யறியவேண்டும்.

## எ - வது. பிரணவவிதி.

முக்கியமான பிரணவமே பரப்பிரணவம், அபரப்பிரணவம் எனத்துவிதமாம்.

அவற்றுள் பரப்பிரணவம் அவாச்சியமான சத்தியக்ஞாநாதி லக்ஷணமுள்ள பரப்பிரணவமாம்.

அபரப்பிரணவம் வாசகமான சப்தரூபமாகிப் பிர்ம்ம, விஷ்ணு, ருத்திர, ஈச்சுவர, சதாசிவாதி தேவதைகளான, ரத்த, சுக்கில, கிருஷ்ண, சோதி, ஸ்படிகமென்னும்

பஞ்ச வர்ணக்கிரமமுள்ள, அகார, உகார, மகார, பிந்து
நாதமென்னும் பஞ்சாக்ஷராத்மகத்துவத்தின் தாரக, த
ண்டக,குண்டலாகார, அர்த்தசந்திராகார,தர்ப்பணாகார,
சோதியாகாரமென்னும் ஆறுருபத்தினால்,

## பிரணவபரியாயநாமங்கள்.

ஓங்காரமென்றும், பிர்ம்மமென்றும், ஞாநமென்று
ம், சிவாத்மகமென்றும்,சர்வ்வாத்மகமென்றும்,சர்வ்வவி
த்தியாதி பீஜமென்றும், தேஜோ பீஜமென்றும், மூர்த்தி
பீஜமென்றும், நிஷ்களமென்றும், நாதமென்றும், நாதா
தியென்றும்,ஹ்ரீங்நாதமென்றும்,வேதாதியென்றும்,வே
தபூமியென்றும், மந்திரப்பிராணனென்றும், பிர்ம்மமூர்
த்தியென்றும், ஆத்மத்திரயமென்றும், இவைமுதலான
பரியாய நாமங்களுள்ளதாகவிருக்கும்.

பின்னும் அந்த மந்திர சித்தியார்த்தமாகச், செப
ப்பிராரம்பத்தினில் ஸ்நாநாதி விபூதியுக்தனாகிப், பிர்ம்மா
ரண்ணியம், நதீதீராதி சுத்தஸ்தலத்திலிருந்து, பிர்ம்மவி
ருக்ஷத்தை ஆசரித்துத் திரியங்முகம், உதோன்முகனாக
ச்சுவஸ்தாநத்திலிருந்து பிராணாயாமத்திரயஞ்செய்து, அ
ந்தமந்திரத்துக்குப், பரமாதிகாயத்திரி,தேவிகாயத்திரி, சந்
தஸ், பரமசிவன் அதிதேவதை, ஸும்பீஜம், உம்சத்தி, மம்
கீலகம், மோக்ஷப்பிரசாதாத்மனே சுவாஹா வென்று
முதல் ஸ்மரித்து, அந்த மந்திரத்தினால், கரத்துவய அங்
குஷ்டாதி கநிஷ்டாந்தமான அங்குலிகளின் ஆதிமத்தி
யாந்தமான பருவங்களின் பிரத்தியேக பிந்துயுக்தமான,
அகார, உகார, மகாரங்களால் நியாசஞ்செய்து,பிந்து யு
க்தப் பிரணவமாகச் சர்வ்வாங்குலிகளில் நியாசஞ்செய்
து, அந்தப் பிரணவத்தினால் கரதல கரபுருஷ்டங்களைச்
சமற்சநங்கள் செய்து இப்படிக் கரநியாசஞ்செய்து,



மேல் நாபி, இருதயம், மூர்த்திநியில் கிரமத்தில் பி
ந்துயுக்தமாக அகார, உகார, மகாரங்களால் தேகநியா
சஞ்செய்து, பின் மூர்த்திநியாதி பாதாந்தமாகப்பிந்துசகி
த பிரணவத்தால் அங்கநியாசஞ் செய்து, ஓம் புருராக்கி
நியாத்மனே இருதயாயநம: என்று தக்ஷணகர சதுரங்
குலிகளால் இருதய ஸ்பரிசநஞ்செய்து இருதயத்திருந்
து மந்திரதேவதைக்கு நமஸ்கரித்து ஓம் ரூவோ வாயுவா
த்மனே சிரசே சுவாஹாவென்று தக்ஷணகர சதுரங்குலி
களினால்சிரசிலிருந்த மந்திரதேவதை ஸ்பரிசநத்தால்அங்
கிருந்த பரமசந்திராமிருதத்தை நிசமூலாக்கிநியால்விளை
வித்து ஓம் சுவாஹா சூரியாத்மனே சிகாயவஷட்என்று
சிகையிலிருந்த ஊர்த்தஸ்வலநஸ்வபாவபரமசிவசைதந்நி
யமும்;ஊர்த்தாங்குஷ்டத்தினால் தொட்டு, ஓம் மஹாபிர்
ம்மாத்மனேகவசாயஹூம் என்றுஅதோமுக சிவ சைத
ந்நியமும், தன்சரீரத்தின் பிரதிரோம கூபங்களிலும் நிர
ம்பி யிருந்தாற்போலக் கரத்துவயத்தின் தற்சநிகளால்
வச்சிரகவசத்தின் நிரோதித்து ஓம் ஜநஞாநாத்மனே நே
த்திராயயை வௌஷடுஎன்று தக்ஷணகரமத்தியாங்தத்திரி
யங்குலிகளினால் நேத்திரபரிசநத்தால் பரமசிவசைதந்நி
ய மும்,சர்வ்வத்திலும்ஸ்புரிப்பதுபோல அபிவேத்தியஞ்
செய்து, ஓம் தபஸத்திய சத்தியாத்மனே அஸ்திராயபடு
என்று வாகுமூலத்தினில் அங்குஷ்டதற்சநிகளால் தொ
நியாகும்படி அஸ்திரஞ்செய்து, பூர்வ்வாதி தசதிக்குகளி
ல் ரக்ஷணார்த்தமாகப் பரசிவசைதந்நிய ரூபமான அஸ்தி
ரத்தை இந்திராதி லோகபாலகர் ஆஸ்தங்களிலிருத்தி, ஓம்
ரூஸ்வாஹா அஸ்திராய பட்என்று அந்தந்தத் திக்குப்
பாலகர்களுக்கு அந்நியோந்நிய சம்பந்தஞ் செய்வதே ஷ
டாங்க பல்லவார்த்தக் கிரமமாம். இஃதெல்லா மந்திரங்க
ளுக்கும் ஒக்கும். இதே பிர்ம்மகவசமாம். இந்தப் பிர

ம்மகவசந் தரித்தவனே பிர்ம்மாஸ்திர, காலதண்ட, வச்சிராயுதங்களினால் பேதிக்கப்படானாகிச் சுராசுராதியர்களால் பூச்சியனாவான்.

பின்னும் இந்தக் கிரமத்தினால் கரநியாசம், தேகநியாசம், அங்கநியாசஞ் செய்வதால், ஜகமெல்லாந் தப்தாயபிண்டத்தைப்போலப் பிரணவஜோதிவியாப்த மென்ன அநுசந்தானஞ் செய்தாலல்லாமல் தன் மூலாதாராதியகிலசக்கரங்களைப் பேதியான்.

சுஷும்னாநாடி மத்தியகதவித்துருலேகாத்மக பிதுசிந்தனையினாலும், அல்லது இருதயகமலகர்ணிகாக்கிரத சோமசூரியாக்கினி மண்டலத்திரயமத்தியத்தினில் மஹேச்சுவரத் தியாநயுக்தத்தினாலும், (ய) லக்ஷஞ்செபத்தினால் புரச்சரணஞ் செய்ததன்மேல் பிரணவமந்திரஞ் சித்திப்பதாம்.

இஃது சர்வ்வபாபக்ஷயம், ஷட்கர்ம்மசித்தி, அட்டமஹைசுவரியம், சர்வ்வவித்தை முதலிய யதேஷ்டபலன்களைக் கொடுப்பது சத்தியம்.

## அ - துவ. அசபாகாயத்திரி.

அதற்குமேல் அந்த மந்திரத்துக்குள் ஆத்மப்பிரசாதமென்பதே சர்வ்வாத்மரிடத்தில் இரேசக பூரகமெனப் பிராணாபானரூபரவி சசிகளுடன் கூடிச்சரித்து, ஹம்ஸம், ஸோஹம் என்னும் இரண்டுபிரகாரமாகச் சீவன் மந்திரமென்றும், அங்குசமந்திரமென்றும், அசபாகாயத்திரியென்றும் பெயர்பெற்றிருக்கும்.

மேலும், பிராணாயாமத்திரய பூர்வ்வகமாக முதல் அந்தமந்திரத்துக்கு, அங்குசவிருஷ்டி, அவ்வியத்தகாயத்திரி சந்தஸ், பரமாங்குசனே தேவதை, ஹம் பீஜம், சுவாஹாசத்தி, ஸோஹம், கீலகம், பரமாங்குசப் பிரசாதார்த்தமான செபேவிநியோகங்களென்று ஸ்மரித்து



ஹம், ஸாம், சூரியாத்மனே அங்குஷ்டாப்பியாயநமஃ, ஹம்ஸிம் ஸோமாத்மனே தற்சநியாப்பியாயநமஃ, ஹம் ஸூம் நிரஞ்சநாத்மனே மத்தியமாப்பியாயநமஃ, ஹம் ஸைம், நிராபாசாத்மனே அநாமிகாப்பியாயநமஃ, ஹம், ஸௌம் அவ்வியத்தாத்மனே கநிஷ்டிகாப் பியாயநமஃ ஹம் ஸஃ அதநுசூக்ஷுமாத்மனே கரதலகரபுருஷ்டாப்பியாயநமஃ வென்று கரநியாசஞ்செய்து பின்.

முற்கிரமத்தினால் இருதயாதிகராந்தமான ஷடங்கங்களில் அந்தப்பல்லவங்களைக்கூட்டி அங்கநியாசஞ் செய்து, இருதயகமலகர்ணிகா மத்தியத்தினில் சுவேத வர்ணத்தில் பரசு, மிருக, வரதாபயங்களுள்ள கரசதுஷ்டயங்களோடுகூடிச் சர்வ்வலக்ஷண சம்பந்நனான உமாபதியைத் தியாநயுக்தனாகி ஸ்ரீகுரு உபதேசத்தால் அருணோதய சமயத்தில் செபஞ்செய்வது.

அந்த மந்திரசெபஞ் சூரியோதயாதி அஸ்தமன, பரியந்தமான தினம் ஒன்றுக்கு (உயதுசுா) ஆம்.

அவற்றுள் மூலாதாராதி பிர்ம்மரந்திராந்தமான சப்தசக்கரகமலங்களுக்குங்கிரமமாக ஸ்ரீகணபதிக்கு(சுா) பிர்ம்மாவுக்கு(சுத)விஷ்ணுவுக்கு (சுத) உமாபதி மஹேச்சுவரனுக்கு (சுத) ஜீவாத்மாவுக்கு (து)பரமாத்மாவுக்கு (து) ஸ்ரீகுருவுக்கு, (து) ஆக - அசபாகாயத்திரி மந்திர செபம் நிவேதயாமியென்று சங்கற்பித்துச் செபஞ்செய்கிறவர்களுக்குச் சமஸ்தபாவங்களுங் கெட்டு, ஆயுராரோக்கியாதி போகமோக்ஷங்களைக் கொடுக்குமென்பது நிச்சயம்.

## மூலபஞ்சாக்ஷரம்.

அந்த மந்திரங்களுள் மூலபஞ்சாக்ஷரமே முக்கியமாம். அது வித்தையமென்றும், சிவமென்றும், சைவ

மென்றும், சிவ இருதயமென்றும், ருத்திரமென்றும், பரியாய நாமங்களுள்ளதாகி, வேதாகமபுராணங்களுள்பிரசித்தமாகிச் சூக்ஷ்மமந்திரமானாலும் வடபீஜ நியாயம் போல மஹா அர்த்தமுள்ளதாகிச் சகலசிவபக்தருக்குஞ் செபிக்கிறதற்கு யோக்கியமாய்ப் பிரணவபூர்வகமான பூதாதி சகல பஞ்சவர்ணாத்மகமான நகாராதிய காராந்தமான ஆறங்கங்களுள்ளதாகி நிஷ்பிரயாசத்தினால் புத்திமுத்திப்பிரதாவாயிருக்கும்.

மேலுமந்தப் பஞ்சாக்ஷரமந்திரம், முதல் ஸ்ரீகுருமுகத்தால் அர்த்தசமேதமாய் அறிந்து யதாசத்தி குருதக்ஷணைகொடுத்துக் குருவாக்கினையினால்,மந்திரசித்தியார்த்தமாகக்கேட்கப் போகிறசுபமாசாதி விதிகளையாராய்ந்து, ஜலஸ்நாந பஸ்மஸ்நாநாதிகளுஞ் செய்து, தன்தேகபலமறிந்து,சாக மூல பல க்ஷீராதி மிதாகாரனாகி,அக்ஷரமொன்றுக்கு லக்ஷஞ் செபமாகத் திநம் ஒன்றுக்கு (கஉத) செபஞ்செய்பவனாகப் பாலிலாயினும், நெய்யிலாயினும்,பலாசபுஷ்பத்திலாயினும் (தூ)ஓமஞ்செய்து,லக்ஷந்தர்ப்பணமும் புராணயுக்தமாகச் செய்யவேண்டும்.

அல்லது கற்போத்தமாக (உசு) லக்ஷஞ்செபமானாலும், பூர்வ்வோக்த சங்கியாகிரமத்தில் ஓமம் தர்ப்பணம், அதற்கேற்கமிகுதியாகச் செய்யவேண்டும். புறச்சரணைசெய்து பின்திநம் ஒன்றுக்கு (ாஅ)(உாடு)(நா)(நூா) (தூ) (ம்உத) மென்னுஞ் சங்கியா நியமபூர்வ்வகமாக நித்தியசெபஞ்செய்வதற்கு யோக்கியமாகும்.

## கநிஷ்டாதிசெபத்திரயம்.

நியமசங்கியையில் ஈநசெபபலம் இராக்ஷசர் அபகரிப்பார்களாதலால் புறச்சரணை செய்யாதே சங்கியாநியமப்படி, தேகாந்தஞ்செய்யுஞ்செபம் கநிஷ்டமாம். புறச்சரணைசெய்து விடுவது மத்தியமசெபமாம். புறச்ச



ரணைசெய்து அதன்மேல் சங்கியா நியமத்தினால் பிராணாந்தஞ் செய்யுஞ்செபம் உத்தமமாம்.

மேலும் அந்தமந்திர செப பிராரம்பத்தினில், பிராணாயாமத்திரயஞ்செய்து பின் அந்தமந்திரத்துக்கு வாமதேவ ரிஷிபத்ததி சந்தசு, சதாசிவோதேவதா, ஓம் பீஜம், உமாசத்தி, உதாத்தசுவரம், சுவேதவர்ணம் போகமோக்ஷார்த்தமான செபேவிநியோகாவென்று முதல் ஸ்மரித்துப் பிண்டப்பிர்ம்மாண்டங்களில் பூமியாதி ஆத்மாந்தமான ஆறுகிரமத்தால் நகாராதிபிரணவாந்தமான ஆறக்ஷராத்மகமென்று அநுசந்தாநஞ்செய்து பின் அந்த மந்திரத்தினால் கரநியாசஞ்செய்வது.

## சிருஷ்டியாதிகரநியாசங்கள்.

கர நியாசஞ்செய்யும்போது, காத்துவய அங்குஷ்டாதி கநிஷ்டாந்தமாக, யகாராதி நகாராந்தமான பிரத்தியேக பிந்து சமேதமாக மந்திர பீஜங்கள் ஒவ்வொன்றிற்கும் பிந்து சமேதமாகப் பிரணவத்துவயம் ஆதியந்தத்தில் கூட்டி அங்குலிகளின் ஆதியாதி ஆக்கிரபரியந்தஞ் செய்வதே சிருஷ்டி நியாசமாம்.

கநிஷ்டாதி அங்குஷ்டாந்தமாக நகாராதியகாராந்தமான வர்ணங்களை அந்தக்கிரமத்தில் அங்குலிகளின் அக்கிரத்திலிருந்து ஆதிபரியந்தஞ்செய்வதே சங்கார நியாசமாம்.

மத்தியாங்குலியாதி தற்சநியந்தமாகச் சிகாராதிககாராந்தமான அக்ஷரங்களை அந்தக்கிரமத்தால் அங்குலிகளின் மத்தியத்திலிருந்து அக்கிரபரியந்தஞ் செய்வதே ஸ்திதி நியாசமாம்.

பின்னும் அங்குலிகளின் பர்வ்வங்களில் மந்திராக்ஷரங்களின் நியதியினால் உற்பத்தியாதிபேதங்களை யறிந்து நியாசஞ்செய்தலுமொன்று.

பிரத்தியேக அங்குலிகளில் சமபுடஞ்செய்து பிரணவநியாசஞ்செய்வது.

கரத்துவயத்தின் சதுரங்குலிகளில் அங்குஷ்டத்தில் தற்சநியாசஞ் செய்வது. பின் கரத்துவயத்துக்குப் பிந்து யுக்தப்பிரணவத்திரயமும், வாமகரத்தைத்தக்ஷணகரத்திலும், தக்ஷணகரத்தை வாமகரத்திலும், அநுலோமசமற்சநஞ் செய்வதே சிருஷ்டி நியாசமாம். விலோமசமற்சநஞ் செய்வதே சங்காரநியாசமாம்.

## தேகாங்கநியாசங்கள்.

கரநியாசஞ்செய்து, பின் தேகநியாசஞ் செய்யும்வகை மூர்த்திநி,முகம், கண்டம், இருதயம், குய்யம், பாதங்களில் கிரமமாகப்பிரணவாதி யகாராந்தமான பிரத்தியேகபிந்து சமேதமான மந்திராக்ஷரங்களும், பிந்து யுக்தப்பிரணவத்துவயஞ் சமபுடமாகச் செய்வதே சிருஷ்டிநியாசமாம்.

அந்தக்கிரமப்படி பாதாதி மூர்த்திநியாந்தம், பிரணவாதி யகாராந்தமாகச் செய்வதே சங்காரநியாசமாம்.

இருதயம், குய்யம், பாதம், மூர்த்திநி, முகம், கண்டங்களில் கிரமமாகப் பிரணவாதி மகாராந்தமாகச் செய்வதே ஸ்திதி நியாசமாம்.

மேலும், சர்வ்வமந்திரங்களினுலும், சிரசாதி சர்வ்வாங்கநியாசஞ்செய்வதுமொன்று.

## அங்கநியாசம்.

அங்கநியாசத்தில் கநிஷ்டாங்குஷ்ட யோகத்தினுல் இருதயம், அநாமிகாங்குஷ்டயோகத்தினுல் மூர்த்திநி, மத்தியமாங்குஷ்டயோகத்தினுல் சிகை, கரத்துவயதற்சநிகளால் கவசம், தக்ஷணகரமத்தியாந்தாங்குலித்திரயங்களால் நேத்திரத்திரயம், தக்ஷணகரதற்சநியாதி ச



துரங்குலிகளினுல் வாமகரத்தில் தாளத்திரயஞ்செய்து அத்திரங்களும், பிரணவாதி யகாராந்தமான மந்திராக்ஷரங்களில் பூர்வ்வோக்த கிரமப்படி அந்த மந்திரபல்லவார்த்தமறிந்து உடன் கூட்டிச்செய்வதே சிருஷ்டிநியாசமாம்.

மந்திரவர்ணபேதமில்லாமல், அஸ்தாதி இருதயாந்தமாகச் செய்வதே சங்காரநியாசமாம்.

கவசாதிசிகாந்தமாகச் செய்வதேஸ்திதிநியாசமாம்.

## பஞ்சப்பிர்ம்மநியாசம்.

மேலும் ஈசாநாதி சத்தியோ சாதாந்தமாகச் செய்வதே சிருஷ்டி, சத்தியோசாதாதி ஈசாநாந்தமாகச் செய்வதே சங்காரம், அகோராதி தற்புருஷாந்தமாகச் செய்வதே ஸ்திதிநியாசங்களாம். இந்தப் பஞ்சப்பிர்ம்ம நியாசங்களைக்கர தேக அங்கங்களினுலுஞ்செய்யவேண்டும்.மேலும் பூர்வ்வாதிஊர்த்தாந்தமான பஞ்சதிக்குகளில் நகாராதி, யகாராந்தமான அக்ஷரங்களைக்கிரமமாகஸ்தாபிப்பது.

மேலும் அங்குஷ்ட தற்சநிகளால் தொநியாகும்படி இந்திராதி தசதிக்குகளில் அஸ்திரபல்லவம் பிரோரிப்பது.

## சிருஷ்டியாதிமந்திரங்கள்.

யகாராதி நகாராந்தமானதே சிருஷ்டி மந்திரமாம்.
நகாராதி யகாராந்தமானதே சங்காரமந்திரமாம்.
சிகாராதி மகாராந்தமானதே ஸ்திதிமந்திரமாம்.

இவற்றுள் ஸ்திரி சூத்திரர்கள் பிரணவ மில்லாமல் நமாந்தமான ஸ்திதிமந்திரமே செபஞ்செய்யவேண்டும். செய்யும்போது சாம்பசிவனுனும், சதாசிவமூர்த்தியா

னாலும், தாண்டவாகாரமூர்த்தியானாலும், தியானதேவதைகளாகக்கொண்டு தியானித்துச் செபஞ் செய்யவேண்டும்.

இப்படிப் புநற்சரணைசெய்யாவிட்டால் சகலசாங்கிகமாக வில்வவிருக்ஷத்தை ஆசரித்து ஓரோதிநம்செபஞ் செய்தால் அது எல்லா மந்திரங்களுக்கும் புநற்சரணையாமென்று ஈச்சுவரகீதை முதலியவைகளில்சொல்லப்பட்டிருக்கின்றது.

## ஜபிக்குமிடமும்பயனும்.

புநற்சரணையினால் சித்தியான பஞ்சாக்ஷரத்தைப் பர்வ்வதாக்கிரத்தில் லக்ஷஞ்செபித்தால் ஆயுர்விர்த்தி. மகாநதீதீரத்தில் (உ) லக்ஷஞ்செபித்து அறுகு திலம் சீந்தில்களை யனைத்துக் குளிகைசெய்து(௰த)மந்திரித்தோமஞ்செய்யின் ஆயுர்விர்த்தி. அரசமரத்தின்கீழ் (உ) லக்ஷஞ்செபிக்கினுஞ், பிரதிசநிவாரத்திலும் அரசமரத்தை யிரண்டுகையாலும் பிடித்துக்கொண்டு(ாஅ)த்தரம்செபிக்கினும் அபமிருத்தியுகெடும். ஆதித்தனுக்கு அபிமுகமாக லக்ஷஞ்செபித்து அர்க்கபூவினால் (ாஅ) ஓமஞ்செய்யின், சகல வியாதிகளும் நீங்கும். ஒருமாதம் பிரதிதிநமும் உதயசமயத்தில் (ாஅ)த்தரம் செபித்து உதகமந்திரித்துக்கொள்ள உதரநோய்கெடும். பலாசகுசுமத்தால் (௰த) ஓமஞ் செய்யச் சர்வ்வவியாதிகளுங் கெடும். நதீதோயத்தில் பூரணகும்பந் தொட்டுக்கொண்டு (௰த) செபஞ்செய்து அந்தஜலஸ்நாநஞ் செய்யச் சகலநோய்களுந்தீரும். சந்திரசூரிய கிரகணகாலங்களில்சமுத்திரகாமினியான நதிகளில் உபவாசமாகச் சுசியாகவிருந்து, கிரகணதியாந்தம் பரிசுத்தபிர்ம்ம மரிசம் மந்திரித்து (ாஅ) கொள்ள இகத்திலேயே சர்வ்வசுருதி பாரங்கதனுவான். பிராதக்காலையில் ஸ்நாநஞ்செய்து நித்தியகிரியா சம்பந்நனுகப் பலாசபத்திரத்தினில் விபூதி, நெய், பஞ்சகௌவியங்களில் ஒன்றைவைத்து (௲அ) செபஞ்செய்துகொள்ளச்சகலவித்தியாபாரங்கதனுவான். வில்வச் சாயையை ஆசரித்து (௰த) செபஞ்செய்து அந்தப் பலபத்திரகுசுமங்களினால் (௲அ) ஓமம் செய்யச் சகலஐச்சுவரியமு முண்டாம்.



சித்திரமில்லாத பலாசகுசுமத்தினால் (௰த) ஓமஞ்செய்யின் சர்வ்வலக்ஷண சம்பந்நனுவான். பின்னும் அந்தக்குசுமத்தால்(௲அ)ஓமஞ் செய்யின் நக்ஷத்திர கிரக பீடநம் நிவாரணமாகும். ஸ்நாநஞ்செய்து (௰த) செபஞ்செய்து கிருதத்தினால் (ாஅ) ஓமஞ்செய்யின், துர்ச்சொப்பநசாந்தியாம். சந்திரசூரிய கிரஹணகாலங்களில் சிவலிங்கபூசை விதியுக்தமாகச் செய்து, அந்தலிங்க சந்நிதியில்(௰த) செபஞ் செய்யின் சர்வ்வகாமியார்த்த சித்தியாம். பிரதிதிநம் (௰க)வேளை அந்நம் மந்திரித்துக் கொள்ளக்கிருதகிருமிகள் கெடும்.

## செபசங்கியாபலன்.

(ாஅ) செபத்தினால், நித்திய கர்ம்மலோபம், நிஷித்தாந்ந சுவீகார தோஷங்களும் (௰த) ஆதி லக்ஷபரியந்தமான செபத்தினால் மஹாபாதகங்களும், (௫௰த) செபத்தினால் பாதகங்களும்(உளதரு)செபத்தினால் உற்பாதகங்களும்(௫த)செபத்தினால் அதிபாதகங்களும் கெடும். தத்துவங்களுக்கு ஒருலக்ஷமாக (உ௫) லக்ஷசெபம் பூமியாதிபஞ்சவிம்சதி தத்துவங்களைத் தாண்டுவிக்கும். (௫ா) லக்ஷஞ்செபம் சர்வ்வகாரணாதி ஈச்சுவரத்துவமும், (ா) லக்ஷஞ்செபம் உருத்திரத்துவமும், (அ௰) லக்ஷஞ்செபம் விஷ்ணுத்துவமும்,(௬௰) லக்ஷஞ்செபம் பிர்ம்மத்துவமும், (உச)லக்ஷஞ்செபம் விராடாத்மத்துவமும், லக்ஷ

ஞ்செபந் தீர்க்காயுளுங் கொடுக்கும். ஓவ்வொரு லக்ஷஞ் செபத்தினுல் மாரணுதிஅஷ்டகர்ம்மசித்தியாகும்.

மேலும் அந்தப்பஞ்சாக்ஷர மந்திரம் வாயுஜிதனுகி அர்த்தராத்திரியில் (௰த) செபிக்கில் நாதசித்தியாகும். தத்சங்கியா செபக்கிரமத்தினுல் பிர்ம்மசித்தியாகும். ஆலசியமில்லாமல் வாயுஜிதனுகி மௌநியாக அர்த்தராத்திரியில் லக்ஷஞ்செபஞ் செய்யச் சர்வ்வாந்தகார நிவர்த்தகமான பிந்து தரிசனமாம். அர்த்தராத்திரியில் வாயுஜிதனுக, லக்ஷஞ்செபஞ்செய்யச்சர்வ்வசித்தியாகும் என்கிறஇந்த விநியோகங்களை விசாரித் தறியவேண்டும்.

## சுபமாசாதிகள்.

பஞ்சாக்ஷராதி சகலமந்திர புநற்சரண பிராரம்பத்தினில், சுபமாசாதிநாட்களை விசாரித்துச் செய்ய வேண்டும்.

சித்திரை துக்கம், வைகாசி ஆர்ச்சிதம், ஆனி மிர்த்தியு, ஆடி பந்துநாசம், ஆவணி பூரணுயுள், புரட்டாசி தநஆநி, ஐப்பசி சுபம், கார்த்திகை சர்வ்வசித்தி, மார்கழி மங்களம், தை ஆநி, மாசி புத்திவிர்த்தி, பங்குனி சகலசித்தியாகும்.

மேஷம், மிதுநம், சிங்கம், துலாம், தநுசு, கும்பம், ஆறுராசியும் அசுபராசிகளாம். மற்றவை, சுபராசிகளாம்.

பிரதமை, சதுர்த்தி, சஷ்டி, அஷ்டமி, நவமி, சதுர்த்தசி, பூரணை, அமாவாசியை என்னும் எட்டுத் திதிகளும் அசுபதிதிகள் மற்றவைகள் சுபதிதிகளாம்.

நாயிறு, செவ்வாய், சநி, அசுபநாட்கள், மற்றவைகள்சுபநாட்களாம்.

மகம், மிருகசிரம், அஸ்தம், சோதி, மூலம், அநுஷம், ரோகிணி, இரேவதி, உத்திரம், உத்திராடம், உத்



திரட்டாதி என்னும் (௰க) நக்ஷத்திரங்களும் சுபநக்ஷத்திரங்கள்; மற்றவைகள் அசுபநக்ஷத்திரங்களாம்.

விஷ்க்கம்பம், சூலம், கண்டம், அதிகண்டம், வியாகாதம், வச்சிரம், துருதி, துருவம், வை துருதி, விதீபாதம், பரீகம் என்னும் (௰க) யோகங்களும் அசுபயோகங்கள் மற்றவை சுபயோகங்களாம்.

சகுநி, சதுஷ்பாதம், நாகவம், கிமுஸ்துக்கிநம், வநஜை, பத்திரை என்னும் (சு) கரணங்களும் அசுபகரணங்கள் மற்றவை சுபகரணங்களா மென்றறிவது.

## இவற்றின்பலன்.

சுபஸ்திதியால் லக்ஷ்மீகரம், சுபவாரத்தால் ஆயுர்விர்த்தி, சுபநக்ஷத்திரத்தால் பாபக்ஷயம், சுபயோகத்தால் ரோகநிவர்த்தி, சுபகரணத்தால் காரியசித்திக ளுண்டாகும் என்பது நிச்சயம்.

## அங்குலியாதிசெபமாலிகை.

மந்திர செபங்களுக்குச் செபமாலிகைகளே வேண்டும். அது உத்தரோத்தரகுண விசிஷ்டமான மாலிகைகளுடனே, அங்குலிகளாலும் அங்குலிகளின் மத்திமை அநாமிகைகளின் இரண்டுரேகைகளே மேருவாக மத்தியாங்குலி அக்கிரத்தின் ரேகைகள்தொட்டு அங்குலிப்பிரதக்ஷணமாகப் பத்துரேகைகளை அங்குஷ்டத்தினுல் தொட்டுத்தொட்டெண்ணுவது நித்தியகர்ம்மாதிகளுக்காம்.

சங்கமணி ஐச்சுவரியம், படிகமணி மோக்ஷம், பதுமமணிபுஷ்டி, லக்ஷ்மீகரம், புத்திரஜீவமணி புத்திர, பசு, தாநியஅபிவிர்த்தி, பிரவாளமணி வைசியாதிபாக்கியமுத்தியார்த்தங்கள்; முத்துமணி சர்வ்வசித்தியாதிகள், மாணிக்கமணி லோகவைசிய, ஸ்திரி வைசியங்கள், மரக

தமணி சத்துருஜயாதிகள்,குசக்கிரந்திமணி பாபக்ஷயவி த்தியாபிவிர்த்தி, சுவர்ண, ரசிதமணி ஸ்திரிவைசியகாமி க கன்மாதிகள்,மாதுர்கா அக்ஷரமணி வாக்குசித்தி, பா தரசமணிபூர்வ்வோக்தசர்வ்வகாரியங்கள்உண்டாம்.உரு த்திராக்ஷமணியே போக மோக்ஷத் துக்குச்சாதநமாம்.

## செபமாலையின்மணிசங்கியை.

உருத்திராக்ஷ மணிமாலையே மேரு சூநியமான (ய௧) மணி ஏகாதசருத்திரப் பிரீதி (ய௫) மணி அபிசா ரக்கிரியை (உ௫) மணி முத்திசாதநம் (உசு) மணிதந விர்த்தி (உஎ) மணி சர்வ்வார்த்தசித்தி(உஅ) மணி புஷ் டி (௩ய) மணி அர்த்தலாபம் (௩உ) மணி ஜயுலக்ஷ்மி, (௫ய) மணி காமியகன்மப் பிரவிர்த்தி(௫௪) மணி சர்வ்வ சித்தி (௱௫) மணி போக மோக்ஷம் (௱அ) மணி காரி யபிரசித்தி, புத்தி முத்திகொடுக்கும்.

## செபமணிபாசப்பிரமாணுதிலக்ஷணங்கள்.

ஆமலக பலப்பிரமாணமணி உத்தமம், பதரீபலப் பிரமாணமணி மத்திமம், கடலைப்பிரமாண மணிகநிஷ் டமாம்.

அதிஸ்தூல, அதிசூக்ஷம, பிந்ந, லகுவானவைகளு ம்; விரணம், கண்டம், ஜீரணம், பூர்வ்வதாரணுதி தோ ஷரகிதமான, திட, விருத்த, சுவர்ண திருஷ்டிப் பிரீதி முதலானசுலக்ஷணமுள்ள மணிகளைச் சுவர்ண, ரசித, தாமிராதிசரிகைகளினுலும், பஞ்சவர்ணப்பட்டு நூல்க ளாலும் நவீநமான பௌத்திரமுள்ள கார்ப்பாசத்தி ழைகளாலும், முப்புரிக்கூட்டினது உத்தமமாம். இதி ல் சூக்ஷமமான (உஎ) இழையுத்தமமாம். (உக) இழைமத்திமமாம் (ய௫) இழை கநிஷ்டமாமென் றறிந்துஓம் சுபாத்மனே பரமாத்மனேநமஃ என்று திரித்துச் சூத்தி



ரஞ்செய்து, பிடித்ததே மூலம். நுனியே அக்கிரமாகக் கொண்டு ஓம் இருதயாயநமஃ என்னு மந்திரத்தால் சுகந் தலேபநாதிகளால் பிரக்ஷாளனுதி பரிசுத்தஞ்செய்து, ஸ்தூலமான மணியைச் சூத்திரத்தின் ஆதியிலும், சூ க்ஷமமான மணியை அந்தத்திலும், கோபுரச்சதாகாரம் போலச் சேர்வைதந்து, முகத்துக்குமுகஞ் சையோகஞ் செய்து சரமாக்கி மணியோடு மணியுரையாதபடி யிர ண்டுசுற்று முடிச்சிட்டு இறுக்கிமூலாக்கிரத்தை ஒன்று கக்கூட்டி அந்தந்த லக்கங்களுக்குமேல் பிரத்தியேகமா கமேருமணியைக் கோத்து இரண்டுமுடிச்சிட்டுச் செப மாலைநீதியாம்படி செய்வதாம்.

## செபஞ்செய்யும்விதம்.

அந்தமாலைக்கு ஸ்ரீகுருவின் அஸ்தத்தினுல் பஞ்சா மிருத, பஞ்ச கௌவியங்களால் அபிஷேகஸ்நாநஞ் செ ய்து, ஒவ்வொருமணிக்கும் விபூதி, கந்த, புஷ்ப, அக்ஷ தைகளைச் சாத்தி, ஓம் என்னும் மந்திர சஹிதமாக அ ர்ச்சித்துப் பிரதக்ஷணதண்ட நமஸ்காரஞ்செய்து, கு ருபதேசத்தால் செபமாலையை வாங்கிக்கொண்டு சதா செபஞ்செய்வதாம்.

செபஞ்செய்யும்போது ஜலபுஷ்பங்களினுல்மாலிகை க்கு அர்க்கியங்கொடுத்துச் சுத்திமுத்திரையினுல் மந்தி ரசகிதமாக ஸ்தூலமணியாதி சூக்ஷமமணியந்தமாகச் செபஞ்செய்வது உற்பத்தி,ஸ்திதி என்றும்;சூக்ஷமமணி யாதி ஸ்தூலாந்தமாகச் செய்வதுசங்காரமென்றும்,அறி ந்து பரதிருஷ்டிகோசர மாகாமல் சீக்கிரமில்லாமலும், மந்தமில்லாமலும், பிரத்தியேகமாக மணி ஒவ்வொன்றி ற்கும் மந்திரோச் சாரணத்தில் செபிப்பதாம்.

செபிக்கும் போது பிரமாதவசத்தினுல் மாலிகைப் தநமானுல் மந்திரஹாநியாமென்று முன்போலப் பிர

ரம்பஞ்செய்து மேருவைக்கடவாமல் பிரதக்ஷணமாகத் திருப்பிக்கொண்டு நமஸ்கரித்துச் செபஞ்செய்து, தன்னுடைய நியமசெபம் சமாப்தியான பின்மாலிகைக்கு அர்க்கியங்கொடுத்து வாம அஸ்தத்தினால் தீண்டாமலும், கண்டாதிகளில் தரியாமலும், சதாகாலம் சுத்தஸ்தலத்தில் வைக்கவேண்டும்.

## செபஞ்செய்யுமிடமுதலியன.

கிரகங்கள், கோசாலைகள், நதீதீரம்,சமுத்திரதடம், கிரி, புண்ணியாச்சிரமம், தேவாலயஞ் செபஞ்செய்ய உத்தமமாமென்று அங்கு ஜலசந்நிதி,தீபசந்நிதி,சூரியசந்நிதி, சிவசந்நிதி செபத்துக்கு விசிட்டஸ்தாநங்களாம்.

பூர்வ்வாபிமுகம் வைசியம்:அக்கிநியாபிமுகம்வியாதி, தக்ஷணாபிமுகம் அபிசாரம், நிருதியாபிமுகந் துவேஷம், பச்சிமாபிமுகந்தநலாபம், வாயுவாபிமுகம் ஆகருஷணம், உத்தராபிமுகஞ்சாந்தி, ஈசாநாபிமுகம் மோக்ஷசித்தியாம். என்றறிவது.

## ;செபாசநங்கள்.

வேணுவாசநந்தரித்திரம். பாஷாணாசநம்வியாதி.பூமியாசநந்துக்கம், மந்திரஹாநி. தாருகாசநந்தௌர்ப்பாக்கியம், வியாதி. திரணாசநங் கீர்த்திஆநி. பல்லவாசநஞ் சித்தவிப்பிரமம். கிருஷ்ணாசநம் ஞாநவிர்த்தி. வியாக்கிரசர்ம்மாசநம் மோக்ஷம்,லக்ஷ்மீகரம்.வஸ்திராசநம்வியாதிநிவர்த்தி. கம்பளாசநம் சௌக்கியம், கிருஷ்ணவஸ்திராசநம் அபிசாரக்கிரியை. ரத்தவஸ்திராசநம் வைசியாதிக்கிரியை.சுப்பிரவஸ்திராசநஞ் சாந்தியாதி விதி.சித்திரகம்பளாசநம் தர்ம்மார்த்த சித்திகளாகும்.

யோகாசநங்கள், (அ௪) வில். பத்திராசநம், முத்தாசநம், மயூராசநம், சித்தாசநம், பத்மாசநம், ஸோஸ்திகா



சநம், வீராசநம், கோமுகாசநம், சுகாசநங்களென்னு நவாசநங்களும் செபத்துக்கு யோக்கியமாம்.

## செபஞ்செய்யக்கூடாதசெய்கைகள்.

வாகநமேறி, மஞ்சத்திலிருந்து, உருமால், குப்பிசங்கள் தரித்து, திகம்பர, முத்தகேச, அசுசித்துவமாய், வெகுபாஷை, தூக்கம், கோட்டுவாய், தும்மல்; நீச்சதரிசநம்,குரோதம்,நிந்தை,வியாகூல சித்தமுள்ளவர்களாகச் செபிக்கலாகாது.

## செபஞ்செய்யக்கூடியசெய்கைகள்.

நிர்விகாரியாய், காஷ்டவத் மௌநியாகி, சமக்கிரீவசரீரியாகி,மநோதிருஷ்டி ஏகாக்கிரத்திலிருத்தித்,தியாநமுத்திராசமநவிதனாகி, பஸ்மருத்திராக்ஷ ஆபரணகுருபாதஸ்மரணா பூர்வ்வகனாகிக், கநிஷ்ட அநாமிகை அங்குஷ்டமென்னும் அங்குலித்திரயங்களால், வாமதக்ஷணநாசாபுடம்பிடித்துப்,பிர்ம்மாதிதேவதையான பிரணவாதி அகாரஞ்சிந்தித்து இடையுளபவநத்தைத்தன் சத்தியாநுசாரத்தால் உதரத்தில் பூரித்து, விஷ்ணு அதிதேவதையான பிரணவமத்தியமமாகும் உகாரத்தைத்தியாநித்துப்பின்பு, பூரித்த பிராணத்தைக் கும்பித்துக்கொண்டு ருத்திராதி தேவாத்மகமான பிரணவத்தின் கடையாகும்,மகாரத்தை ஸ்மரித்துக் கும்பித்தவாயுவை மெள்ளப் பிங்கலையில்ரேசித்து மேல் அந்தந்தமந்திரத்தினால் கிரமமாகப் பிங்கலையைப்பூரித்து உதரத்தில்கும்பித்து இடையிலேரேசித்துப் பிராணாயாமத்திரயஞ் செய்து, சகலமந்திரங்களுக்குஞ் சாதாரணமான இருஷிசந்த தேவதா பீஜசத்திகீலக சுவரஸ்தாந அக்ஷரகலைதத்துவ அர்த்தசிந்தனாதிகளென்னும் அங்கங்களின் முக்கியமான மந்திரப்பிரதமதிருஷ்டமாகும் இருஷியே மஸ்

தகம். மந்திராக்ஷர சங்கியாரூபமான சந்தமேமுகம். மந்திரவாச்சியாதி தேவதையேஇருதயம்.மந்திரதேவதா நாம வர்ண விசேஷமான பீஜமேநாபி. மந்திரசித்திப் பிரதமான குண்டலியினுத் சத்தியே குய்யம். மந்திரவிக்கிந நிவர்த்தகமான கீலகமேபாதம். வேறேமந்திராக்ஷகரான உமை விக்கிநேச்சுவரரே கிரமத்தில் வாமதக்ஷணபுஜத்துவயத்தில் இருஷியேநமஃ வென்று இந்தக்கிரமத்தில் சதுர்த்தாங்க நமஸ்காரபூர்வ்வகமாக அந்தந்தஸ்தாநங்களைத் தொட்டுத்தொட்டு ஸ்மரித்துப் பின்அந்த மந்திரங்களினுல் கரநியாசம், தேகநியாசம், அங்கநியாசமென்னு நியாசத்திரயங்களில், உற்பத்தி, ஸ்திதி, சங்கார பேதங்களைப் பூர்வ்வோக்த கிரமத்தினுல் அறிந்துவிஸ்தரிப்பது.

## செபிப்போர்விதிகள்.

கிரகஸ்தனும், சுமங்கலையும், விதந்துவும், ஸ்திதிநியாசமும், பிரமசாரி; உற்பத்திநியாசமும், வாநப்பிரஸ்த யதிகள், சங்காரநியாசமுஞ் செய்யலாம்.

அங்குஷ்டத்தினுல் மோக்ஷம். தற்சநியினுல் சத்அரு ஆநி. மத்திமையினுல் அர்த்தசித்தி. அநாமிகையினுல் சாந்தி. கநிஷ்டையினுல் ரக்ஷணைகளாகும் என அறிவதாம்.

மத்தியாங்குஷ்ட யோகசெபங் கநிஷ்டமாம். தற்சநியங் குஷ்டயோகசெபம் மத்தியமமாம். அநாமிகையங்குஷ்டயோக செபம் உத்தமமாம்.

மத்தியாங் குஷ்டங்களில், பாஷ்யசெபஞ்செய்வது தற்சநியங்குஷ்டங்களில் உபாங்குச செபஞ்செய்வது அநாமிகை மத்தியாங் குஷ்டங்களில் மாநஸசெபஞ்செய்வது.



அவற்றுள் பரசுருதி கோசரமாக உச்சரிப்பது வாசகமாம். சுவஸ்ருதிகோசரமாக ஓஷ்டபந்த மாத்திரமாக உச்சரிப்பதே உபாங்குசமாம். மந்திரவாக்கியார்த்த சிந்தனைசெய்வதே மாநசமாம்.

வாசகசெபம் க்ஷுத்திராதி காரியத்துக்கும், உபாங்குசசெபஞ் சகலசித்திகளுக்கும், மாநசசெபம் முத்திக்கும் ஆகும்.

## நவாவரணங்கள்.

மந்திரங்களின் வாசகவாச்சிய சம்பந்தங்களையறிந்து மேலேபஞ்சப் பிர்ம்ம ஷடங்கங்களே பிரதமாவரணம். அநந்தாதியஷ்ட வித்தியேச்சுவரரோ (உ)ம் ஆவரணம். உமை சண்டேச்சுவர, நந்திகேச்சுவர, மஹாகாள, பிருங்கி, கணபதி, விரஷப, ஷண்முகனென்னும் அஷ்ட கணேச்சுவரரே (ங) ம் ஆவரணம். இந்திராதிலோகபாலாஷ்டகர்,பிர்ம்ம,விஷ்ணுவாதி தேவதைகளே(ச)ம் ஆவரணம். வச்சிராதி பத்மசக்கரங்களென்னுந் தசாயுதங்களே (ரு)ம் ஆவரணம். பிராமியாதிசத்தமாதர்களே (சு)ம் ஆவரணம். அஷ்டவசுக்களே (எ)ம் ஆவரணம். ஆதித்தியாதி கிரக ஏகாதசருத்திரரே(அ)ம் ஆவரணம். பஞ்சாக்ஷராதி மந்திராங்களே (கூ) ம் ஆவரணமாம். நிராவரணசதிதேவதைகளை ஆவரணசகிதமாயானுலும், நிராவரணசகிதமாயானுலும், தியாநித்துச் செபஞ் செய்வதாம்.

## செபவர்ணரூபம்.

அபிசார கிரக உச்சாடநாதிகளுக்குக் கிருஷ்ணவர்ணரூபத்தினுலும்; வைசியாதிகளுக்கு ரத்தவர்ணரூபத்தினுலும், முத்தியாதிகளுக்குச் சுக்கிலவர்ணரூபத்தினுலும், தியாநித்துச்செபிப்பது.

## அகோராதிதிரிவிதமூர்த்திகள்.

அந்தத்தியாநக்கிரமத்தினல் மந்திராதி தேவதைகளுக்கு அகோராதிகோரமூர்த்திகளென்றும், சதாசிவாதிமிசிரமூர்த்திகளென்றும், சாம்பசிவாதி சாந்தமூர்த்திகளென்று, திரிவிதமூர்த்திகளுண்டு.

அவர்களில் அகோரமூர்த்தி தியாநங்களால் சீக்கிரத்தில் பாப, ரோக, ரிபுக்கள் க்ஷயமாகும். மிசிரமூர்த்தி தியாநத்தால் சிலகாலத்துக்குப்பின் சகலசித்திகளுமுண்டாகும். சாந்தமூர்த்தி தியாநத்தால் சீக்கிரமல்லாமலும், தாமசமல்லாமலும் மத்திமமாய் சாந்திபிரக்ஞாநாதிகளுண்டாம்.

## கற்பத்துவயாதிகள்.

தியாநமில்லாமல் செய்யுஞ்செபம் அகற்பசெபமாம். தியாநயுக்தமாகச் செய்வதே சகற்பசெபமாம். இவைகளுள் அகற்பசெபத்துக்குச் சகற்பசெபங் கோடிபங்கு அதிகமென்று அநுசந்தாநிப்பதாம்.

## கற்பத்திரயங்கள்.

மந்திரங்களுக்கு ஆத்மகற்பம், சிவகற்பம், சத்திகற்பமெனக் கற்பத்திரயங்களுண்டு.

அவற்றுள், ஆத்மகற்பமானதே பலிப்பதற்கு அசமர்த்தமாகும். சிவகற்பமானதே நபும்ஸகமாகும். சத்திகற்பமானதே புத்தி முத்திப் பிரதமாகுமென்று இந்தக் கிரமத்தை யறிந்து விதியுக்தமாகச், செபஞ்செய்வதுசெப சமாத்தியானதாலும்,பூர்வ்வோக்தமான விதிக்கு விபரீதமான பிராணயாமத் திரயத்தினில் முன்போலச் சந்தஇருஷி தேவாதிகளை ஸ்மரிக்கவேண்டுமென்று விதித்துப்பின், இந்தமந்திராதி சகலகிரியைகளையும் ஸ்ரீகுரு உபதேசத்தால் அப்பியாசஞ் செய்யச் சர்வ்வார்த்தசித்தியா



மன்றி யுக்திசாஸ்திரபலத்தினல் அநுஷ்டிக்கலாகாதென்று திடமாயறியவேண்டும்.

## பஹிரங்கசிவபூசாவிதி.

பஜித ருத்திராக்ஷ பஞ்சாக்ஷர மந்திரவிதாந சித்தனன சுத்தசைவனுக்குச் சிவார்ச்சனை கர்த்தவ்வியமாகும். எப்படியெனின் மூலாபிஷேகத்தினல் தருசாகோபசாகாதிகளெல்லாம் பலிக்குமாபோலவும், பிராணோபகாரத்தினல் சகலேந்திரிய சமுகமெல்லாம் பரிபோஷிப்பதுபோலவும், சிவார்ச்சனையொன்றினல் தேவதாசந்துர்ஷ்டியாவதாகிச்சந்திரசூரியமண்டலவந்நிகங்காஅஸ்திர சகலபுஸ்தக சாலக்கிராமாதி பூஜாஸ்தாநங்களுள்ளே லிங்காதிஷ்டானமே மஹாவிசேஷமான தென்பது நிச்சயம்.

## சிவலிங்கபேதங்கள்.

சிலாமயலிங்கம் பிர்ம்மா. இந்திரநீலமயலிங்கம் விஷ்ணு. ரத்திநமயலிங்கம் இந்திரன். சுவர்ண மயலிங்கம் குபேரன். ரஜிதமயலிங்கம் விசுவதேவதைகள். பித்தளைமயலிங்கம் வாயுவு. காம்ஸமயலிங்கம் வசுக்கள். மிருண்மயலிங்கம் அச்சுவநிதேவதைகள். ஸ்படிகமயலிங்கம் வருணன். அந்நமயலிங்கம் அக்கிநி. தாமிரமயலிங்கம்சூரியன். முத்துமயலிங்கம் சந்திரன். வெகுவர்ணலிங்கங்கள் நக்ஷத்திரங்கள். மணிமயலிங்கம் புதன். இரும்புமயலிங்கம் சுக்கிரன்;இராக்கதர். வித்துருமமயலிங்கம் செவ்வாய்; நாகதேவதைகள். மாணிக்கமயலிங்கம் பிரஹஸ்பதி. தாமரைமணிலிங்கஞ் சநி. குசமயலிங்கஞ் சத்தரிஷிகள். நீலமயலிங்கம் துருவன். ஸ்தாணுநாமலிங்கம் மார்க்கண்டன். தற்பரமநாமலிங்கம் வசிஷ்டன். சதாசிவநாமலிங்கம் சநற்குமாராதியர்கள். திரிபுமயலிங்கம் பிசாசர்கள். திரிலோ

கமயலிங்கம் குய்யர்கள். வைச்சிரமயலிங்கம் மாதுருகள் பிரசூநமயலிங்கம்மன்மதன். நாநாகாரலிங்கங்கள் இலக்ஷ்மி, சரஸ்வதி, சசி, மாத்துருகாதி மஹாசத்திகள். இப்படிவெவ்வேறு சிவலிங்கங்களைப் பூசித்து அவரவர் தங்கள் தங்கள் பதவிகளில் சுகித்திருக்கின்றனர். ஆதலால் கீடாதிபேதமின்றி யாவரும் சுவயம்புலிங்கம், பாணலிங்கம், சலலிங்கம், பிராணலிங்கம், சங்கீரணலிங்கம் என்னும் பஞ்சவிதலிங்கங்களைத் தங்கள் தங்கள் சத்தியாநுசாரமான அர்ச்சனைத் பரராகவேண்டும்.

## பிரயோசநாதிசுத்திக்கிரியைகள்.

சிவபூஜாவிதிக்கு, தேச, கால, ஸ்தாந, திரவிய, பிரயோஜனாதிகளும்; தாந்திரிக, வைதிக மென்னுமிரண்டு பூஜாபேதங்களும்; அந்தர சௌச ஆத்மசௌசமென்னுமிரண்டு, சௌசபேதங்களும்; சோஷண, தாஹந, பாவநமென்னும் மூன்றுகிரியைகளும்; ஆத்மசுத்தி; ஸ்தாநசுத்தி, திரவியசுத்தி, இலிங்கசுத்தி, மந்திரசுத்தியென்னும் பஞ்சசுத்திகளும் உண்டு.

அவற்றுள் சௌச, ஆசமந, ஸ்நாந, பஸ்ம, ருத்திராக்ஷதாரண, கவசமந்திர, களாநியாச, தியாநாதிரசனைகளைச் செய்வதே ஆத்மசுத்தியாம். சமமார்ச்சநாலேபந, வர்ண, கந்த, புஷ்ப, தூப, தீபாதி, நிர்ம்மலோபகரணங்களால் சவுக்கமாக அலங்கரிப்பதே ஸ்தாந சுத்தியாம். ஜல கந்தாக்ஷத புஷ்பாதிகளை நிரீக்ஷித்துப்பஸ்மமந்திரோதகம் புரோக்ஷிப்பதே திரவிய சுத்தியாம். அநாமிகை, மத்திமைகளின்; மத்தியில் நவீநகுசுமம்பிடித்து, அங்குஷ்டத்தற் சநிகளால் முதல், நிர்ம்மாலியம் வாங்கி லிங்கபீடத்தைத வாரியால் பிரக்ஷாளனஞ் செய்வதே இலிங்கசுத்தியாம். சகலபூஜார்த்தமாக, ஓம் நமசிவாயஸ்வாஹாகாவென் றுச்சரிப்பதே மந்திர சுத்தியாம்.



## அஸ்திராதிமுத்திரைகள்.

அஸ்திரமுத்திரை, சக்கரமுத்திரை, மஹாமுத்திரை, சோதனைமுத்திரை, சங்காரமுத்திரை, பஞ்சமுகமுத்திரை, சுரபிமுத்திரை, திரவியமுத்திரை, முகிளிகாமுத்திரை, பத்மமுத்திரை, சசகர்ணமுத்திரை, சத்திமுத்திரை, பீஜமுத்திரை, சாந்திமுத்திரை, ஆவாகநமுத்திரை, மநோரம்மிய முத்திரை, துவசமுத்திரை, இலிங்கமுத்திரை, காயத்திரி முத்திரை, யோநிமுத்திரை, காலகண்டமுத்திரை, சூலமுத்திரை, நமஸ்காரமுத்திரை, விசோஷணமுத்திரை, ஆச்சியாகுணமுத்திரை, மஹாசங்கார
முத்திரை என்னுஞ்சகல முத்திராலக்ஷணங்களை யறிந்
து, அந்தந்த யோக்கியக்கிரியைகளில் பிரயோகித்துக்கூ
ர்ம்ம, அநந்த, சிங்க, பத்ம, விமலயோகாதி பீடங்களில்
முக்கியமான சிங்காதநத்தில், சுவேத, ரத்த, பீத, சாம
ளவர்ணத்தின் சிங்காரமான தர்ம்ம, ஞாந வைராக்கிய,
ஐச்சுவரிய மென்னும் நான்கிற்கும் கிரமத்தில் ஆக்கிநே
யாதிதிக்கின் பாதசதுஷ்டயங்கள் இராஜாவர்த்தப் பிர
பைரூபமான அதர்ம்ம,அஞ்ஞான,அவைராக்கிய, அனை
ஸ்வரிய மென்னு நான்கிற்கும் கிரமத்தில் பூர்வ்வாதிதிக்
கின் பாதசதுஷ்டயங்கள்,அணிமாதிகளே பூர்வ்வாதி அ
ஷ்டதிக்குகளின்தளங்கள், வாமாதி சர்வ்வபூத தமனாந்த
மான பஞ்சமுகிமுத்திரை,ருத்திரர்,பூர்வ்வாதியஷ்டதிக்
கின் கேசரங்கள் வைராக்கியம் மத்தியகர்ணிகை, வாமி
முதல்மநோன்மணி கடையான நவசத்திகள் பூர்வ்வாதி
மத்தியாந்தமான கர்ணிகாபீஜங்கள், அக்கிநி, ரவி, சசிம
ண்டலத்திரயங்கள் தமோ, ராசத, சாத்துவிக குணங்க
ள். ஜீவாத்மா,அந்தராத்மா,பரமாத்மாஎன்னும் ஆத்தும
தத்துவமும்,வித்தியாதத்துவமும்,சிவதத்துவமும் இப்
டி அநுக்கிரமத்தில் ஆயத்தமான சிங்காதநமும், பரிக
ற்பித்து, அந்தச் சிங்காதநத்தில் சிவலிங்கத்துக்கு ஆ

வாகந, ஸ்தாபந, சந்நிதான, சந்நிரோதன, சமமுகிகரணமென்னும் கிரியைகளைச்செய்து பூஜாப்பிராரம்பந் தொடங்கிப் பூஜாசமாப்திபரியந்தம் தத்ரூபங்களைத்திரும்பத் திரும்பத் தொட்டுச் சகலகிரியைகளும், ஈச்சுவரார்ப்பணஞ் செய்யவேண்டும்.

## பூஜா திரவியாதிகள்.

நதி, தடாக, கூபங்களின், சுவாது, மிசிர, லவணங்களான உத்தம, மத்திம, கநிஷ்டமென்னும் பூஜாயோக்கியமானஉதகபேதங்களும்; வெண்கடுகு, குசுமம், தூர்வை, கோஷ்டம், விலாமிச்சை, பச்சைக்கர்ப்பூர மென்னும் (ரு) பாத்தியத் திரவியங்களும்; குசாக்கிர, தில, வெண்கடுகு, சவு, நெல், க்ஷீரமென்னும் (ரு) அர்க்கியத்திரவியங்களும்; பலக, சூர்ம்ம, பச்சைக்கர்ப்பூர, கோஷ்டகுங்குமப்பூ, ஏலரிசிஎன்னும் (ரு) ஆசமநதிரவியங்களும்; பஞ்சகௌவிய, பஞ்சாமிருத, கோதுமைச்சூர்ண உழுந்துச்சூர்ண, மென்னும் (ச) கந்த திரவியங்களும்;மந்தோஷ்ட ணதியாந, ஸ்நானவாரிகளும்; கந்தோதக, புஷ்போதக, சுவர்ணோதக, ரஜிதோதகமந்திரோதக, மஹாஸ்நாநோதகங்களும்; விதிங்யசுப்பிராதி குணயுக்த பஜிதங்களும்; பட்டு, தேவாங்க, சுப்பிர, சித்திராதி சுவஸ்திரங்களும்; சுவர்ண, ரஜித, பட்டுசூத்திராதி யக்ஞோபவீதங்களும்; கிரீடாதி ஆபரணங்களும்; சந்தன, அகரு,கஸ்தூரி, பச்சைக்கர்ப்பூர தமாலதள, குங்குமப்பூ, விலாமிச்சை, கோஷ்டங்களென்னும் அஷ்டகந்தங்களும்; சவு, கடுகு, வெண்கடுகு, தில, தண்டுல, முத்து, அக்ஷதைகளும்; சுப்பிரவர்ண, நந்தியாவர்த்தாதி சாத்விக புஷ்பங்களும், ரத்தவர்ண கமலாதிராஜச புஷ்பங்களும், கிருஷ்ணவர்ண நீலோற்பலாதி தாமதபுஷ்பங்களும்; நொச்சி, கபித்த, மாவுலிங்கு, கிளுவை, வில்வம், தூர்வை, துளசியாதி பத்திரஜாலங்களும்; கிருஷ்ணகர, சுவேதாகர,குங்கிலிய, சந்தன, அரக்கு, வில்வபலம், துப்பு, தேன், சச்சைரச, பச்சைக்கர்ப்பூர மென்னும் தசாங்க தூபவர்க்கங்களும்; தைலத்திரி, நெய்த்திரி, கர்ப்பூரத்திரியென்னும் தீபசாதநங்களும்; அரித்திராந்ந, பரமாந்ந, முத்காந்ந, கிரிசராந்ந, ததியாந்ந, குடாந்ந மென்னும் ஷட்வித அந்நநைவேத்தியங்களும்; பூக, பர்ண, சூர்ண பச்சைக்கர்ப்பூராதி தாம்பூலதிரவியங்களும்; சம்பாதித்து அந்தப்பரம பௌத்திரமான திரவியங்களும் சயித்தியோபசாரங்களுடனே திரிவிதோபசார, பஞ்சோபசார, அஷ்டோபசார, தசோபசார சோடசோபசார சதுர்விம்சதியுபசார, துவாத்திரிம் சதியுபசாரங்களுண்டு; அவை எவையெனின்:—



## ஆவாகநாதிஉபசாரங்கள்.

ஆவாகநம், ஆசநம், பாத்தியம், அர்க்கியம், ஆசமநம், ஸ்நாநம், வஸ்திரம், யக்ஞசூத்திரம், பூஷணம், கந்தம், அக்ஷதை, புஷ்பம், தூபம், தீபம், நைவேத்தியம், முகவாசம், நீராசநம், தருப்பணம், அர்ச்சநம், தாம்பூலம், பிரதக்ஷணம், நமஸ்காரம், ஸ்தோத்திரம், புராணபடநம், சத்திரம், சாமரம், வியசநம், சங்கீதம், ஜயஜய, நிர்த்தம், வாத்திய, ஆத்மாரோபண மென்பனவாம். இவைகளே முற்கூறிய சத்தவித உபசாரங்களுக்கும் பிரயோஜநங்களாம்.

## நவவிதபக்திகள்.

இப்பூஜா திரவியங்களில்லாவிடின், ஜலபுஷ்பங்களால் மாத்திரம் பூசிக்கின் சகலசாங்கியாகமான அர்ச்சனைக்குச்சமமாம். ஆதலால் பூசைக்குச்சிரத்தா பக்தியே முக்கியமாம். அந்தப்பக்தியே ஈச்சுவர விஷயமான சி

ரவணமென்றும், கீர்த்தநமென்றும், ஸ்மரணமென்றும், பாதசேவநமென்றும், பூசநமென்றும், வந்தநமென்றும், தாசத்துவமென்றும், சத்திரியத்துவமென்றும், ஆத்மார்ப்பணமென்றும் நவவிதபக்தியாம். இஃது பீடஸ்தசிவலிங்கத்தின் பஹிரங்கபூசையை விரித்துச்சொல்லியதாம். இகலோகபலத்தையாவது, பரலோகபலத்தையாவது இச்சித்தவனுயினும், சகலஜநங்களுக்கும் இதஞ்செய்கிறவனுயினும், பாஃகியத்திரவியங்களால் சிவலிங்கபூசை செய்யவேண்டுவது முக்கியமாம்.

## அந்தரங்கபூசாவிதி.

நிஷ்கர்ம்மனுன மோக்ஷாதிகாரிக்கு, அப்பியந்தரத்தில் முக்கியமான ஞாநமயபூசையே கர்த்தவ்வியமாகும். அந்தப்பூஜோபசாரங்களில் உபசாரங்கள், உபகாரியமான தேவதாகுணங்களை ஆரோபித்துச் செய்யத்தக்கது. எப்படியெனின் முதல் அந்தரங்கத்தில் சிவதர்ம்மமேகந்தம், சிவஞாநமே ஞாளம். அஷ்டமகத்தைச்சுவரியமேதளம். ருத்திரேச்சுவராதிகளே கேசரம். வைராக்கியமே கர்ணிகை. களாகச் சந்திரப்பிரபாமய மென்பதாச்சேர்வையாக இருதயகமலத்தின் சோமசூரியாக்கிநிமண்டலத்திரயத்தின் மத்தியில், சத்தென்னுந் திவ்வியமூர்த்தியும், சித்தென்னுங் காயகாந்தியும், ஆநந்தமென்னும் லாவணியத்தில், தத்துவபரிகற்பிதமான ஆபரண, ஆயுதங்களினுல் அலங்கிருதமாப், படிககடத்தினுள்ள தீபம்போல, உள்ளும்புறம்பும் பிரகாசித்திருப்பதாக ஈச்சுவரனைப் பரிபாவித்து, மேல், சர்வ்வாதாரமான ஈச்சுவரனென்னும் புத்தியே, ஆசநம். பரமாத்ம பரிபூரணமென்னு மதியே ஆவாகநம்.
ஜகமெல்லாஞ் சிவன் சீர்பாதமென்னும் தெளிவேபாத்தியம், சுகாம்பூதி சம்புவென்னும் அநுசந்தானமே அர்க்கியம் பரமபௌத்திர சுவரூபபாவனையென்னும் அறிவே ஆசமநம் நித்தியநிர்ம்மல வீச்சுவரனென்னு மிச்சையேஸ்நாநம் ஜகமெல்லாம் அதிக்கிரமித்திருந்த சுத்தவித்தையே வஸ்திரம். திரிகுணதீதமான ஞாநமே யக்ஞசூத்திரம். சைதந்நியமே ஜகத்தலங்காரமென்னும் பிரபையே ஆபரணம் சுத்தசிற்சத்தியே அநுலேபநம் காருண்ணியமே அக்ஷதை. பிரணவாத்மக சத்தியவசநமே புஷ்பம் விஷயவாசனை யில்லாததே தூபம். ஜகத்தைப்பற்றிச்சொலிக்கிற பரஞ்சோதியேதீபம். ஜகமெல்லாங் கௌளீகரித்துக்கொண்டிருக்கும் ஆத்மனே நித்தியதிர்ப்தனென்னும் சம்வித்தே நைவேத்தியம் திரிகுணங்களை உட்கொண்டிருக்கும் ஞப்தியே தாம்பூலம். சோஹம் பாவ விர்த்தியே பிரதக்ஷணம். சமஸ்ததத்துவங்களை அதிக்கிரமித்திருக்கிற நிசமே நமஸ்காரம் சிவஐக்கியஸ்திதியே விசர்ச்சநம். என்னும் இந்த உபசாரங்களினுல் அந்தரங்க பூசைசெய்வதாம்.

## சுத்தசைவலக்ஷணம்.

இருதயகமல கர்ணிகாமத்தியத்தில் குருகொடுத்த இஷ்டலிங்கத்தில் கிராம நதீதீராதி க்ஷேத்திரங்களில் தேவ தாநவாதிகள் பிரதிஷ்டைசெய்த லிங்கங்களில் செய்யும் பரார்த்தபூசைகள் விடாமல் ஆசிரித்தும், அப்பரமார்த்தபூசைகளுள் ஈச்சுவர, சதாசிவ, வைரவ, உமை, கணபதி, பாஸ்கர, வீரபத்திர, மாத்துருகை;குமார க்ஷேத்திரபாலக, பிர்ம்ம, விஷ்ணு,ருத்திரனென்னும் தேவதைகளை அவரவர் ஸ்தாநக்கிரமத்தையறிந்து ஆராதித்தும், வேறு ஸ்தாபிதங்களான விஷ்ணுவாதி தேவதா பஜனையைவிட்டுத் தன்இஷ்டலிங்கஞ் சோராதிகளால் போய், வாராதிருந்தால் லக்ஷஞ்செபம். அகோரமந்திரஞ் சபித்துச் சுத்தாத்மகனுகிப், பின்னுசாரியனுல் விதியுக்தமாக

ச்செய்துகொண்டும் விரதநியமாதி லோபமானால் அஷ்டோத்தர சத்காயத்திரி செபத்தினால், பரிசுத்தனாகிப் பின் பரமபௌத்திரமான சிவபாதோதகம், சிவப்பிரசாதாங்கம் சிவப்பிரசாததாம்பூலம்சிவநிர்ம்மாலியகுசுமதாரணங்களும்சற்பிராமணர் முதலியவிசிஷ்டருக்கேகர்த்தவ்விய மாகுமென்றும் பாபாத்மருக்கும் பாஷாண்டிகளுக்கும் சாபதத்தருக்கும் சிவசமுஸ்கார ஹீநருக்கும், நாஸ்திகருக்கும்,வேதபாஃகியருக்கும் யோக்கியமல்லவென்று பரிபாவித்துச் சகலசத்கிரியைகளினால் நிர்ம்மல அந்க்கரணமாகஇருப்பவனே சுத்தசைவனும்.

## வீரசைவலக்ஷணம்.

மேலும் அந்தப்பரமேச்சுவர நிர்ம்மிதமானஜகத்தில் சாமசரீரியாகிச் சமஸ்த சைவருள்ளும் அதிவிசிஷ்டனாகி, இதரசைவனைப்போலக் கிரியாவெகுளத்தினால் அற்பபலம்பெறாது,அற்பக்கிரியையினால் அநந்தபலம் பெறுபவனாகிச் சிவதீக்ஷையின்மேல் ஸ்நாந, போஜந, நித்திரை, ஜாகரண, மலமூத்திர விசர்ச்சநாதி காலங்களில் ஆசுசிபாவனைதோன்றாது சதாலிங்காங்க சம்பந்தியாகி, லிங்கபோகோப போகியாகித், தன்னிஷ்டலிங்கத்தில், ஆவாகந விசர்ச்சநக்கிரியைகளுஞ் செய்யாதவனாகித் திரிகாலலிங்கார்ச்சநாசத்தனாகி, லிங்கலோப, விரதலோபத்தினில் பிராணத்தியாகமல்லது வேறுபிராயச்சித்த மில்லாதவனாகி, குரு, சிவ, சங்கம, பிரசாத, பாதோதக, பஸ்மதாரண, சிவாகம, சிவக்ஷேத்திர, சிவாசார நிந்தைகள் பெறாதவனாகி, விஷ்ணுவாதிதேவதைகளை யெண்ணாதவனாகி, பாஃகியத்தில் சிவலிங்கலாஞ்சனை யில்லாதவனாகிய பவியுடனே, ஏகாசந, சயந, யாந, சம்பர்க்க,சகபோஜநங்களில்லாதவனாகி, அநிர்த, அஸ்திரவாக்கிய, வஞ்சனை, பந்திபேதம், உதாசீநம், நிர்த்தயையென்னும்



(சூ) அந்தரங்க பவிகளில்லாதவனாகிச், சிவமஹேச்சுவரனைக்காணும்போது எழுந்திருத்தல், எதிர்கொளல், கூடித்திரிதல், பிரியவசநஞ் சொல்லல், ஆசநம்போடல், அந்நமிடல்,பாநஞ்சமர்ப்பித்தல் என்னும் முத்திசோபாநசத்தக்கிரமயுக்தனாகி ஜாதிசூதகம், ஜநநசூதகம், பிரேதசூதகம், உச்சிஷ்டசூதகம், ருதுசூதகம் என்னும் பஞ்சசூதகங்களையும் விட்டவனாகி லிங்காசாரம், சதாசாரம், பிரத்தியாசாரம், சிவாசாரம், கணசாரம் என்னும் பஞ்சாசார நிஷ்டனாகித், தாசத்துவ, வீரதாசத்துவ,பிரத்தியத்துவ, வீரபிரத்தியத்துவ, சமயாசாரத்துவ, சகலசாஸ்திரத்துவமென்னும் ஷடுவிதசற்சநயுக்தனாகித்,தேசகாலகற்பிதாதி லௌகிகாசாரங்களைமீறிச் சுதந்தரசீலனாகிச் சிவாத்மருக்குப் பேதப்பிராந்திகாட்டாதவனாகி,உபநிஷத்துவாக்கிய ஜநிதவித்தையில் பொருந்துஞ் சைவனுதலால் சௌக்கியமுண்டானவனாகி ஜகற்பூச்சியனா யிருப்பவனே வீரசைவனும்.

## வீரசைவதிரிவிதங்கள்.

அந்த வீரசைவர்கள் கிரியாபேதத்தினாலே சாமாநியவீரசைவனொன்றும், விசேஷவீரசைவனொன்றும், நிராபாரவீரசைவனொன்றும், மூன்றுபேதங்களுள்ளவர்களாவர்.

அவருள்,ஸ்ரீகுருவின் அஸ்த,மஸ்தக,சையோகத்தினால் விபூதிபட்டத்திருந்து சிவமந்திர உபதேசத்தினால், லிங்காங்கசங்கியாகி, அஸ்த, மஸ்தக, கண்ட, வக்ஷ, ஸ்தலாதியினிடத்தில் சிவலிங்கதாரணனாகி, ஏககாலமானாலும், திரிகாலமானாலும் லிங்கார்ச்சநாசத்தனாகிக், குருலிங்க சங்கமபஜிதங்களில் பக்தியுக்தனாகி யிருப்பவனே சாமாநியவீரசைவனும்.

## வேதாதிதீக்ஷாவிதிகள்.

சாந்தி தாந்தியாதி சாதந சம்பந்நனுகிய ஸ்ரீகுரு வின் ஸாஸநமாவதால் சீஷனுனவன் சுபகால தேசாதி களைப் பரீக்ஷித்து, ஆசாரிய சம்பிரதாய சித்தனுன, சகல சத்குண சம்பந்நனுன, ஸ்ரீகுருவைச்சார்ந்து அந்தக்குரு வின் அநுமதியினுல் சிவபூசாபராயணரான கீர்த்திமய ரான சதுர்வித ருத்விக்குகளுக்கு ஸ்நாந, தவளாம்பர, ஆ பரண, கந்த, புஷ்பாதிகளால் அலங்கரித்துப்பின் அந்த க்குருவின் ஆக்ஞையால் தான் அர்த்தராத்திரியில் க்ஷீ ராகாரியாக விருந்து; பிரபாத சமயத்தில் தந்ததாவநஞ் செய்து, மங்களஸ்நாநஞ்செய்து, தவளாம்பரமுடுத்துப் போர்த்துப் பஜிதோத்தூளநஞ்செய்து திரிபுண்டரதார ணஞ்செய்து ருத்திராக்ஷமாலே தரித்துச் சுவர்ணுபரணு திகளால் அலங்கரித்துக்கொண்டு ஆசாரியன் சமீபத்தில் வந்து பயபக்தியினுல்அஷ்டமந்திரபூர்வ்வகத்தில் விநயந மிதனுகிச் சுவர்ண புஷ்பங்களினுல் வித்தாநு சாரமாகக் குருவைப்பூசித்துக் கந்தபுஷ்பாதிகளால் ருத்விக்குகளை யும் பூஜித்து; ஸ்ரீகுருமுக்கிய சகல சிவமஹேச்சுவரர் களையும் வலங்கொண்டு விபூதியடைக்காயுஞ் சமர்ப்பித் துப்,பூமியைக்கநந,தஹந, சோதந,சம்புரோக்ஷண,மர்த் தந, லேபநமென்னும் ஷட்கர்ம்மங்களுஞ் செய்து,மெழு கிக் காரையிட்டுத் தளிர தோரணகுசும விசரபலாவளி கை தூப தூம்பிராதியினுல் பரிசோபையுஞ் செய்து, மநோகரமான தீக்ஷாமண்டபத்தில்,கோச்சர்ம்மமாத்திர ம் பூமியைச் சவுக்கஞ்செய்து கோரோசனே, கோமயம், கோமூத்திரம், கோக்கிருதம், கோததி, கோக்ஷீரமென் னுமிவற்றுல் ஷட்சமார்ச்சநஞ்செய்து; அந்தச்சவுக்கம த்தியில் பிரவாள, முத்து, சுப்பிரபாஷாண, சுவர்ண, சு வேதாப்பிரக, தண்டுலாதி சூரணங்களால் அஷ்டமங்க



லங்களை ரசித்து, அதை ஆவரித்துச் சங்கு, சக்கர, சூல, டமருக, பரசு, கண்டை, சத்திர, சாமர, விரஷபசரணு தி விசித்திர வர்ணங்களை நிறைய இட்டு; அதன்மேல், எள், சீரகம், கோதுமை, அரிசி, உழுந்து என்னும் ப ஞ்சதாநிய மாயினும்,கேவலம் தண்டுலமாயினும் (நஉ) அங்குலப் பிரமாணம் சதுராசிரமாகப் பரப்பி; அதன் மேல் தீர்த்த பூரணமான சுவர்ணுதி நவீநபஞ்ச கலச ங்களைப், பூர்வ்வ, தக்ஷண,பச்சிம, உத்தர,மத்தியக்கிரம ங்களில் வைத்து; மத்தியத்தில் ஆசாரியனை ஸ்தாபித் து; அவைகளுக்கு வெவ்வேறு புதுவஸ்திரங்களைச் சுற் றி; நவீநபஞ்சு தந்துகளினுல் பரிவேஷ்டித்து; சுவர்ணு திகளை அக்கலசங்களுள்ளிட்டு.

பின் ஆம்பிரபல்லவம், தூர்வாங்குரம், பூகசுசும ம், நாகவல்லிதளாதிகளினுல் அலங்கரித்துப் பூர்வ்வா தி திக்குகளிலிருக்கும் கலசங்களைக்; கிரமமாகத், தற்பு ருஷம், அகோரம், சத்தியோசாதம், வாமம், ஈசாநமெ ன்னும் பஞ்சப்பிர்ம்மாத்மகமென்று பரிபாவித்து; மற் றக்கலசங்களின் மத்தியில் பரமசிவனைப்பஜித்து, அக் கிராசநத்தில் பூர்வ்வாபிமுகனுகிப், பரசிவசவுக்ஞாகமா க விருக்கும், ஆசாரியனேமத்தியகலசம், பூர்வ்வாதிதிக் குகளிலுள்ள கலசங்கள் கிரமமாக, ரேவணசித்தேச்சு வரர், மருளசித்தேச்சுவரர், ஏகோராமயதேவர், பண் டிதாராத்தியர், என்னும் ஆசாரிய சம்பிரதாயகரான வெவ்வேறு மடபீடாசநாதி லக்ஷணலக்ஷிதரான அந் தருத்விக்குகளுக்கு, அர்க்கிய, கந்த, புஷ்ப, அக்ஷதாதி களால், ஸ்ரீமத்பஞ்சாக்ஷர பூர்வ்வகமாகப் பூஜித்துத் த ன்சரீர அர்த்த பிராணுதிகளைச் சத்குருவின் உடை மையென்று நிவேதித்துச், சாஷ்டாங்கப் பிரணமஞ் செய்து, சீஷன் ஸ்ரீகுருவின் ஆக்ஞையால் உத்தராபி

முகனுகி ஸ்ரீகுருவின் தக்ஷணபாகத்தில் சவுக்கசந்நிதியில் சுவஸ்திகாமண்டலத்தின்மேல் பரமாசநனுகி, ருஜுகாயனுகி நாசாக்கிரத்தில்திருஷ்டியுள்ளவனுகி, முகுளித கரகமலனுகிச், சிவமந்திரோற்சாரண சிவத்தியாநத்தினில் சலக்ஷணனுகி, இருந்தசீஷனை ஸ்ரீகுருதன் கிருபாலோசநத்தால் நிரீக்ஷித்துச் சகல மஹேச்சுவராசீர்வாதநாதசம்பந்ந, மங்களகரமான, நாநாத்துவநிவாக்கியத்துடன் மூடத்தக்கதாக, ஆசாரியாதி ருத்விக்குகளும், தங்கள்தங்கள் கலசங்களைக்கிரமத்தெடுத்து அந்தக்கலசோதகங்களைத் தூர்வாக்கிரங்களினுல், குருசிரேஷ்டனுன ஆசாரியன் அச்சீஷன் சிரசில், சம்புரோக்ஷித்துப், பின் அந்தக்கலசங்களை அங்கங்கே, ஸ்தாபித்து, மேலு மந்தக்கிரமத்தில், பின்னுமந்தக், கலசங்களை, எடுத்துத் தூர்வாக்கிரங்களால் சீஷன், மஸ்தகத்தினில் தெளித்து இப்படிமூன்றுவேளை, அகமருஷணஸ்நாநஞ் செய்து, பின், ஆசாரியன், அச்சீஷன் லலாடாதி ஸ்தாநங்களில், சிவமந்திரத்தினுல் அபிமந்திரமாக, ஸ்ரீமத்விபூதியுந் தரித்து லிபியுந்துடைத்துக் காயசுத்தி ஆத்மசுத்தியாதிகளுஞ் செய்து, கலாநியாசம் மந்திரநியாசாதிகளும், விஸ்தரித்து, ஆணவாதி, மலத்திரயங்களையுங்களைந்து, சுத்தாத்மஞ்செய்து, மேல், குரு தக்ஷணஅஸ்தத்தால் கந்தாக்ஷத புஷ்பாதிகளால் சிவமந்திரத்தால், அர்ச்சித்துப், பின் அத்தேஜோமயமான, சிவ அஸ்தத்தைச் சீஷன், மஸ்தகத்தினில், மூலமந்திரோற் சாரணத்தால் வைத்து அச்சீஷன் மஸ்தகத்தில், அதிஷ்டாயத்தமான கிரியாசத்தியாத்மக பிந்து வென்னும், பீடத்துடனே லிங்கலக்ஷண, சிற்சத்தி யென்னும், காரணயுக்தமான, அதிஷடாயத்தமான பாசிவனை, ஆவாகித்துச் ஜசயோகஞ் செய்து, லிங்கப்பிரதிஷ்டையுஞ் செய்து,



மாநத பூசையும் விஸ்தரித்து மேல், ஆசாரியர் கரகமலங் கூப்பி இவ்விடத்தில், சதாசந்நிதமாகி யிருவென்று, ஈச்சுவரனுக்கு, விண்ணப்பஞ்செய்து இருத்துவதே, வேததீக்ஷையாம்.

மேலும் பிரணவபஞ்சாக்ஷர மந்திரத்தை அந்தச்சீஷன் தக்ஷணகர்ணத்தில் உச்சரித்து, அந்தமந்திரத்தின் ரிஷி, சந்த, அதிதேவதாதி யங்கங்களும் தெளிவிப்பதே மந்திரதீக்ஷையாம்.

பின்னும் அந்தமந்திராநு சந்தானத்துக் கிடமான சீஷன் மஸ்தகஸ்திதமான ஞாநக்கிரியாத்மக லிங்கத்தையே ஸ்ரீகுரு தன்பாவக மநோதிஷ்டிகளுக்கே யதாக்கிரமத்தினிலிருந் தாகரஷணஞ்செய்து அந்தத்திர்ஷ்டியும் மேலே, படிக சுவர்ண சிலா ரத்திநாதி லிங்கங்களில் லிங்காதிகமானுல் மிருத்தியு, சத்தியாதிகமானுல் தரித்திரம், லிங்கசத்தி சமாநமாயின் போகமோக்ஷங்க ளுண்டாமாதலின்:

## லிங்கப்பிரமாணசூத்திரவிதி.

லிங்கத்தின் சுற்றளவைக்கண்டு அந்த அளவுக்கு லிங்காதி கோமுகதிக்களவும்,பாநவட்டாதி லிங்கத்தின் மஸ்தகத்தினளவும், பாநவட்டாதி கீழ்ச்சத்தி பீடத்தினளவும்,பாநவட்டத்தின்விட்டத்தினளவும், சரியாகஇருக்கவேண்டுமென்று பிரமாணித்து, இச்சூத்திரமுள்ள பீடலிங்கங்கள்.ஓரோசாதி சிலையாதிகளான காந்திமயமான லிங்கஸ்தலங்களைத்,தீர்த்தாம்பு,பஞ்சகௌவியம் பஜிதமிசிரோதகத்தினுல்,பரிபூரிதமான திரிவிதகும்பங்களுள் பிரத்தியேகமாக ஒவ்வொருராத்திரி அஷ்டோத்தரபஞ்சாக்ஷரமந்திரம் அபிமந்திரித் திருத்திப்பின் நாலாம்ராத்தி

ரியில் அந்தக்கலசஸ்தாபநத்துக்குஉத்தரதிக்கில்பூமியை ப்பரிசுத்தஞ்செய்து அஷ்டதள பத்மமெழுதி ஏழுமுழ நீளம் நவீநவஸ்திரத்தினல் அதன்மேல் ஒருமுழ மூடி ப்பின் அதன்மேல் சாமம், ஒருஅங்குலகனம் பரப்பி அஷ்டதளகமலமெழுதி முன்போல் வஸ்திரத்தால்மூடி இப்படியே திலம், கோதுமை விரீஹீ, தண்டுலங்களைக் கிரமமாக ஒரு அங்குலம் முன்போற்பரப்பி ஒவ்வொன் றிலும் அஷ்டபத்மதளம் வரைந்து வஸ்திரத்தால் மூடி' அதன்மேல் சூத, வில்வ, ஆமலக,குச, அபாமார்க்க மெ ன்னும்பஞ்சபத்திரிகளை விரித்து,அதன்மேல்வஸ்திரமூ டி இப்படி ஏழுநிலை ஆதாரம் பரிகற்பித்து:

அதில் லிங்கஸ்தலம் கோமுகம் உத்தரபாகமாக வி ருத்திச்; சீற்காரபிராணயாமத்தினல், ஸஹசிர மூலமந் திரஞ்செபித்து, அதற்கு, மாத்ருகாநியாசம், கலாநி யாச, மந்திரநியாசாதிகளால் பிராணப் பிரதிஷ்டைசெய் து, கலசோதகத்தினல் ஸ்நாநஞ்செய்து, அஷ்டவிதார் ச்சனையுஞ் செய்து முன்னமே பரிசுத்தமாக விருக்கும் லிங்கஸ்தலத்தை, ஆசாரியன்,தன், வாமகரத்தில்எழுந்த ருளப்பண்ணிக்கொண்டு, பூர்வோக்தக்கிரமப்படி சி ருட்டிதிதி சிவகலாப்பிரதிஷ்டையுஞ்செய்து, பின் சீஷ னுடைய வாமாஸ்த பீடத்தில் "அகமே,அஸ்துபஹவா ன்" என்னுஞ் சுருதி: சித்தமான சிவலிங்கங் கோமுகம், வாமபாகமாக, ஸ்தாபிப்பதே கிரியாதீக்ஷையாம்.

ஸ்ரீகுருசீஷனே வாமகனே, உன்பிராணலிங்கம் த த்வாதீதமான, பரவஸ்து, ஹரிபிர்ம்மாதிகள் தேடிக்கா ணுத நிசஸத்துவம் இதுதான்; இதைநீ, நிமிஷார்த்தமா யினுஞ் சரீரத்திலிருந்து வியோகமாகாமல்; சாவதான த்திலிருந்து தரித்துக்கொள்; திரிகாலங்களிலுங் தப்பா தர்ச்சி, லிங்காற்பிதமில்லாத ஒன்றையும், புசியாதே;



சகலபோக, மோக்ஷங்களும் கைவந்ததென்று எண்ணிக் கொள்; சகலகிலேசங்களையும் விட்டுச் சுகியாயிரு; இ துவேசத்தியம் என்று இவைமுதலியவைகளை உபதே சிப்பது வீரசைவதீக்ஷையாம்.

மேலும்ஆக்ஞாதீக்ஷை, உபமாதீக்ஷை, ஸொஸ்தி காரோஹணம், கலசாபிஷேகம்,விபூதிபட்டம். லிங்கா யுதம், லிங்கஸ்வாயுதம் எனச்சத்தவிததீக்ஷைகளுண்டு.

அவற்றுள் ஸ்ரீகுருதன் ஆக்ஞையைச் சீஷனிடத் தில் பிரதிபாதிப்பதே ஆக்ஞாதீக்ஷையாம்.

புராதநர் சமயாசாரத்துக்கேசதிர்சமாகச்செய்வ தே உபாதீக்ஷையாம்.

ஸொஸ்திகாவென்னு மண்டலத்தில் சீஷனை யிரு த்தி மந்திர நியாசாதிகள்செய்து மந்திரசரீரியென்பதே ஸொஸ்திகாரோஹணமாம்.

பஞ்ச கலசோதகங்களும் சீஷனுக்கு, ஸ்நாநஞ்செ ய்வதே கலசாபிஷேகமாம்.

ஆகமோத்தஸ்தாநங்களிலும் அந்தந்தமந்திரங்களா ல் ஸ்ரீவிபூதிதாரணஞ்செய்வதே விபூதிபட்டமாம்.

ஆசாரியன் சீஷனுக்குக்கொடுக்கத்தக்க லிங்கத் தை அர்ச்சித்துச்சீஷனைப்பார்ப்பிப்பதேலிங்காயுதமாம்

ஸ்ரீகுருகொடுத்தலிங்கத்தைச் சீஷன் சாவதானத் திருந்து உத்தமாங்காதி ஸ்தாநங்களில் தரிப்பதே லிங் காயுதமாம்.

## வீரசைவசிவலிங்கபூஜாவிதி.

இப்படிச்சாங்கோபாங்கக்கிரமத்தில் சங்கீகமான சிவதீக்ஷையில், லிங்காங்கசம்பந்தியான, விசேஷ வீர சைவன்செய்யுஞ் சிவலிங்கபூஜாவிதி எப்படியெனின்,

சிரேஷ்டகுருக்கள் யாதாதை ஆசரிக்கிறார்களோ அதையே லோகத்தவர் வர்த்திப்பார்கள், அதுபோலத்தான் நித்தியநிர்ம்மலனானாலும் மந்திர நியாசாதி சகல சாங்கிகமாகச்சிவலிங்கார்ச்சனை செய்யுமிடத்து முதல் ஓம்ஹாம் அநந்தசத்திதாமனேஜோதிருபாய சிவாஸ்திராயபடு என்னும் மந்திரத்தால் மனசுத்தியாசரித்துப் பின்.

"ஓம் கூவொவாயிடிம் ஸவஹும் விஸ்வாஹ ஏதாஹு்ரா வஃ, வ்ராணவாகூவஃ, வஶவகூவொஹுரவஃ, ஸம ராடிாவொ விராலாவஃ, ஸுராடிாவஃ, ஸூதாமிஷ்ரா வஃ,ஜெ்ரதிமிஷ்ராவஃ,பஜ-ஏமிஷ்ராவஃ,ஸத்ரூாவஃ, ஸவஹுாஷெவதாகூவஃ, ஸ-ஏரீ ஸ-வஸு-வராவ ஓம்."

என்னுமந்திராபிமந்திரிதமான உதகத்தினால் கரசரண முகபிரக்ஷாளனஞ்செய்துபின்ஸர்வ்வஞ்ஞாயநமஃஎன்னு மந்திரமுச்சரித்துப்;பூஜாக்கிரகம்புகுந்து, ஓம் ஹாம்பிருதுவியாத்மனேநமஃ நிவிர்த்திகலாயைநமஃஎன்னுமந்திரத்தினால் ஸ்தாநசுத்தியைஆசரித்துத்திரியம்பகமென்னும் மந்திரோற்சாரணத்தினால் பூர்வ்வோத்திர முகனாகிச் சுகாசநத்திருந்து ஓம் ஹோம் ஈசாநாயநமஃ என்னுமந்திரத்தால் தக்ஷணகரமத்தியாநாமிகாங்குஷ்டங்களால் ஸ்ரீமத்விபூதியை ஆதாரத் திருந்தெடுத்துக்கொண்டு, வாமகர அங்குஷ்டாதி அங்குலிகளில் யகாராதி நகாராந்தமான பஞ்சாக்ஷரங்களை யுச்சரித்து விபூதியை யிட்டுப் பின் "ஸவநாடி்ஜ்ஜமதவஹும் த்ரிவஹு்ரா தூ ஸடிாமிவஃ। வெஹுயஹுவ்ராஷ்ஷிவீஜாயதமெஹூ ஸ்ரீ ஸஹுநெநமஃ॥ என்னுமந்திரத்தினால் பஜிதத்துக்கு நமஸ்கரித்துத், தக்ஷணகரத்தால் மூடிவலது தொடையின் மேலிட்டு ஓம் நமசிவாய என்னும்மூலமந்திரத்தால் பதினொருதரம் அபிமந்திரித்து. அன்றி



"ஈஶாநஃ ஸவ்வவிஜாநாம் ஈஶ்வரஃ ஸவ்வபூதாநாம் ஹ்ரஹ்மாபதிஹ்ரஹ்மணோதிபதிஹ்ரஹ்மா ஶிவோமெஅஸ்து ஸதாஶிவோம்॥" என்னும் மந்திரத்தினாலும் மந்திரித்து, "ஓம நமோஸ்து ஸர்வெபுயஃ ஸர்வஸர்வெபுயஃ நமஸ்தெ அஸ்து ருத்ரரூபெபுயஃ ஈஶாநஃ ஸர்வவித்யாநாம் ஈஶ்வரஃ ஸர்வபூதாநாம் ஹ்ரஹ்மாதிபதிர்ஹ்ரஹ்மணோதிபதிஹ்ரஹ்மா ஶிவோ மெ அஸ்து ஸதாஶிவோம்॥" என்னும் மந்திரத்தினை லெடுத்து, ஓம் ஹோம் யம் ஈசாநாயநமஃ என்று சிரசிலும், ஓம் ஹேம் வாம் தற்புருஷாயநமஃ என்று முகத்திலும், ஓம் ஹும் வீம் அகோராயநமஃ என்றுஇருதயத்திலும், ஓம் ஹிம் மம் வாமதேவாயநமஃ என்றுகுய்யத்திலும், ஓம் ஹம் நம் சத்தியோ ஜாதாயநமஃ என்று பாதத்திலும்,சர்வ்வாங்கத்திலும் சம்புரோக்ஷித்துப் பின்ஆசமநஞ்செய்து,பின்னும்விபூதியை எடுத்து மூலமந்திரத்தால் பதினொருதரம் மந்திரித்து, அந்தப்பஸ்மத்தினால் ஓம் ஹோம் ஈசாநாயநமஃ என்று சிரசில் [ரு] தரம் தொட்டு, ஓம் ஹேம் தற்புருஷாயநமஃ என்று [ச] தரம் முகத்தில் தொட்டு, ஓம் ஹும் அகோராயநமஃ என்று[அ] தரம் இருதயத்தைத் தொட்டு, ஓம் ஹிம் வாமதேவாயநமஃ என்று(கங)தரம்குய்யத்தைத்தொட்டு, ஓம்ஹம் சத்தியோசாதாயநமஃ என்று (அ) தரம் பாதத்தில்தொட்டுச்சர்வ்வாங்கமும் உத்தூளனஞ்செய்து.

பின்னும் பஜிதத்தைஎடுத்து ஜலமிசிரஞ்செய்து பூர்வ்வோக்தமாக, மூர்த்திகிலலாடாதிஸ்தாநங்களில்," த்ர்யம்பகம் யஜாமஹெ ஸுகந்திம் புஷ்டிவர்த்தநம்- த்ர்யாயுஷம் ஜமதக்நெஃ கஶ்யபஸ்ய த்ர்யாயுஷம்- யத்தேவாநாம் த்ர்யாயுஷம்- தந்நோ

ஸூத்ர்யாயஷம்॥" என்னும்திரியாயுஷ மந்திரங்களை யும்,"த்ர்யம்பகம்யஜாமஹே। ஸுகந்திம்புஷ்டிவர்த்த நம்। உர்வாருகமிவபந்தநாந்ம்ருத்யோர்முக்ஷீயமா ம்ருதாத்॥" என்னும் திரியம்பகமந்திரத்தைச்செபித்துத் திரிபுண்டரதாரணஞ்செய்து, பின் ஓம் ஹாம் ஈசாநமூர்த் தயே நமஃ- மூர்த்திநி- ஓம் ஹ்ரீம் தத்புருஷமூர்த்தயே நமஃ- பூர்வமூர்த்திநி- ஓம் ஹ்ரூம் அகோரமூர்த்தயே நமஃ- தக்ஷிணமூர்த்திநி- ஓம் ஹ்ரைம் வாமதேவமூர்த்தயே நமஃ- வாமமூர்த்திநி- ஓம் ஹ்ரௌம் ஸத்யோஜாதமூர்த்தயே நமஃ- பச்சிமமூர்த்திநி- ஓம் தற்புருஷாயவித்மஹே மஹாதேவாய நமஃ - பூர்வ்வவத்திரே-ஓம் அகோரவித்யாய நமஃ- தக்ஷணவத்திரே - ஓம் வாமதேவாய நமஃ- வாமவத்திரே- ஓம் ஸத்யோஜாதாய நமஃ- பச்சிமவத்திரே- ஓம் ஈசாநவக்த்ராய நமஃ- ஊர்த்துவவத்திரே - ஓம் ஸத்யோஜாத ஹ்ருத யாய நமஃ- இருதயம்- ஓம் வாமதேவ கோஹாய நமஃ கண்டே- ஓம் அகோர ஹ்ருதயாய நமஃ தக்ஷிணாம் ஸே- ஓம்அகோர தற்புருஷாய நமஃ - வாமாம் ஸே- ஓம் ஈசாநமூர்த்தயே நமஃ- நாபௌ- ஓம் ஸர்வேச்வராய நமஃ- ஜடரே-ஓம் நமஃ ஸர்வேச்வ ராய நமஃ - புருஷ்டே - ஓம் ருத்ரோ மஹாதேவாய நமஃ- வக்ஷஸே-ஓம் வாமதே வாய நமோ ஜ்யேஷ்டாய நமஃ குஹ்யே- ஓம் ஜ்யேஷ்டாய நமோ ருத்ராய நமஃ லிங்கே- ஓம் ருத்ராய நமோ ருத்ராய நமஃ தக்ஷிணோரௌ- ஓம் காலாய நமஃ கலாய நமஃ வாமோரௌ- ஓம் கலவிகரணாய நமஃ தக்ஷிணஜாநுநி- ஓம்



விகரணாய நமஃ பலப்ரமதநாய நமஃ - வாமஜாநுநி - ஓம் பலவிகரணாய நமஃ தக்ஷணஜங்காயாம் - ஓம் விகரணாய நமோ பலாய நமஃ வாமஜங்காயாம் - ஸர்வபூதா ய நமஃ தக்ஷணஸ்பிசி- ஓம் ப்ரமதநாய நமஃ வாமஸ்பிசி - ஓம் ஸர்வபூததமநாய நமோ மநோந்ம ந்யை நமஃ கட்டியாம்- ஓம் அகோரேப்யோ நமஃ தக்ஷணபா ரிசே- ஓம் உத்தமாய நமஃ அகோராய நமஃ வாமபாரி ஸே- ஓம் ஸர்வேப்யோ ஸர்வஸர்வேப்யோ சித்தியை நமஃ-த க்ஷணவாஹே - ஓம் ஸர்வேப்யோ நமஸ்தே நமஃ - ஹித் தியை நமஃ- வாமபாஹே - ஓம் பவேசாநாய நமஃ த க்ஷணகரே- ஓம் அவ்யக்தாய நமஃ ஈஸாநாய நமஃ- வாம கரே- ஜந்மாந்த ஸர்வவேதாயை- ஓம் வஜ்ராங்காய நமஃ- சிரசு- ஓம் வஜ்ராயாய நமஃ தக்ஷணவாகு - ஓம் உதயஸர்வாய நமோ துவத்தியை நமஃ- வாமவாகு- இப்ப டிக்கலாநியாசம் விஸ்தரித்து.

பின் ஓம் ஹ்ராம் ஸர்வஜ்ஞசத்திதாமனே, இருதயா ய நமஃ - ஓம் ஹ்ரீம் நித்யதிருப்திசத்திதாமனே சிரசேஸ்வா ஹா-ஓம் ஹ்ரூம் அநாதிபோயசத்திதாமனே சிகாயைவ ஷட்- ஓம் ஹ்ரைம் ஸ்வதந்தரசத்திதாமனே கவசாய ஹும்- ஓம் ஹ்ரௌம் அலுப்தசத்திதாமனே நேத்ரத் ரயாயவௌஷட்- ஓம் ஹ்ரம் அநந்தசத்திதாமனே அஸ்த்ரா யபட்- என்று ஷடங்கநியாஸஞ்செய்து.

ஓம் ஹ்ராம் ஈசாநாய நமஃ என்றுசிரசிலும்- ஓம் ஹ்ரீம் தற்புருஷாய நமஃ என்று முகத்திலும்-ஓம்ஹ்ரூம் அகோராய நமஃ என்று இருதயத்திலும்- ஓம் ஹ்ரைம் வா மதேவாய நமஃ என்றுகுய்யத்திலும்- ஓம் ஹ்ரௌம் சத்தி

யோஜாதாய நமஃ என்றுபாதத்திலும் - பஞ்சபிரஹ்மநி யாசஞ்செய்து.

பின் மூர்த்திநி, லலாடம், கண்டம், இருதயம், நாபி, களில் கிரமமாக யகாராதி நகாராந்தமான, பஞ்சாக்ஷரநியாசஞ்செய்து.

ருத்திராக்ஷபூசை செய்யும்வகை.

ருத்திராக்ஷத்தை வஸ்திரத்திலிட்டு,ஓம், உரும், சுரும், உரும்,ஜ்ரூம்,ருஹூம், ஹ்ராம், ரூம், ரூமாவிஷ்ஷிம், ஸம்,ஜம், க்ஷாம், க்ஷம், விக்ஷாரவும், வம், நமஃ- என்னும்மந்திரத்தால் அபிமந்திரித்து. "ருத்ராக்ஷ வ்ருக்ஷ வீஜாயாம ஹாருத்ரஸம்ஹாருத்ரயெயவெ। நெதுத்துயாய ருத்ராய நமொநொசுஹிதாசுடநெ॥" என்னுமந்திரத்தால் நமஸ்மரித்து.

பின் சிகாதியங்கங்களில்பூர்வ்வோக்த கிரமப்படி ஓம் ஸ்ரீம் சதாசிவாய நமஃ- ஓம் வந்நிசூரியசோமாதி பதாய நமஃ - ஷடுத்ஸிரிம்ஸதத்துவாத்மகாய பரசிவாய நமஃ- ஓம் சோமாயை நமஃ- ஓம் சோமாய நமஃ- திரியம்பகாத்மனே நமஃ ஸ்ரீகண்டாய நமஃ- ஓம்ஸ்ரீகண்டாதிமூர்த்தியாத்மகாய நமஃ- ஸ்ரீஸவஜ்ஜாய நமஃ - ஓம் ஸஹஸ்ராஸநாதிசோடஸமூர்த்தியாத்மகாயஸ்ரீகண்டாய நமஃ - ஓம் ஸ்ரீம் சோமகலாத்மகாய ஸ்ரீசோமநாதாய நமஃ- ஓம் துவாதசாதித்தியாயாதிஷ்டாய ஸ்ரீ மஹாதேவாய நமஃ- ஓம் கேசவாதித்தியாதிபாய உமாபதயே நமஃ- ஓம் சதருத்திராவிஷ்டாத்மகாய ஸ்ரீவிஸ்வேஸ்வராய நமஃ - ஓம் வதசஷ்டிஸஹாஸ்ரஜ உமாயுக்தாய ஓ ஹிம்ஸநஸ்தாந பூதையே ஸவஜ்ஞாதயெ நெ ஸவஜ்ஞாஸ்ருவாய உமாவதயெ



நமஃ-என்னுமந்திரங்களால் பூர்வ்வோக்தசங்கியாக் கிரமத்தில் உருத்திராக்ஷமாலிகை தரித்து.

பின்சிவாய நமஃ- ருத்திராய நமஃ- பசுபதியே நமஃ- நீலகண்டாய நமஃ- மஹேஸ்வராய நமஃ - அரிகேசாய நமஃ- விருபாக்ஷாய நமஃ- திரிபுராந்தகாய நமஃ - பிநாகிநே நமஃ- சம்புவே நமஃ- சூலிநியே நமஃ- மஹாதேவாய நமஃ- என்னும் துவாதசமந்திரோச்சாரணத்தால் புஷ்பாஞ்சலிகொடுத்துப் பரசிவன் நித்திய நிஷ்களனுனும் பக்தர்ஹிதார்த்தமாக கிருதகடிந நியாயம்போல மூர்த்தித்துவத்தினுல் அவனை உபசரித்துக்கொள்ளுகிறதுக்குயோக்கியமாம்.

மேலும் லிங்கமூலமே பாதங்கள் - லிங்காக்கிரமே முகம், லிங்கபாரிசமே புஜங்கள், இலிங்கத்தின் பின்பக்கமே புருஷ்டாதிகளும் பரிபாவித்து; ஓம் ஹ்ரூம் தற்புருஷாய நமஃ- என்னும்மந்திரத்தினுல் சுவாமிமுகஞ் செய்து கொண்டு, ஓம் ஹாம் சத்தியோஜாதாய நமஃ பாத்தியம்சுவாஹா, ஓம் ஹீம் வாமதேவாய நமஃ ஆசமநம் சுவாஹா,ஓம் ஹூம் அகோராய நமஃ அர்க்கியம்சுவாஹா, என்றுபாத்தியாதிகள் கொடுத்து.

ஓம் ஹாம் சத்தியோஜாதாய நமஃ கோமுத்திரம் சுவாஹா, ஓம் ஹீம் வாமதேவாய நமஃ கோமயம் சுவாஹா, ஓம் ஹூம் அகோராய நமஃ க்ஷீரம் சுவாஹா, ஓம் ஹைம் தற்புருஷாய நமஃ ததிசுவாஹா, ஓம் ஹௌம் ஈசாநாய நமஃ கிருதம்சுவாஹா, என்றுபஞ்சகௌவியஅபிஷேகஞ்செய்து. "ஸ்ருஷ்டாய [illegible] ஸவாவாஜஸம்ஸமயெ ॥ ஓம் ஸ்ருதம்ஹோவ்யஷிய। ஸவாவாஜஸம்ஸமயெ ॥ ஓம்

க்ஷீரேண ஸ்நாபயாமி." என்றுக்ஷீராபிஷேகஞ் செய்து மேல் சத்தியோஜாத மந்திரத்தால் ஜலஸநாநஞ்செய்து. "ததிக்ராவ்ணோ அகாரிஷம்। ஜிஷ்ணோரச்வஸ்ய வாஜிந: ஸுரபிநோ முகாகரத் ப்ரண ஆயூம்ஷி தாரிஷத்॥" ததிஸ்நாபயாமி- என்றுததிஸ்நாநஞ்செய்து பின்வாமதேவமந்திரத்தினுல் ஜலஸ்நாநஞ்செய்து. "ஶுக்ரமஸி ஜ்யோதிரஸி தேஜோஸி தேவோவஸ் ஸவிதோத்புநாது। அச்சித்ரேண பவித்ரேண வஸோஸ் ஸூர்யஸ்ய ரச்மிபி:॥" க்ருதேந ஸ்நாபயாமி - என்றுகிருதஸ்நாநஞ் செய்து பின்அகோரமந்திரத்தினுல் ஜலஸ்நாநஞ்செய்து. "மதுவாதா ருதாயதே மதுக்ஷரந்தி ஸிந்தவ:। மாத்வீர்நஸ் ஸந்த்வோஷதீ: மதுநக்தமுதோஷஸி। மதுமத் பார்த்திவம் ரஜ:। மதுத்யௌரஸ்து ந: பிதா। மதுமாந்நோ வநஸ்பதி:। மதுமாம் அஸ்து ஸூர்ய: । மாத்வீர்காவோ பவந்து ந:॥" மதுநா ஸ்நாபயாமி- என்றுமதுஸ்நாநஞ்செய்து, மேல்தற்புருஷமந்திரத்தினுல்ஜலஸ்நாநஞ்செய்து- ஓம் ஸ்வாது: பவஸ்வ திவ்யாய ஜந்மநே। ஸ்வாதுரிந்த்ராய ஸுஹவீது நாம்நே। ஸ்வாதுர்மித்ராய வருணாய வாயவே ப்ருஹஸ்பதயே மதுமாம் அதாப்ய:॥ ஶர்க்கராஸ்நாபயாமி- என்று சருக்கரை ஸ்நாநஞ்செய்து பின் ஈசாநமந்திரத்தினுல் ஜலஸ்நாநஞ் செய்து. பஞ்சாமிருத அபிஷேகத்துக்குப் பின்கோதுமைச் சூரணத்தினுல் லிங்கத்துக்கு உத்துவர்த் தநஞ் செய்து மந்தோஷணவாரியால் ஸ்நாநஞ்செய்வித்து.

பின் ஓம் ஹௌம் ஈசாநாய நம:- என்று கந்தோதகங்கொடுத்து. ஓம் ஹைம் தற்புருஷாய நம:- என்றுபுஷ்போதகங்கொடுத்து. ஓம் ஹும் அகோராய நம:- என்று சுவர்ணேதகங்கொடுத்து. ஓம் ஹ்ரீம் வாமதேவாய நம:



என்று ரத்திநோதகங்கொடுத்து. ஓம் ஹாம் சத்தியோஜாதாய நம:- என்று மூலமந்திரோதகங்கொடுத்து. ஓம் ஹாம், ஹீம், ஹூம், ஹைம், ஹௌம், என்னும்சிவாங்கமந்திரத்தால் திலோதகஸநாநஞ் செய்வித்து. பின்தீர்த்தோதகங் கொடுத்து.அந்தத் தீர்தோதகத்தினுல் ஸ்ரீருத்திர, பஞ்சப்பிர்ம்மபுருஷஸூக்த மூலமந்திராதிகளால் மஹாஸ்நாநஞ்செய்வித்து.

ஹாம் இருதயாய நம: என்றுபாத்தியஆசமந அர்க்கியங்கொடுத்து, அங்குஷ்டஅநாமிகையினுல் விபூதியை எடுத்து மந்திரோதகத்தில் கலந்து, ஓம் ஹௌம் தற்புருஷாய நம: என்றுஇலிங்கத்துக்கிட்டு, ஓம் ஹாம் இருதயாய நம: வஸ்த்ரம் சுவாஹா. ஓம் ஹௌம் கவசாய ஹும் உபவீதம் சுவாஹா. ஓம் ஹ்ரீம் வாமதேவாய நம: கந்தம்சுவாஹா. ஓம் ஹ: அஸ்த்ராயபடு அக்ஷதான் சுவாஹா. ஓம் நமசிவாய புஷ்பஞ்சுவாஹா.என்று தத்தத்திரவியங்களைச்சமர்ப்பித்து.

அங்க பூசை.

பின் புஷ்பங்களை, அங்குஷ்ட, அநாமிகை, மத்திமைகளால், ஹராய நம: பாதௌபூஜையாமி, சம்பவே நம: குல்ஃபௌபூஜையாமி, சுபாய நம: ஜாநுநீபூஜையாமி,சர்வநிவாசாய நம: ஊரும்பூஜையாமி,சர்வைஸ்வரியாய நம: கடிம்பூஜையாமி, சர்வ்வாக்ஷாய நம: ஜகநம்பூஜையாமி,திக்குவாசசே நம: மத்திமம்பூஜையாமி, நக்ஷத்திரமாலினே நம: நாபிம்பூஜையாமி, சர்வேஸ்வராய நம: குக்ஷிம்பூஜையாமி, உமாகாந்தாய நம: வக்ஷம்பூஜையாமி, நீலகண்டாய நம: கண்டம்பூஜையாமி, திரிபுரசம்ஹர்த்தினே நம: பாகும்பூஜையாமி, சங்கராய நம: கரௌ பூஜையாமி, விரஷாய நம: பக்ஷிகண்டம்பூஜையாமி, கிருபலதாயினே நம: முகம்பூஜையாமி, குகாய நம: நாசிகம்பூஜையாமி, இந்துவார்க்கவந்நியே நம: நேத்திரம்பூஜையாமி,

கபாலிநே நமஃ லலாடம்பூஜையாமி, பணிகுண்டலாய நமஃ கர்ணம்பூஜையாமி, கங்காதராய நமஃ ஜடாம்பூஜையாமி, சோமபூஷணாய நமஃ கபர்த்தம்பூஜையாமி, சுபதாயினே நமஃ சர்வ்வாங்கம்பூஜையாமி யென்று லிங்கத்துக்கு அவயவபூஜைவிஸ்தரித்து.

ஓம் ஹ்ராம். இருதயாயநமஃ. ஓம் ஹ்ரீம்சிரசேசுவாஹா. ஓம் ஹ்ரூம் சிகாயவஷடு. ஓம்ஹ்ரைம் கவசாயஹூம். ஓம் ஹ்ரௌம்நேத்திராயவவுஷடு. ஓம் ஹ்ரஃ அஸ்திராயபடு என்றுஷடங்கமந்திரமும், ஓம் ஹ்ராம் ஹ்ரீம் ஹ்ரூம் ஹ்ரைம் ஹ்ரௌம் ஹ்ரஃ என்னுஞ் சிவாங்கமந்திரமும், ஹ்ரூம்சும் க்ஷூம். ஹம். ஸ. என்னும்பஞ்சப்பிரசாத மந்திரமும், நமசிவாயவென்னும் பஞ்சாக்ஷரமந்திரமும், ஓம்நமசிவாயவென்னும்மூலபஞ்சாக்ஷரமந்திரமும், ஓம் ஹ்ராம் ஹ்ரீம் ஹ்ரூம்நமசிவாயவென்னும் தூலபஞ்சாக்ஷரமந்திரமும், ஓம் ஹ்ரீம்சிவாயஎன்னும்சூக்ஷமபஞ்சாக்ஷரமந்திரமும், ஓம் ஹ்ரீம் ஹ்ரூம்நமசிவாயவென்னு மாயாக்கியபஞ்சாக்ஷரமந்திரமும், ஓம் ஹ்ராம் ஹ்ரீம் ஹ்ரூம் ஹ்ரௌம் நமசிவாயவென்னும் பிரசாதபஞ்சாக்ஷரமந்திரமும், ஓம்கஃஅநந்தசத்திதாமனே ஜோதிருபாய சிவாஸ்திராயபடு என்னும்சிவாஸ்திரமந்திரமும், ஓம் க்ஷூம் ஈம் ஊம்வியோமவியாபிநேவியோமாஸ்திராயபடு என்னும் வியோமாஸ்திரமந்திரமும், ஓம்ஸ்லிம் பசுஹூம்படு என்னும்பாசுபதாஸ்திரமந்திரமும், ஓம்ஸிற்சிகிம் சிற்சிகிம்ஷூம்பாசதசூரிகாஸ்திராயபடுஎன்னுஞ் சூரிகாஸ்திரமந்திரமும், ஓம்விரஸ்புரவிரஸ்புரகோர கோரதமதனுரூப சடசட ப்ரசட ப்ரசட கஹ கஹ வமவம காதாயகாதாய ஹூம்படு என்னும்அகோராஸ்திரமந்திரமும்லிங்கமத்தியத்தில் அநுசந்தாநித்து.

அ மூர்த்நி, ஆ லலாடம், இ தக்ஷிணநேத்திரம், ஈ வாமநேத்திரம், உ தக்ஷிணசோத்திரம, ஊ வாம



சோத்திரம், ஐ தக்ஷிணகபோலம், ஐௗ வாமகபோலம், ஏ, ஏ தக்ஷிணவாமநாசிகாபுடங்கள், ஏ, ஐ ஊர்த்த அதோ ஒஷ்டங்கள், ஓ, ஔ ஊர்த்தஅதோதந்தபங்திகள், அம், அஃ மேல்கீழிறுகள், க ச ட த ப- தக்ஷணஅஸ்தங்கள்,ம ஶ ஜ ஸ ஞ- வாமஅஸ்தங்கள், ட ஒ ட ஷ ண-தக்ஷணபாதம், த ய த ய ந- வாமபாதம், ப உதரம், ப ப தக்ஷணவாமபாரிசங்கள், ம கந்தம், ய இருதயம், ய ர ல வ ஶ ஷ ஸ சத்த தாதுக்கள், ஹ ஆத்மன், ள க்ஷ பூஜாம்பசங்மாதிவைரிவிஷயமான குரோதமாகுமென்று லிங்கமத்தியத்தில் மாதுருகா அக்ஷரம்ஸ்மரித்து. இப்படி

கலாநியாசம்,பிர்ம்மநியாசங்களைஸ்மரித்து, ஓம் ஹ்ரூம் நேத்திராயவௌஷடு, தூபஞ்சுவாஹா, என்று தூபம் சமர்ப்பித்து, ஓம் ஹ்ரௌம் கவசாயஹூம் என்று நீராஞ்சந தீபங்கொடுத்து, ஓம்சிவாயநமஎன்று நைவேத்தியம் பதாகைமுத்திரையினால்சமர்ப்பித்து, ஓம்நமசிவாயபாநியம் சுவாஹா, ஓம் ஹ்ராம் இருதயாய நமஃ ஆசமநம்சுவாஹா, ஓம்நமசிவாய அநுலேபநஞ்சுவாஹா, ஓம் ஹ்ராம் தற்புருஷாய நமஃ தாம்பூலம் சுவாஹா, ஹ்ரா ஹ்ரௌம் ஹ்ரம் ஹ்ரௌம் ஹம்ஸஃ ஆபரணஞ்சுவாஹா வென்றுஅந்தந்தமந்திரங்களால் அந்தந்த வஸ்துக்களை நிவேதித்து, ஓம் நமசிவாய தர்ப்பணஞ் சுவாஹாவென்று தர்ப்பணங்கொடுத்துச்சத்திரசாமரவிசிறியாதிகளுஞ் சமர்ப்பித்து, லௌகிகவைதிகதோத்திரமுஞ்செய்து,

பவாயதெவாய நமஃ-சர்வ்வாயதெவாய நமஃ- ருத்திராயதெவாய நமஃ- ஸஹமஹ தேதெவாய நமஃ- பசுபதியேதெவாய நமஃ- உக்கிராயதெவாய நமஃ- பீமாயதெவாய நமஃ- ஈசாநாயதெவாய நமஃ-என்றுஅஷ்டபுஷ்பம் சமர்ப்

பித்து பூர்வ்வோக்த சிவாயநமஃஎன்னும் துவாதசமந்தி
ரங்களால், புஷ்பாஞ்சலிகொடுத்து, திரியம்பக மந்திரத்
தால்மந்திரபுஷ்பஞ் சமர்ப்பித்துத் தக்ஷணகராஞ்சலி பு
ஷ்போதகந்தெளித்து, அச்சதுரங்குலிகளும் அகுஞ்சந
ஞ்செய்து பூசைசமர்ப்பயாமியென்று அந்தப்புஷ்போ
தகங்களைத்தன்பாத மூலவாமபாரிசத்தில் கநிஷ்டாங்கு
லியால்போட்டுப் பூசைசமாப்தியாக்கவேண்டும்.

## ஸ்தலாதிஷட்விதங்கள்.

மேலு மவ்விசேஷ வீரசைவன் ஸ்ரீகுருவால் உப
தேசமான வேதபுராணுத்ம சாரபுராதநமான சிவஸ்தல
த்தில் பத்திகர்ம்மக்ஷய நிர்ம்மல மதவிசாரசம்சய சம்மி
யஞானமென்னு மிவைகளையறிந்த பக்த, மகேச்சுவர, பி
ரசாதி, பிராணலிங்கி, சரண, ஐக்கியமென்னும் சட.ஸ்த
லங்களும், பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாச, ஆத்ம
மென்னும் சடங்கங்களும், சித்த மநோபுத்தி ஆங்கார,
ஞானபாவகமென்னும் ஆறு அஸ்தங்களும், கர்ம்மசாதா
க்கிய, கத்துருசாதாக்கிய, மூர்த்திசாதாக்கிய, அமூர்த்
திசாதாக்கிய, சிவசாதாக்கிய, மஹாசாதாக்கிய மென்
னும் ஆறுசாதாக்கியங்களும்;

கிரியாசத்தி, இச்சாசத்தி, ஞானசத்தி, ஆதிசத்தி,
பராசத்தி, சித்சத்தி யென்னும் ஆறுசத்திகளும் ; ஆசா
ரலிங்கம், குருலிங்கம், சிவலிங்கம், சங்கமலிங்கம், பிரசா
தலிங்கம், மஹாலிங்கமென்னும்ஆறுலிங்கங்களும்; நிவி
ர்த்தி, பிரதிஷ்டை, வித்தை, சாந்தி, சாந்தியாதீதை, சா
ந்தியாதீதோத்தனா யென்னுமாறுகலைகளும்; கிராண,
சிங்குவை, நேத்திர, தொக்கு, சோத்திர, இருதயம் எ
ன்னும் ஆறுமுகங்களும்; கந்த, ரச, ரூப, பரிச, சத்த, ப
ரிணாமமென்னும் ஆறுபதார்த்தங்களும்; சிரத்தாபக்தி,
நிஷ்டாபக்தி, அவதானபக்தி, அநுபவபக்தி, ஆநந்தபக்



தி, சமாசபக்தியென்னும் ஆறுபக்திகளும்; அறிந்து ஆ
சரிக்குமிடத்தில் முதற்கூறியபக்தியாதி சட்ஸ்தலங்க
ளுள், ஆசாராதிசடுவிதலிங்கங்கள் ஒவ்வொன்றுங் கிரி
யாபேதத்தினால் மும்மூன்றாகிப் பதினெண்பேதமாம்.
எப்படியெனின்;

## ஆசாரத்திரிவிதம்.

சதாசார, நிதாசார, கணாசார மென்னும் ஆசாரலி
ங்கத்திரிவிதமாம். அவற்றுள் யாதானுமொன்று தன் ச
ன்மார்க்கத்தால் சகல சரணருக்குஞ் சந்தோஷங்கொடு
ப்பதே சதாசாரமாம். பக்தியினால் தான்பிடித்த ஆசார
ம்பிராணாந்தம் நடப்பதே நிதாசாரமாம். சிவ, மகேச்சுவ
ர நிந்தைசெய்பவர்களைச் சிக்ஷிப்பனென்பதே கணாசா
ரமாம்.

## தீக்ஷாத்திரயம்.

தீக்ஷை, சிக்ஷை, சுவாநுபவமென்னுங் குருலிங்க
த்திரயங்களுண்டு. அவற்றுள் ஆகமோக்த விதானத்தால்
குண்டமண்டலாதி ரசனைகளினால் சடத்துவசுத்தியா
திகளைச்செய்வதே தீக்ஷையாம். சங்கமமேலிங்கமென்
னும் சம்மியஞானம் சத்புருஷர்களா லுண்டாவதே சி
க்ஷையாம். பூர்வ்வஜந்ம சமஸ்காரபலத்தினால்பக்திஞா
நந்தோன்றுவதே சுவாநுபவமாம். இஷ்டலிங்கம், பிரா
ணலிங்கம், திருத்திலிங்கமென்னும் திரிவிதத்தில் ஸ்ரீகு
ருசிவதீக்ஷையால் கொடுத்ததே இஷ்டலிங்கமாம். தே
கருண வியார்த்தியைவிட்டுச் சிவலிங்கசுவரூபத்தில் ம
நம்வைப்பதே பிராணலிங்கமாம். சகலாவஸ்தைகளிலு
ம் சிவலிங்கத்துடன் அநந்யாபாவனையே திருத்திலிங்க
மாம். சுவயம்புலிங்கம், சரலிங்கம், பரலிங்கமெனச் சங்
கமலிங்கத்திரயமுண்டு. சிவலாஞ்சனை தரித்துத்தானே
லிங்கமென்றறிந்து பாஹ்யகர்ம்ம பரித்தியாகத்தினால்

சதாநந்தியாக விருப்பதே சுவயம்புலிங்கம். சிவலிங்கத்
துடனே சர்வ்வேந்திரியங்களுங்கலந்தேகமாகிப் பேதப்
பிராந்திதோன்ருது நிசாநந்தத்தோடு சுவயவிச்சையில்
விவகரிக்கிறதே சரலிங்கமாம். தாபரசங்கமாதிகளுக்கு
அதிஷ்டாத்திருதாணுவதே பரலிங்கமாம்.

மேலும் சுத்த, சித்த, பிரசித்தமென்னும் பிரசாத
லிங்கத்திரிவிதமுண்டு. அவற்றுள் குருபுக்தசேஷம் சு
த்தமாம். லிங்கபுக்தசேஷம் சித்தமாம். சங்கமபுக்தசே
ஷம் பிரசித்தமாம். பின்னும் பூர்வ்வசகலகர்ம்மகுணங்
களையும், காமாதிகளையும்விட்டு லிங்காநாதிபிடித்திருப்
பதே சுத்தம்.சிவஞானோதயமானதே சித்தம். சிவோஹ
ம் பாவநிச்சலக்கிருதமானதே பிரசித்தமாம்.

## மஹாலிங்கத்திரிவிதம்.

மேலும்பிண்டலிங்கம்,அண்டலிங்கம்,விந்தாகாசலி
ங்கமென மஹாலிங்கத்திரிவிதமுண்டு. தேகமே ஆலய
ம். ஆத்மநே லிங்கம், என்னும் நிச்சயமே பிண்டலிங்க
மாம். பூமியேபீடம் ஆகாசமேலிங்கம் என்னும் விகற்ப
ரகிதபாவனையே அண்டலிங்கமாம். ஆகாசமே தன்னு
ளம் அவ்வாகாசத்துள் அந்நியோந்நிய வியாப்தியான
அநுசந்தாநமாயிருப்பதே விந்தாகாசலிங்கமாம்.

## பக்தர்களின் ௩௬-பேதங்கள்.

மேலும் அந்தபக்தனே ஆசாராதி ஷடுவிதலிங்கங்
களில் வர்த்தநாபேதத்தால் (௩௬) திறமாவர் எப்படி
யெனின் ஆசாரலிங்கமோகி, ஆசாரலிங்கபக்தன், ஆசா
ரலிங்கபூசகன், ஆசாரலிங்கவீரன், ஆசாரலிங்கபிரசாதி,
ஆசாரலிங்கபிராணியென ஆசாரலிங்கஷடுவிதமாம். அ
வற்றுள் ஆசாரவீநரான ஸ்திரி, புத்திராதியரைவிட்டு
நிர்ம்மோகியாயிருப்பவனே ஆசாரலிங்கமோகி; சிவாசா
ரத்துக்கு விரோதமான தன் பூர்வ்வாசாரம் விட்டவ



னே ஆசாரலிங்கபக்தனும். அந்நியதேவதா பசனைகளை
விட்டு லிங்கார்ச்சநாதற்பரனே ஆசாரலிங்கபூசகனும். தா
ன்பிடித்த ஆசாரம் பிராணத்தியாகமானாலும் விடாதவ
னே ஆசாரலிங்கவீரனும். சுசித்துவ, அசுசித்துவாதி ச
ங்கற்பரகிதனே ஆசாரலிங்கபிரசாதியாம். சிவமகேச்சுவ
ர நிந்தைகேளாதவனே ஆசாரலிங்கபிராணியாம்.

மாதாபிதாமோகங்களை விட்டுக் குருவிடத்தில்
பிரீதனே குருலிங்கமோகியாம் பந்துக்கள் உபசாரம் வி
ட்டுக் குருவினுள் அநுகுணமாயிருப்பவனே குருலிங்க
பக்தனும். வேறுபூசைக்கிசையாது குருபூசகனானவனே
குருலிங்கபூசகனும், அந்நியமார்க்கம்விட்டுக் குருயுக்த
மார்க்க வர்த்தனையானவனே குருலிங்கவீரனும். குருவி
ன் ஆக்கிநாவசத்தனே குருலிங்க பிரசாதியாம். அந்நி
யசேவைக் கிசையாது குருசேவாதற்பரனே குருலிங்க
பிராணியாம்.

அந்நிய மோகமில்லாதவனே சிவலிங்கமோகியா
ம். அந்நியதெய்வ நிராசகனேசிவலிங்கபக்தனும். அந்நிய
தெய்வபூசை யில்லாதவனே சிவலிங்க பூசகனும். வே
றுபுண்ணிய க்ஷேத்திர யாத்திரை செய்யாதவனே சிவ
லிங்கவீரனும். சிவசாங்காதிகளை யிச்சித்திருப்பவனே
சிவலிங்க பிரசாதியாம். வநிதாதிபோக மில்லாதவனே
சிவலிங்க பிராணியாம்.

தன்பூர்வ்வாசாரங்களை நிஷேதித்தவனேசங்கமலிங்
கமோகியாம், சாதிகுலாபி மாநியதிகளைந்தவனே சங்
கமலிங்கபக்தனும், அந்நியார்ச்சனைகளுக்கு முகங்கொ
டாதவனே சங்கமலிங்கபூசகனும், அர்த்தப் பிராணதிக்
களைச் சங்கமருக்குக் கொடுத்து மற்றுமோகமில்லாதவ
னே சங்கமலிங்கவீரனும், சங்கமருக்குச் சகலதிரவியமு
ங் கொடாவிடின் கொள்ளாதவனே சங்கமலிங்க பிர

சாதியாம், சங்கமமே சாக்ஷாத்சிவமென்று விசுவாச முள்ளவனே சங்கமலிங்க பிராணியாம்.

அந்நிய ருசியறியாதவனே பிரசாதலிங்கமோகியாம்; பூர்வ்வாசாரங்களை விட்டவனே பிரசாதலிங்கபக்தனும்; அந்நியருடன் சிநேகசம்பாஷணைதாநப் பிரதிக்கிரகாதிகளில்லாதவனே பிரசாதலிங்கபூசகனும்; அந்நியர் திரவியங்களைத்தொடாதவனேபிரசாதலிங்கவீரனும்; அஹிம்சாதிகள் பண்ணாதவனும் பண்ணுவிக்காதவனும் பிரசாதலிங்க பிரசாதியாம், ஆத்மநிக்கிரமஞ் செய்யாதவனே பிரசாதலிங்க பிராணியாம்.

லோக விருத்தாந்தம் நினையாதவன் மஹாலிங்க மோகியாம், பூர்வ்வபக்தியாதியநுசந்தாநமில்லாதவனே மஹாலிங்க பக்தனும், அஞ்ஞாநிகளுடன் சங்கசம்பாஷணாதிகள் செய்யாதவனே மஹாலிங்க பூஜகனும், உற்பத்திஸ்திதிலயங்களுக்கு எப்போதுஞ் சிந்தனையில்லாதவனே மஹாலிங்கவீரனும்,பந்திபோஜநாதிகளொழிந்தவனே மஹாலிங்க பிரசாதியாம், பாஹியத்தார்ச்சனையர்ப்பணாதிக ளில்லாதவனாய் அந்தரங்க கிரியாநிஷ்டனே மஹாலிங்க பிராணியாம்.

இப்படிச் சடுஸ்தலபேதங்களையாராய்ந்து வர்த்திக்குமவற்றில் பிண்டாதிஞாந சூநியாந்தமான ஏகோத்தர சதத்தலக் கிரமமாகும் (௱௧) ஸ்தலத்தில் அங்கஸ்தலம் (௬௪) லிங்கஸ்தலம் (௩௭) ஆம்.

அவ்வங்கஸ்தலம் (௬௪) லில் பக்தியாதி வைராக்கியாந்தமான ஆறேவிளங்கச்செய்யும்;லிங்கஸ்தலம்(௩௭)ல் ஆசாராதி மஹாலிங்காந்தமான (௬) க்கும் முறையே வெவ்வேறாகி பக்தியாதி வைராக்கியாந்தமான (௬) அங்கஸ்தலங்களுக்கும் தநுத்திரயங்களின்மேல் லிங்கத்திரயாநு குணமாக வர்த்தித்திருக்கும், லிங்கஸ்தலங்கள் ச



ம்பந்த விசாரமுகத்தால் குருலிங்கசங்கமத்துக்குத் தநுதந மநங்களை வஞ்சியாமல் சகலசதாசார, சம்பந்நனாகிப் பக்திஸ்தல அங்கங்கொண்டிருப்பவனே விசேஷவீரசைவனும்.

## நிராபாரவீரசைவன்.

கிரகாதி சர்வ்வசௌக்கியபரிக்கிரகங்களே சதி,சந்தோஷமே சுதன், ராகமே பந்து, க்ஷமையே பரிசாரகர், சாந்தியே சகன், பக்தியே மாதா, ஆசாரமே தந்தை, சத்தியமே சுதி, சிரத்தையே சுசா, மயித்திராதி சத்குணங்களே பௌத்திராதிகள், ஞாநமே தேகம், விசாரமே க்ஷேத்திரம், அஹிம்சையே தாசி, ஆஸ்திகமே தாசன், தர்ம்மமே வாஹநம், தமையே ஆசாரியன், முத்தியே தேசம், என்னும்பரமார்த்த குடும்பமுள்ளவனாகிக்;

கந்தை, தண்டு, கமண்டலம் பிக்ஷாபாத்திரம், பஸ்மகுண்டிகையாகிய பாகியபஞ்ச முத்திரைகளும்; அந்தந்த மந்திரபூர்வ்வகமாகத் தரித்து; அந்தரங்கத்தில் சமதையே கந்தை, ஞாநமே தண்டு, தமையே கமண்டலம் வைராக்கியமே பிக்ஷாபாத்திரம் க்ஷமையே பஸ்மகுண்டிகை உள்ளவனாகிச்; சிகை; சடை, முண்டிதம், கலையாசநம், மரவுரி, திகம்பராதி விசித்திர சிவவேடங்கள் தரித்து, நீதமான பிக்ஷாகாரங்கள் கொண்டு, பஸ்மோத்தூளன, திரிபுண்டரதாரண, சிவலிங்கார்ச்சனை, சிவமந்திரசெபம், சிவத்தியாந ஸ்தல விசாரங்கள், லிங்காங்க சையோகாதி ஞாநக்கிரியா சம்பந்நனாகி, ரச, ரசாயநவாத வைசிய, சோதிஷ, கிரய, விரயாதி,லௌகிகங்களும், விட்டு வநிதாதி, விஷயநிவர்த்தனாகி, இப் பவாரண்ணியமத்தியத்தில், லோபமென்னும் பங்கம்புகாது, இந்திரியங்களென்னும் அரிபுரங்களை யெண்ணாது, மோகமென்னும் பிசாசபயந்தோற்றாது, குரோதமென்னும் வியாக்

கிரத்துக்குச் சிக்காது, மமதையென்னும் சர்ப்பபீதியில்லாது, மந்மதனென்னுங் கள்ளனுக்குள்ளாகாது, மதமென்னும் அந்தகாரத்தில் கண்கெடாது, தாபத்திரயமென்னும் குழியுள்வீழாது, விஷயங்களென்னும்முள்ளைமிதியாது, அசூயையென்னும் விஷக்கொடிசுற்றாது அகங்காரமென்னும் மடுவில் முழுகாது சர்வ்வாதாரியாகிச் சங்கமஸ்தலத்தை யங்கமாகக்கொண்டு சஞ்சரிப்பவனே நிராபார வீரசைவனும்.

பின்னுமிந்தச் சடுஸ்தலஞானியான வீரசைவனேசர்வ்வோத் கிருஷ்ணனென்னுமிடத்தில், கிருமி, கீட, பதங்கசாதியிலும், பசு அதிகம், பசுக்களில் மநுஷரதிகம், மநுஷரில் துவஜரதிகம், துவஜரில் விப்பிரரதிகம், விப்பிரரில் கிருதபுத்திகளதிகம், கிருதபுத்திகளில் கர்த்தராதிகமதிகம், கர்த்தராதிகத்தினும் சந்நியாசிகளதிகம், சந்நியாசிகளிலும் ஞானிகளதிகம், ஞானிகளிலும், சிவார்ச்சர்களதிகம், சிவார்ச்சகரிலும் லிங்காங்கசங்கிகளதிகம், லிங்காங்கசங்கிகளிலும், சடுஸ்தலஞானிகளதிகம், சடுத்தலஞானிகளுக்கே மூன்றுலோகத்திலும் சமானமில்லாமல் முமுக்ஷுர்களில்சமஸ்தஞானிகளானவீரசைவனாயேவணங்கல்யோக்கியமாம். இவையெல்லாங் கிரியாபாதத்தில் பிரதிபாதித்திருக்கின்றது.

## சரியாபாதம்.

இந்தச் சரியாபாதத்துள், சுசித்த, பௌத்திரோத்ம, மகேச்சுவர, கந்த, நந்தியாதி கணேச்சுவரலக்ஷணம், செபமாலைலக்ஷணம், சகலாச்சிரம லக்ஷணாதிகளைப் பிரதிபாதிக்கும், ஆச்சிரமதர்ம்மங்களுக்குப் புராணாகமாதி நீதிகளால் பிரதிபாதிப்பதைக் கூறுதும்.

ததிசி, கௌதமர், அகஸ்தியர், தூர்வாசர் என்னுமரிஷிகள் முறையே பிரமசாரி, கிரகஸ்தன், வாநப்பிரஸ்தன், யதி என்பவர்களாம்.



## பிரமச்சாரியாச்சிரமம்.

சிகை, யக்ஞோபவீதம், கடிசூத்திரம், காஷாம்பரம், சுப்பிரவஸ்திரம், கிருஷ்ணாசநம், பலாசாதி தண்டபஸ்மதாரணாதிகளும், சூத்திரோக்த மந்திரங்களால் தரித்து ஏககாலஸ்நாநம், உதயாஸ்தமன சந்தியாவந்தந பிதாமாதா சேவை பந்துபாந்தவமயித்திரி, குருதேவதாபக்தி, வித்துவஜநோபாஸ்தி, புஷ்ப பத்திராதிகளால் அக்கினிகாரியம், நித்தியநைமித்திய யாகாதி கர்ம்மவிசுவாசமுள்ளவனாகித், தாம்பூலசருவண, காமகக்குரோதாதிகளைவிட்டுப், பிர்ம்ம, க்ஷத்திரிய, வைசியர்களில்யாரேனும், பவதீ, பிக்ஷாந்தேகியென்று பிக்ஷாந்நம்யாசித்துக் கரசரணாதிகள் விளக்கித் துவிராச்சமநஞ்செய்து அவ்வந்நத்தைமுன் ஸ்ரீகுருவுக்குச் சமர்ப்பித்துப்பின் அவர் அநுஞ்ஞையால் பூர்வ்வோத்திரத்தில் ஒருதிக்கு முகமாவிருந்து பிராணாயாமம் சுவஹா என்னு மந்திரங்களால் கவளகணிதமில்லாமல் யதேஷ்டமாகப் புசித்துச் சதாவேதத்தியாந பரனாகி, வேறுமந்திராநுஷ்டாநம் விட்டு லௌகீக வைதீக, அத்தியாத்மிகாதி சாஸ்திராப்பியாசமுஞ், செய்துகொண்டு ஜிதேந்திரியாதி சற்குணசம்பந்நனாகிக் காயத்திரிபிர்ம்மச்சாரி, பிரஜாபத்தியபிர்ம்மச்சாரி; வைதிகபிர்ம்மச்சாரி, நைஷ்டிகபிர்ம்மச்சாரிஎன நான்கு திறமாக இருப்பவனே பிர்ம்மச்சாரியாம்.

## கிரகஸ்தாச்சிரமம்.

பிர்ம்மச்சாரி ஆச்சிரமத்திலிருந்து வேதாத்தியாநாதிகமும் நன்றாகச்செய்த பிர்ம்மச்சாரி வைராக்கியம்பிறந்தால், வாநப்பிரஸ்த, யதியாச்சிரமங்களை அங்கீகரிக்கலாம், ராகயுக்தனானால் குருஅநுஞ்ஞையினால் பிரமசாரி ஆச்சிரமம்விட்டுச் சொசாதி கந்நிகையைச் சகுநாதிகளைப் பரீக்ஷித்துவரிக்கலாம்.

## ஸ்திரிகளின் அசுபலக்ஷணம்.

மரம், பக்ஷி, நதி, குப்பை, கிரிப்பெயருள்ளவளும், பெருவயிறு, நீட்சி, குள்ளம், வளைந்ததேகம், சிவந்தமயிர், தட்டைத்தலை, வங்குமுகம், குழிக்கண், செங்கண், சப்பைமூக்கு, முறக்காது, தொங்குதடு, எக்குப்பல்,சுரிகழுத்து; எக்குத்தக்கானகுஜம், வளைதடி போன்றகை, தோள்,சுபரேகையில்லாத உள்ளங்கை,புள்ளி தழுதணைமயிருள்ளஉடம்பு, பருத்தஇடை, குந்துகால், எக்குத்தக்கான கால்விரல், விரலோடுவிரல் முட்டாமை, நிலமதிரநடத்தல், பிடிவாதம், பேருண்டி, தேகங்குலுங்கநடத்தல், வெடிகுரல், ஈநசுரம், சீக்கிரநடை,சுசியில்லாமை, தயையின்மை, சதாபெருங்கூச்சலிடல், சதிர்க்குணமில்லாதவளை மணஞ்செய்யலாகாது.

## ஸ்திரிகளின்சுபலக்ஷணம்.

சமஉயரம், மிருதுதேகம், ஒழுங்காகிக் கறுத்தமயிர், வட்டமுகம், பெருத்தகண், நேர்நாசி, சிறுத்தவாய், சிவந்தஉதடு, நிலவுபோன்ற தந்தபந்தி,சங்கக்கழுத்து;நெடுந்தோள், அங்குசம், சங்கம், துவஜம், பற்மாதி சுகரேகையுள்ளகரம், சிறுத்தவிரல், ஒத்தபயோதரம், சமவயிறு, சிறுத்தஇடை, விருத்தசகநம், நுண்தொடை, அழுகணைக்கால், மிருதுவானபாதம், உரோமரகிதமானதேகம், அற்பபோஜநம், அற்பநித்திரை, சீக்கிரபணிவிடை இனியவோசை, கலகமறியாமை, கடுஞ்சொலில்லாமையுமாகிய குணங்களுடையவளை வரிக்கலாம்.

இந்தச் சற்சரித்திரமுள்ளவளைச் சூத்திரோக்தமாகவரித்து அத்தர்ம்மபத்தினி சமேதனாகச், சகலதருமங்களையு மாசரித்துச்சிகை, யக்ஞோபவீத, வேணுதண்ட, கமண்டல, தோவத்தி உத்தரியமுள்ளவனாகிப், பிரா



தக்காலத்தில் சிவஸ்மரணை செய்து எழுந்திருந்து நிர்ப்பயமான நிர்ச்சநப்பிரதேசத்தில் மௌனாதி விதிகளால் மலசலங்கழித்துக் குதகுய்யங்களை மிருத்திகை ஜலங்களால் மநசுத்திபரியந்தஞ் சௌசஞ்செய்து ஆசமநஞ்செய்து, நாயுருவியாதி தந்தகாஷ்டங்களால் தந்தசுத்திசெய்து இரண்டுதரம் ஆச்சமநஞ்செய்து, இப்படிமலஸ்நாநத்துக்குமேல், திரிகாலமும் விதியுக்தஸ்நாநங் தப்பாது திரியம்பகமந்திரம், மூலமந்திரங்களால், பஸ்மோத்தூளன திரிபுண்டரதாரணஞ்செய்து, உருத்திராக்ஷமாலிகையை மஸ்தகாதிஸ்தாநங்களில் விதியுக்தமாகத் தரித்துப் பிராணாயாமத்திரயஞ் செய்வதாம்:—

பின்சாங்கியாயந கோத்திரமான, சுவேதவர்ணமான பிரணவபூர்வ்வகமான, பூதாதி சத்தவியாகிருதியினுள்ளததாதிசதுர்விம்சதி அக்ஷரங்களால் விஸ்வாமித்திரனே ரிஷி,காயத்திரியே சந்தசு இரவியே தேவதை, சிவனே அதிதேவதையினால் அந்தச்சத்த வியாகிருதிகளுக்குஞ் சதுர்விம்ஸதி அக்ஷரங்களுக்கும் வெவ்வேறுரிஷி சந்த தேவதாவர்ணமுத்திரா நியாசாதி சாங்கிகமான பரசிவனே தனக்காத்தமாக நித்தியம் பிராதகாலத்தில் (க) செபமாக,(உச) லக்ஷஞ்செபஞ்செய்து (சுத) ஆச்சியாகுதியும், கல்போக்தமாகச்செய்து புநற்சரணைசெய்வதாம்.

அதன்மேல் வெவ்வேறு க்ஷீராதி ஓமசங்கியாநியமமான செபங்களால் சகலசித்திப்பிரதமான இருக்கு, யஜுர்,சாம வேதங்களென்னும் திரிபாதத்தினால் வர்த்திக்கும் பூர்வ்வ, தக்ஷண, பச்சிம, உத்தர, ஊர்த்த, அதஸ் என்னும் ஆறுகுக்ஷியினில் ஆகாசமே குக்ஷி; அஷ்டாதசபுராணமே நாபி ; ஜகமே சரீரம்; வேதாந்தசாஸ்திரமே சூக்ஷ்மதநு ; சிக்ஷாதிகளே அங்கரோமம் ; தருமமே

இருதயம்; சந்தஸ்சேதநங்கள்; நியாய,சாங்கிகங்களே கர்ணங்கள்; அக்கினியே முகம்; சோதிஷமே நயநங்கள்; வியாகரணமே சிக்ஷை; மந்திரம், வியாகரணம், நிகண்டு, சந்தோபிசிதம், நிருத்தமாகிய ஐந்துஞ்சிரங்கள்; பிர்ம்மனேமூர்த்தி; உருத்திரனேசிகை; விஷ்ணுவே ஆத்மன் ஈச்சுவரனே அந்தராத்மன்; மீமாம்ஸையே லக்ஷணம்; அதர்வணமே சேஷ்டைகளுள்ள வேதமாதாவாகிய காயத்திரியைச் செபிக்கும் வகையாதெனின்:—

உதயத்தில் நாபிஸ்தான ரத்தபத்மாசநத்தில் ரத்தவர்ண,ரத்தவஸ்திராபரண கந்தமாலிகையா லலங்கிருதமான, சதுர்முகதுவாதசலோசநங்களும்; தண்டுகமண்டலஅக்ஷமாலே சுரபிபிடித்த வாமதக்ஷணகர சதுஷ்டயங்களுமாய்; அம்சவாகநத்தில்இருக்கு வேதமயமாகி ரசோகுணதிகத்தினல் பிர்ம்மாதி தேவதைகளென்பித்துக் காயத்திரி பிராமியென்னும் பெயர்பெற்றுக் கர்மமனுநார்த்தமாகத் தியாநிப்பதற்கு யோக்கியமானதென்று அநுசந்தாநிப்பதாம்.

மத்தியாங்கத்தில் இருதயஸ்தாநத்தில் சுவேதபத்மாசநத்தில் சுவேதவர்ண, சுவேதவஸ்திராபரணமாலிகை யநுலேபநாதிகளால் அலங்கிருதமாகி ; ஏகமுக உபயலோசநங்களோடும், சக்கர, அக்ஷமாலே, கமண்டலம், சுரபிபிடித்தவாமதக்ஷணகரசதுஷ்டயத்தோடு கருடவாகநத்தில் யஜுர்வேதமயமாகிச் சத்துவகுணதிகத்திருந்து விஷ்ணு அதிதேவதை என்பித்துச்சரஸ்வதி; வயிணவியென்னும் பெயர்பெற்றுக் கர்ம்மனுநார்த்தமாகத்தியாநிப்பதற்கு யோக்கியமானதென்று சிந்திப்பதாம்.

சாயங்காலத்தில் புருவமத்தியத்தில் கிருஷ்ணவர்ணபத்மாசநத்தில் கிருஷ்ணவர்ண, கிருஷ்ணவஸ்திராபரண கந்தமாலிகாதிகளால்அலங்கிருதமாகி ஏகமுக திரி



லோசநங்களோடு, சூல, அக்ஷமாலே, கமண்டல, சுரபிபிடித்தவாமதக்ஷண கரசதுஷ்டயத்தோடு ரிஷபவாகநத்தில் சாமவேதமயமாகித் தமோகுணதிகத்தில் ருத்திர தேவதைஎன்பித்துச் சாவித்திரி மகேச்சுவரியென்னும் பெயர் பெற்றுக்கர்ம்மனுநார்த்தமாகத் தியாநிப்பதற்கு யோக்கியமானதென்று மநநஞ்செய்வதாம்.

## யாகவிதிகள்.

இப்படிக் காயத்திரி மந்திரத்தை விதியுக்தமாகச் செபஞ்செய்து, பின் சிவலிங்கார்ச்சனை சுத்தசைவோக்தகிரமப்படி விஸ்தரித்துப் பின் ஜோதிஷ்டோமம், ராசசூயம்,புத்திரகாமேஷ்டிகாரி யிறுதியாக அக்கினிஹோத்திராதியக்ஞபேதங்களை விவேகித்து, அக்கினி, இந்திரன் (கடு)ருத்விக்குக்களுடன் கூடிக் குசை, துரகவால், விசுவாமித்திர, திரணதூர்வை என்னும் நான்கு, தருப்பைகளையும், யக்ஞசாதநமான கந்தபுஷ்பாதிகளையும், ஆச்சியபாத்திராதிகளையுஞ் சேகரித்துப்பின்பு;

சதுரஸ்ர,பகாகார, அர்த்தசந்திராகார, திரிகோண, விருத்த, சடஸ்ர, பதுமாகார, அஷ்டகோண ரூபமான எட்டுப்பிரகாரத்தில், உத்தமமான குண்டஸ்தலம், மத்தியமமான ஸ்தண்டிஸ்தலம்,கநிஷ்டமான சூபஸ்தலம் என்னும் ஸ்தாநத்திரயத்தில், வேதிகை, யூபஸ்தம் பாதிரசனைகளைச்செய்து, அதில், யோக்கியமான ஆசநத்திருந்து பிராணயாமஞ்செய்து யக்ஞஞ்செய்கிறேனென்று சங்கற்பித்துக்கொண்டு.

மதிதாக்கினியானுலும், சோத்திரியாகாராக்கினியானுலும், அச்சுவத்த, பலாசாதியோக்கியமான காஷ்டங்களிலிருந்து அந்தந்த மந்திரபூர்வ்வகமாகத் தக்ஷணக்கினி, காரஹபத்தியாக்கினி, ஆகவநீயாக்கினியென்னும் அக்

கிசித்திரயாத்மகமாகச் சமஸ்கரித்துத், தூம்பிரஅர்ஜிஷ ஊஷ, மச்சுவலிநி, ஜ-வாலிநி, விஸ்புலிங்கிநி,சுஸ்ரிச்சுவரூப, கபில, ஹவ்விய, கௌவிய வஹாளன்னும் தசகால விர்த்தமான அக்கிநிமண்டல மத்தியத்தில்.

### அக்கிநிதேவலக்ஷணம்.

இரண்டுசிரசு, சதுர் சிருங்கம், கபர்த்த சந்திரகலை-திரிநேத்திர, யக்ஞசூத்திர, திரிமேகலை, திரிபாதங்களோடு, வாமபாகஸ்தித, சுவாஹாசத்தியும், சத்தியாக்கிநி சிருக்கு சிரவைகளுள்ள தக்ஷணகர சதுஷ்டயங்களும்; தோமர,தாலவிருத்த,கிருதபாத்திரங்களுள்ள வாமகரத்திரயங்களும்; ரத்தவர்ண, ரத்தாம்பர, ரத்தகந்தாதிகளினுல் அலங்கிருதமாகிப் பிரகாசமான சிவாக்கிநிமூர்த்தியை ஸ்மரித்து.

அந்த அக்கிநி தேவனுடைய, அரிண, ககந, ரத்த, கிருஷ்ண, சுப்பிர, வெகுவர்ண, அதிரத்தவர்ணமான ஏழுசிங்வுகளுக்கும், முறையே சமித்து, கடுகு, பொரி,நெய், பால், அந்நம், எள், என்னும் சத்தாகுதிகளையும் பிரமாணித்து, யக்ஞபூசாயோக்கியமான தேவதைகளும் விஷயீகரித்து, ஔவிய கௌவியாதி பேதமறிந்து அந்தந்தமந்திர பூர்வ்வகமாகக்கொடுத்து, விதியுக்தமாகயக்ஞத்தை விஸ்தரிப்பதாம்.

### பஞ்சயாகம்.

வேதாத்தியயநரூபம் பிர்ம்மயாகம். அக்கிநிஹோத்திரரூபம் தேவயாகம். அதிதிபூசாரூபம் மநுஷயாகம். பிதிர்தருப்பணரூபம் பிதிர்யாகம்.பூதபலிரூபம் பூதயாகமென்னும் பஞ்சமகாயாகங்களும் நடத்திக்கொண்டே.

ருதுகாலமீருமல் சந்தானர்த்தமாக, வேதமந்திரஸ்மரணையோடு சொஸ்திரிசம்போக சுகியாகிக் குருயா



த்திரை, தேவயாத்திரை, தீர்த்தயாத்திரை, யக்ஞதர்ம்மங்களென்னு மிவற்றிற்கே திரவியார்ச்சிதஞ்செய்து, ஆத்மார்த்தமென்றுதே தேவார்த்த, யக்ஞார்த்த, பிக்ஷார்த்தமாகவே,பாகப்பிரயத்நஞ்செய்து,தான்ஒருகாலம், அல்லதிருகாலம்,முஷ்டிமாத்திரம்(௩௨)கவளம் போஜநஞ்செய்துசர்வ்வபூததயை சத்தியவசநம்பரோபகாரம்புண்ணியகர்ம்மாநுஷ்டாநாதி சத்குணசகிதனுகி வார்த்தாவிர்த்தி,சுவாதீநவிர்த்தி, யதாவிர்த்தி, வநஸந்நியாசியெனநான்குதிறமாயிருப்பவனே கிரகஸ்தாச்சிரமியாம்.

அவன் அநுஷ்டிக்கயோக்கியமான கர்ம்மங்கள் நித்திய, நைமித்திய, பிராயச்சித்த, காமிய, நிர்ம்மலமெனஐந்தாம். அவற்றுள் சந்தியாவந்தநாதியே நித்திய கர்ம்மமாம்.சுபகால தேசாதிகளில் செய்யும் விசேஷவிதியே நைமித்தியகர்ம்மமாம். பிர்ம்மஹத்தியாதி தோஷபரிகாரக்கிரியையேபிராயச்சித்தகர்ம்மமாம் ஜோதிஷ்டோமாதியக்ஞாதிகமே காமிய கர்ம்மமாம். ஈச்சுவரோபாஸனையே நிர்ம்மல கர்ம்மமாம். இவற்றுள் நிர்ம்மலகர்ம்மமொன்றே தபசு, கர்ம்மம், செபம், தியாநம், ஞாநமென ஐந்தாம்.

### தக்தக்கிரிச்சிரங்களும்சாந்திராயண விரதங்களும்.

தோஷபரிகாரார்த்தமாகச் சரீரவாதாத்மகத்தினுல் செய்யப்பட்ட மகாகஷ்டமான தக்தக் கிரிச்சிர, மகாதக்தக்கிரிச்சிர, சீதக்கிரிச்சிர, பாதக்கிரிச்சிர, பிரஜாபத்திக்கிரிச்சிர, பராசக்கிரிச்சிர, தேவக்கிரிச்சிர, யாவக்கிரிச்சிராதி கிரிச்சிரங்களாலும்; தேகபுநிதார்த்தமாகச் செய்யப்பட்ட பக்ஷமாதாதிகளில் அந்நமேற்றிக் குறைத்துக்கொள்வதுமுதலான லக்ஷணமுள்ள திலசாந்திராயண, யவசாந்திராயண, பிபீலிகாசாந்திராயண, ரிஷிசாந்திராய

ணசிசுசாந்திராயண; யதிசாந்திராயணுதி விரதங்களாலும்;பிரஜாபத்தியாதிவிரதங்களாலும்; தர்ம்மார்த்தமாகச்சரீரஸோஷணை செய்வதே தபசாம்.

பாஃகியாப்பியாந்தரசாதநங்களினுல் சகுணநிர்க்குணமான ஈச்சுவரார்ச்சனையே கர்ம்மமாம்:

பிரணவாதி மந்திரங்களைச் சாங்கமாக வுச்சரிப்பதே - செபமாம்.

இருதயகர்ணிகாமத்தியில் ஈச்சுவரனைச் சிந்தை செய்வதே தியாநமாம்.

பிரத்தியேகாத்ம, பரமாத்மா ஐக்கியவிசாரமேஞாநமாம். இவை கிரகஸ்தனுக்குக் கர்த்தவ்வியமாம்.

பின்னும் அக்கிரகஸ்தன் குலகுருதேவாராதனைவிடாமல், மாதாபிதா சொல்மீருமல், ஸ்திரிபுத்திர பந்துபாந்தவாதிகளிடத்தில் இனிய உபசாரமுள்ளவானுகிச், சதிசுதனை அதிக்கிரமிக்கவிடாது ஆக்கினையிலிருத்தி ஆள்பவனுய்த் தபோவித்தியா சம்பந்நனை கரபாத்திரி வந்தால்யாதானுமொன்றில்லையென்னுது கொடுப்பவனுய், அறியாதகுலநாமங்களுள்ள பதஸ்கிராந்தனை அந்நகாமியான அதிதிகிரகத்துக்கு வரின், சர்வ்வதாய்ச்சுத்கரிப்பவனுகி, வித்தியாவியசநியாகிப்,புத்திமான்சிறுவனுயினும் அவனிடத்தில் கேட்டறிந்துகொண்டும், எந்தக்காரியமானுலும் தாரதம்மியம் விசாரித்துச் செய்பவனுகியும், சம்பத்துவந்தபோது புஷ்பம்போல மிருதுவான இருதயமுள்ளவனுகியும்,துக்ககாலத்தில் சிலைபோலக்கடினசித்தமுள்ளவனுகியும், விருக்ஷாதிகம்போல ஸ்வயகாரியம்விட்டுப் பரோபகாரஞ்செய்பவனுகியும்,சர்வ்வமுந் தேவாதீநமென்று ஆலசியாமல் புருஷப்பிரயத்தநத்தினுல் உத்தியோகஞ்செய்பவனுகியும், பரர்குணம்பரமாணுவானுலும் பர்வ்வதோபமாநமாக ஸ்துதித்தும்;



நிசகுணுதிசயமறந்தும், தூரமானுலும் தனக்குச்சுகமான இடத்திற்குப்போகியும், தனக்குப் பாதையானவைகளைவிட்டும், லோகாபவாதையில் அந்தக் கரணஞ்செல்லாமல் நீக்கியும்,வியவகாரத்தில் துலைநாப்போலப் பக்ஷபாதமில்லாமலு மிருக்கவேண்டும்.

பகலில் உத்தரமுகமாகவும், இரவில் தக்ஷணமுகமாகவும், மலவிசர்ச்சனைசெய்யும்போது, சிராவரணமுள்ளவனுகிச், செளசஞ்செய்யுமளவும் பேசாமலும், எப்போதும் பூர்வ்வபச்சிமமுகமாக மலவிசர்ச்சனைசெய்யாமலும், வபந தைலாப்பியாஞ்சநஞ்செய்யும்போது ஆதித்தமங்கள சுக்கிரபிரஹஸ்பதி ஜநநவாரங்கள் தவிர மற்றவாரங்களில் பூர்வ்வதக்ஷண முகனுகிச் செய்துகொண்டும், புதன், வியாழம் சநிவாரங்களில் சந்திரகலையிலும், மற்றவாரங்களில் சூரியகலையிலும் நூதநவஸ்திரந் தரிக்காமலும், சூரியகலையில் பூர்வ்வதக்ஷண பச்சிமமுகனுகியும், சந்திரகலையில் உத்தரமுகனுகியும் போஜநஞ்செய்யாமலும், அஜக்ஷீரமுண்ணுமலும், தாமிரபாத்திரத்தில் க்ஷீரபாநஞ் செய்யாமலும், உப்பிட்டுப்பால் குடியாமலும், வெண்கலவட்டிலில் நாரிகேளோதகங் குடியாமலும், வாமகரத்தால் நீர்குடியாமலும், தற்சநியால் பல்விளக்காமலு மிருக்கவேண்டும். வெட்டாதபாக்கு கழுவாதவெற்றிலை சோதியாதசுண்ணும்பு சேர்த்துத்தாம்பூலம்போடுதல், நடந்துகொண்டு பல்விளக்கல்; வாமகரத்தால் பல்விளக்கல் வெற்றிலைமடித்துப்போட்டுக்கொள்ளுதல், சுண்ணும்பு வைத்தவெற்றிலைபோட்டுக்கொள்ளுதல், பச்சிம உத்தர மஸ்தகமாகச் சயநித்தல், திவாமைதுநம், திவாநித்திரை தாசி வேசி சங்கமஞ் செய்தல்; மரணுவஸ்தைவரினும், தேகியென்றிரத்தல், தேகியென்பவனுக்கு நாஸ்தியெனல் முதலிய ஆகாவாம்.

தனக்குவரத்தக்கவைவரும், வாராதவாரா வாதலா ல்ஸ்திதிகதிக்குச் சிந்தித்தல், லக்ஷ்மீகடாக்ஷீங்கினு ல ல்லது பாக்கியநாசமாகாதாதலால் தியாக போகம் விட ல், தனக்குவந்த தநக்ஷயம், திரவியார்ச்சிதம், தாநம் அ வமாநம் பிரகடனஞ்செய்யலாகாது.

சூபகன், கவிராயன், வைத்தியன், வர்ம்மஜநர், தபசி யிவர்களோடு பகைகொள்ளலாகாது. அழையாதவர்கள் ரகம்புகல், கேளாமல் ஒன்றுஞ்சொல்லல், தற்புகழ்ச்சி பரநிந்தைசெய்தல், சிவாச்சிரமசிவக்ஷேத்திரங்களில் ம லமூத்திரவிசர்ச்சனைசெய்தல், பஞ்சசூதகம் பொருந்த ல், லௌகிகாசாரமீறல், ஜாதிசங்கிரமஞ்செய்தல், லோ கவார்த்தையை யுபேக்ஷைபண்ணல் தாசி புருத்தியருக் கு அசந ஆச்சாதநாதிகளால் நோகப்பண்ணல், திரணம் புசயநஸ்தலாதிகளில் கோரக்ஷணை ஆலசியம் பண்ணல் தீர்க்கத்துவேஷஞ்செய்தல், மூறந்துடைப்பங்களின் கா ற்றுப்படல், துர்ச்சநசிநேகம், பாபகிர்த்தியம்பண்ண லாகா. தநுதநவநிதாதிகள் அநித்தியமாதலால் திடாநு ராகஞ்செய்தல் கீர்த்திலாபார்த்தமாகப் பூசாதிகள்செய் தல் முதலியனஆகா, இவையே கிரகஸ்தனுடைய விதி தாசாரமாம்.

## வாநபிரஸ்தாச்சிரமம்.

அந்தக்கிரகஸ்தனுக்கு விரக்திபிறந்தால், வாநப்பி ரஸ்தாச்சிரமம்அல்லது யதியாச்சிரமம் அங்கீகரிக்கலா ம். அப்படி அங்கிகரிக்கும்போது, சதிசமேதனுயானுலு ம், வநிதாதி கிரகபாரங்களைப் புத்திரனுக்கொப்புவித்து ச்சர்வ்வ சங்கபரித்தியாகனுகித் தபோகாரிய சித்தார்த் தமாக, உத்தராயண சுக்கிலபக்ஷ சுபவாராதி முகூர்த் தத்தில், சோமவார சநிவாரங்களில், கிழக்கிலும், ஆதி வார சுக்கிரவாரங்களில் மேற்கிலும், புதவார மங்களவா



ரங்களில் வடக்கிலும், குருவாரத்தில் தெற்கிலும் வார சூலமாகையால் அத்திக்குகளிற் போகலாகாது.

## சுபசகுநம்.

வலியன், கார்த்தபம், கௌளிவாமத்திலும், சிலுகு பக்ஷிவலத்திலுங் கூப்பிடுதல், அருணம், கட்டுக்காடை ராஜாளி, கருடன் இடமாதலும், நரி, மயில், குக்குடம், வாயசம், செம்போத்து, விச்சுளிவலமாதலும், கந்நி கை, கோ, பேரிகை, சங்கு, தீபம், புஷ்பம், எரிகிறஅக் கிநி, தண்டிகை, விப்பிரத்துவயர், அயம், கஜம், ரிஷபம் மதுபாண்டம், மச்சத்துவயம், சுத்தாந்நம், வேசியை, மாமிசம், சுபவாத்தியம், பூரணகும்பம், சுமங்கலி, எதிரி ல்வருதல் சுபசகுநமென்றும்;

## அசுபசகுநம்.

மோர்க்குடம், எண்ணெய்த்தலை, சர்ப்பம், முயல், தூமாக்கிநி, ஏகவிப்பிரன், மூக்கறை, விறகுதலையன், ம ஞ்சள் வஸ்திரமுடுத்தவன், பருத்திச்சுமை, சூதகஸ்திரி, விதந்து, சூநியகடம், எதிரில்வரின் அசகுநமென்றும், தூ ரப்பிரயாணத்துக்குச் சந்திரகலையும், சமீபபிரயாணத் துக்குச் சூரியகலையும் உத்தமமென்றறிந்து இம்மங்கள சூசனைகளால் கிரகம்விட்டுப் புண்ணிய வநப்பிரவேச மாகவேண்டும்.

புண்ணிய வநமடைந்து, பர்ணசாலை, விருக்ஷாச்சி ரமங்களிலிருந்து, ஜடாதாரண யக்ஞோபவீத கிருஷ்ண சநங்கள் தரித்து, நகரோமங்களையாமல், சகலநிஷேத ங்களையும்விட்டுக் கிராமாதிகளில் அந்நம் யாசகஞ்செய் யாது, சாகாமூலபலாதிகளால் சோடசகவளங்கொண் டு காமக்குரோதாதிகள் தோற்றுமல் திரவியபிரதிக்கிர கமில்லாமல், திரிகாலஸ்நாநம் தப்பாமல், பஸ்மோத்தூ ளன தாரணங்களுந் கிரமமாகத் திரியம்பகமந்திர, மூல

மந்திரங்களினுற்செய்து, காயத்திரிசெபம், சிவார்ச்சனே அக்கிநிஹோத்திரம், பஞ்சமகாயக்ஞம், இயமாதி அஷ்டாங்கயோகங்களும், கிரிசிரசாந்திராயண உபவாசபயப் பாந கோமயபக்ஷண, வாயுபக்ஷண பர்ணசந நிராகார,பூசயந, சீதவாதாதி துவந்துவதீக்ஷ யுள்ளவனுகித், தேகத்துள்ள மூலாதாராதி ஸ்தாநங்களிலிருக்கும், காலாக்கிநி, வடவாக்கிநி, பாஷாணுக்கிநி, வயித்தியுதாக்கிநி, சூரியாக்கிநி, என்னுஞ்சூக்ஷ்ம பிந்துரூபபஞ்சாக்கிநிதியாநயுக்தனுகிப், புறம்பேநிதாக காலாக்கிநி, சூரியதாபாக்கிநி, ரவிகாந்தாக்கிநி, தாவாக்கிநி, உதராக்கிநிஎன்னும் பஞ்சாக்கிநிமத்தியில் ஏகபாதஸ்திதி முதலியவைகளால் உக்கிரதபசாசரிப்பவனுகி, உதும்பர,வைபாசக, பிரக்ஷீரவினிய, பௌர்ணமனென்னுஞ் சதுர்விதனுகியிருப்பவனே வாநப்பிரஸ்தனும்.

### யதியாச்சிரமம்.

அந்தவாநப்பிரஸ்தனுக்கு வைராக்கியம்பிறந்தால், யதியாச்சிரமங்கைக் கொள்ளலாம். அவ்வாச்சிரமிகள, விர்த்திபேதத்தால், குடீசகர், பஹூதகர், ஹம்ஸர், பரமாம்ஸ ரெனநான்கு பிரிவினராவர்.

அவருள் - சிகை, பூணுல், திரிதண்டம், கமண்டலம், பிக்ஷாபாத்திரம், காஷாம்பரமுள்ளவனுகித், திரிசந்தியாகாலத்திலும், பஸ்மோத்தூளன, திரிபுண்டரதாரண, ருத்திராக்ஷாபரண, சிவலிங்கார்ச்சனே, காயத்திரிசெபங்களும், செய்துகொண்டு, சுவஜாதியிடத்திலானுலும், புத்திர, மித்திர, பந்துக்களிடத்திலானுலும், பிக்ஷாந்நமெடுத்துப் போஜநஞ்செய்து சுகியாகவிருப்பவனே குடீசகனும்.

சிகை, பூணுல், கோவால, ரசித, ரச்சுசம்பந்தமான திரிதண்டம்பிடித்து, மிருத்பாத்திரம், கஞ்சபாத்திரம், தாருபாத்திரங்களில் ஒன்று, கந்தை, கௌபீநம், ஆச்சாதநம், கிருஷ்ணசநம், குடை, பாதுகை, ஊசி, கத்திரி, யோகபட்டாதி பரிகரங்களுள்ளவனுகிப், பஸ்மோத்தூளன, ருத்திராக்ஷாபரண, சிவலிங்கார்ச்சனே, சாவித்திரிசெபந்திரிகாலத்திலும் விடாது, வேதாத்தியநம்விட்டு, ஈச்சுவரத்தியாநபரனுகி, ஏகாந்நம், அல்லது, பந்துபுத்திரகிரகங்களுக்குப் போகாமல், வேறு ஏழுகிரகங்களில் பிக்ஷாந்நம் வாங்கியுண்டு சகசம்ாக இருப்பவனே பஹூதகனும்.



சிகை, பூணுல்களைவிட்டு, வேணுதண்டமொன்றேபிடித்துக் கமண்டலம், மிருத்பாத்திரம், பர்ணபாத்திரம், கந்தை, கௌபீநம், ஆச்சாதநம், வேஷ்டி, உத்தரியமுள்ளவனுகிப் பஸ்மோத்தூளன, ருத்திராக்ஷாபரண, சிவார்ச்சனே சாவித்திரிசெபந், திரிகாலத்திலும் விடாமமல் ஒருபொழுது பிக்ஷாந்நம் எட்டுக்கிராசம் புசித்து, அஷிங்ஙு, ஷண்டக, வியங்குல, அந்தக, பதிர, மூத்தமென்னும் ஆறுகுணயுக்தனுகி, வநிதாதிவிஷயமாகக்காமிச்சு, நினேத்தல், கொண்டாடுதல், விநோதித்தல், பார்த்தல், பேசுதல், ரதிக்கிச்சித்தல், உடன்படல், கூடுதல் என்னு அஷ்ட மைதுநமும்விட்டு, அத்தியாத்மிக சிந்தனேயா விருப்பவனே ஹம்ஸனும்.

சிகை, பூணுல், நித்தியகர்ம்மாதிகள், திரிதண்டுகமண்டலமுதலானவைகளைவிட்டுக், கந்தை கௌபீநம், பாணி பாத்திரங்களைச் சீதாதிவாதை பரிகாரார்த்தமாகக்கொண்டு,திவ்வியஸ்நாநம்,ஆக்கிநேயஸ்நாநம், வாருணஸ்நாநம், வாயாவியஸ்நாநம், மாநஸஸ்நாநமென்னும் ஐந்துவிதஸ்நாநங்களுள் ஆக்கிநேயமென்னும் பஸ்மஸ்நாநமே சகலஸ்நாநங்களிலுங் கோடிகோடி குணதிசயமானதால் வேதசித்தமான எந்த ஆச்சிரமிகளும்விடாது

கொள்ளும் யோக்கியமுள்ளதை "அக்கிரிதி" யாதிமந்திரங்களால் பஸ்மோத்தூளனம் பிரணவ பூர்வ்வகமான ஹம்ஸமந்திரத்தினல் திரிபுண்டரதாரணஞ் செய்து ருத்திராக்ஷந் தரித்துச் சிவலிங்கார்ச்சனை விடாது, திரிகாலமும் பிரணவபூர்வ்வகமாகச் சட்பிராணுயாமத்தோடு அஷ்டோத்தர பிரணவசெபஞ்செய்து, ஏகாந்தவாசியாகி உத்தமாசநத்திருந்து, யதாசக்தி சமாதிநிஷ்டனுகி மாதுகர, அசங்கிருப்த, பிராக்குப்பிரணித, அவிசித, தற்காலீகமென்னும் பஞ்சவித பிக்ஷாந்நமானுனும் ஏகாந்நமானுலும், மிகாமலுங் குறையாமலும், யோகாநுகூலமான போஜநஞ்செய்து; குகோபாஸ்தியிலிருந்து ஆத்தும ஞாநாப்பியாசியாகி, ஸ்நாந, சௌச, சத்தியாநிருத, காம, குரோத, லோப, மோக, சோக, அருஷ, டம்ப, தத்துவாதிகளை விட்டுச் * சாதுர்மாச மாசரித்துக்கொண்டே தன்பூர்வ்வாச்சிரம ஆசாரம்விட்டு உத்தராசாரத்தில் நிஷ்டனுக விருப்பவனே பரமாம்ஸனுகும்.

## அத்தியாச்சிரமவிதி.

சூரியப்பிரகாசத்தின் முன் சந்திரன், நக்ஷத்திரம், தீபம், மின்மினியென்று வெவ்வேருகத் தோற்றியவைகளின் பிரகாசமெல்லாம் பிரபைகுன்றியடங்கிறுற்போல, ஞானோற்பத்திக்குமுன் பின்னமாகி அபிமாநித்திருந்த சதுர் ஆச்சிரமதர்ம்மங்களால் அந்தக் கரணசுத்தனுகி மேல் சாதநசதுஷ்டய சம்பந்நனுகி ஸ்ரீகுரு உபதேசத்தால் வேதோக்த ஜீவபர ஐக்கியவிஷய சம்மியஞாநியானதின்மேல் ஞாநத்துக்கு அதிகமான தொன்றில்லாமையால் தனக்கொரு ஆச்சிரமாபிமாநமில்லாமல் விதிநிஷேதாதீதனுகிச் சர்வ்வாச்சிரமிகளுக்கும் பூச்சியனு

* சாதுர்மாசம் ஆடிமுதல் (சு) மாதங்களாம்.



கிச், சீவன்முத்தனென்றும், அவதூதனென்றும், ஸ்திதபிரக்ஞனென்றும், குணுதீதனென்றும், பகவத்பக்தனென்றும், பிராமணனென்றும் பெயர்பெற றிருப்பவனே அத்தியாச்சிரமியாம்.

இப்படிப் பூர்வ்வோக்த சகலசைவ வர்ணுச்சிரமிகளில், சுத்தவைதீகரென்றும், தாந்திரிக வைதீகரென்றும், சுத்ததாந்திரிகரென்றும், வைதீக தாந்திரிகரென்றும் ஞாநக்கிரியா பேதத்தினல் நான்கதிகாரிகளாவர், எப்படியெனின்.

## சரியாபாதம்.

அவருள் தந்திரவாசனை புகாத வைதீகநிஷ்டரே சுத்தவைதீகராம், வேதஸ்மிருதிகளென்னுமிரண்டனுள் பிரீதியுக்தரோ தாந்திரிகவைதீகராம். வேதவாசனைபுகாத தாந்திரிகநிஷ்டரோ சுத்ததாந்திரிகராம். தந்திரவேதஉபயப்பிரீதரோ தாந்திரிக வைதீகராம்.

பின்னும் அந்த அதிகாரிகளுக்கு மார்க்கசங்கிரமமாகாதபோது வெவ்வேறு விதிப்பிரதிபாதகங்கள்ளவையெனின் சூதசங்கிதை பராசரபுராணுதிகள் சுத்தவைதிக பிரதிபாதங்களாம். சிவராகவசம்வாதம், வாயுசங்கிதாதிகளே தாந்திரிக வைதீகப் பிரதிபாதங்களாம். சைவ, பாசுபத, சோமலாகுளமென்னுஞ் சாஸ்திரங்களே சுத்ததாந்திரிகப் பிரதிபாதங்களாம். பாகவத சிவசித்தாந்தங்களே வைதீகதாந்திரிக பிரதிபாதங்களா மென்பதே சரியாபாதமாம்.

## யோகபாதம்.

எப்படியெனின், ஸ்ரீகண்டேச்சுவரரால் உபதேசமான, ஸ்வேத, சதாவ, தமந, சகோத்திர, கங்க, லோகாக்ஷ, ஜநிஷ, ததியத்திவாக, விஷப,உக்கிர, அத்திரி, சுபா

லக, கௌதம, வேதசிர, கோகர்ண, குகாவாச, சிகண்டி, சடாமாலி, அஷ்டகாச, தாருக, லாங்குலி, மஹாகாய,சூலி, டிண்டி, முண்டி, சயிஷ்ணு, சோமசர்ம்ம, லகுலீச ரென்னும், அஷ்டவிம்சதி யோகாசாரியரான மூர்ச்சுவர் ஒவ்வொருவருக்கும், நந்நான்கு சிஷ்ராகச் சுவேதசிகாதி, கர்க்கமித்திரகருஷியீருகிய (கக௨) சிஷ்வர்க்கங்களோடு பஜிதாக்ஷ, யோகதண்ட, யோகபட்டாதிகளால் அலங்கிருதராகி, ஏகசிகி, வெகுசிகி, பஞ்சசிகி, கேசபாச, முண்டநங்களுள்ளவராகிச், சாந்த தேஜோமயராகியிருப்பரென்னும் யோகாசாரியர் லக்ஷணங்களும்; ஈச்சுவரனிடத்தில் சித்தமேகத்துவமே லக்ஷணமான, யோக, மந்திர, லய, அடராஜமென்னும் நான்குயோக பேதங்களும்; மிருது, மத்திய, அதிமாத்திர, அதிமாத்திரதரமென்னும், சதுர்விதக்கிரமத்தில், மந்திரயோகாதிகாரிகளும்; அந்தயோகாநுக்கிரமத்தில், பிரணவாதிமந்திரவிதிகளும்; தசநாத தசபிந்து லக்ஷணங்களும்; இயம, நியம, ஆதந, பிராணுயாம, பிரத்தியாகார, தியாந, தாரண, சமாதிகளென்னும், சகுண நிர்க்குணரூபமான அஷ்டாங்கயோகவிதிகளும்; அஹிம்சை, சத்தியம், ஆஸ்தேயம்,பிரமசரியம், க்ஷமை, திருப்தி,தயை, ஆர்ச்சவம்,மிதாகாரம், சௌசமென்னும்,இயமதசபேதங்களும்.

தபசு, சந்தோஷம், ஆஸ்திகம், தாநம், ஈச்சுவரபூசை, சித்தாந்தசிரவணம்; லச்சை, மதி, செப, விரதமென்னும் நியமதசபேதங்களும்; பின்னும் இயமாதிபேதங்களின் லக்ஷணமெப்படியெனின்; யக்ஞார்த்தமாகப் பசுஹிம்சை; ஒன்றுநீங்கமற்றெல்லாவற்றிலும் பிராணிகளுக்குக் கிலேசம் பிறப்பியாததே அஹிம்ஸையாம். குரு தேவதா பிரயோசநமானவைகளுக்கல்லது, தனக்குவந்த ஆபத்துபீதிகளில் போய் சொல்லாதிருப்பதே சத்தியமாம். சௌரியத்தினுலாயினும், பலாத்காரத்தினுலாயினும் பரர்திரவியம் அபகரிக்காததே ஆஸ்தேயமாம். வசிதாதிவிலாசங்கண்டும், கேட்டும், மநோவாக்குகளினுல் மாதாவென்பதே பிரமசரியமாம். பரர்செய்யும் அபகாரம் சமர்த்தனுக இருப்பவன் க்ஷமிப்பதே க்ஷமையாம். அர்த்தபந்து சுதாதிகள் பிராப்தா பிராப்திகளில் அரிஷசோகமில்லாதிருப்பதே திருப்தியாம். ரோகாதிகளினுல் பீடிதரானசத்துரு மித்ராதிகளின் ரக்ஷணபிமுகமானதே தயையாம், அரிஷசோகங்களிடத்தில் புத்திகலங்காமலிருப்பதே ஆர்சவமாம். அறப யதேஷ்டமாகாமல் யோகாநுகுணமான மிதாகாரம், ஸ்வதேக கமலவிமோசனுர்த்தமாக, மிருத்திகை ஜலத்திலும், மநோமலார்த்தமாக மந்திரதியாநாதிகளால் செய்வதே சௌசமாம்.

மேலும் நான்யார், எனக்கு இந்தச்சமுசாரம் என்னகாரணத்தால் வந்ததோ, எப்படிவிடுமோ வென்ருலோசித்துத் தெளிவதே தபசாம். தனக்கு எவ்வளவு கிடைத்ததோ அவ்வளவே போதுமென்றிருப்பதே சந்தோஷமாம். புண்ணியம், பாபம், சுவர்க்கம், நரகம் உண்டென்று தெளிவதே ஆஸ்திகமாம். தான்ஆர்ச்சித்த அந்நாதிதிரவியமுந் தர்ம்மார்த்தமாக விதிபூர்வ்வத்தினுல் தேசகால பாத்திரமறிந்து கொடுப்பதே தாநமாம். ஸ்மரணே, ஸ்துதி,பஜனைகளில் மநோவாக்குக் காயங்களில், சிவபக்தி திடமானதே ஈச்சுவரபூசையாம். வேதார்த்தவிசாரணேயே சித்தாந்தசிரவணமாம். லௌகிக வைதீக விரோதமான மார்க்கத்தில் சித்த மிறங்காமையே லச்சையாம். விகிதமான சுதர்ம்மத்தினில் விசுவாசமே மதியாம். பிரணவசதருத்திராதிகளே ஸ்வாத்தியாயநஞ் செய்வதே செபமாம். தர்ம்மார்த்த ஆத்தும சுத்தியார்

த்த மாயநுபாயக்கிரகணமேவிரதமாமென்னும் ஆஹிம்சாதி இயம நியமலக்ஷணங்களும் ஸ்தித சுகத்தில் நிச்சலாத்மகனுன ஆசநக்கிரம மெப்படியெனின்?

## ஆசநபேதங்கள்.

சித்தாசநம், சிங்காசநம், ஸ்வஸ்திகாசநம், சௌவியாசநம், சூலாசநம், சுகாசநம், சர்வ்வதோபத்திராசநம் கோமுகாசநம், கருடாசநம், மயூராசநம், மச்சேந்திராசநம், மற்சாசநம், முற்கராசநம், மண்டுகோசநம், மிருகாசநம், நாகாசநம், குக்குடாசநம், குஞ்சராசநம், கூர்ம்மாசநம், காஷ்டாசநம், கிரௌஞ்சாசநம், கடகாசநம், காமதகநாசநம், யோகியாசநம், வியாக்கிராசநம், வயிகிகாசநம் வஸ்திராசநம், வாசவாசநம், வீராசநம், வராகாசநம், பரியங்காசநம், பத்மாசநம், பதாசநம், பச்சிமத்தாணுசநம், திரிபதாசநம், அஸ்தந்நாசநம், அயிம்மாசநம், அர்த்தாசநாதி (அசு) ஆசநபேதங்களும்.

சரீர ஜநிதவாயு நிரோதமே லக்ஷணமான பிராணுயாம விதிக்கு முதல்பிரகாரம், வேதி, கூப, அல்பத்துவார, அரந்திர, விதாந, சகல வாதர்ரகிதத்துவாதி நல்ல லக்ஷணயோக மண்டபரசநாப் பிரகாரமும்; குச, கிருஷ்ணுசநாதி யோக கிரகோப கரணப்பிரகாரங்களும்;தைல பிண்ணுக்காதி யோகீச்சுவரர் நிஷேத திரவியங்களும்; முக்த, படோலக, கோதுமையாதியோகீச்சுவரர் அங்கீகார திரவியங்களும்; பிராணுயாமப் பிராரம்பத்தில் ஸ்ரீகுரு, சரச்சுவதி, விக்கிநேசுவர, விசாகாதி தேவபூஜாவிதிகளும்;

மநுஷர்சரீரம் அவரவரங்குலத்தினல் (கூசு) அங்குலஉயரமாகும்; குதஸ்தாநத்துக்கு இரண்டங்குலத்தின்மேலும், கோசஸ்தாநத்துக்கு இரண்டங்குலத்தின் கீழுமுள்ள மத்தியமே தேகமத்தியமாம். அது மூலாதா



ரமென்றும், சிகாஸ்தாநமென்றும், பெயருள்ளதாகித், திரிகோணமாய்த் தப்தசுவர்ணகாந்தி மயமாகவிருக்கும்.

அதன்மேல் நவாங்குல உயரத்தில் நான்கங்குலவிஸ்தீர்ணமாய்க் குக்குடாண் டாகாரமான நாடிகந்தமிருக்கும்; அதன்மத்தியமே நாபியாம். அந்த நாடிகந்தத்தின் இரண்டங்குலத்தின்கீழ்குண்டலி ஸ்தாநமிருக்கும்; அதில் குண்டலிசர்ப்பம் அஷ்டப்பிரகிருதி ரூபமாய்ச் சப்தகுடிலாகிருதியாகி நாடிகந்தமத்தியத்தில் சுஷுமுனையென்னும், நாடித்துவாரத்தைத் தன்முகத்தினல் மறைத்துக்கொண்டு நித்திரைசெய்யும், அந்தநாடி கந்தத்திருந்து துவாதசாங்குல உயரமான ஞாளத்தின் பத்திராஷ்டகத்தின் சதுரங்குல விஸ்தீர்ணத்தில் கதலிப்பூப்போல அதோமுகமாகிப் பூர்வ்வ இதயகமல மிருக்கும். அதில் ஜீவஹம்சன் கர்ம்மசபாச பேதத்தனுகி வாலாக்கிர சதபாகத்துள், ஒருபாக சூக்ஷமனுகி மநதின்நடக்கையினல் கமநஞ்செய்வான். அந்தநாடிகந்தத்திலிருந்து புறப்பட்டுச் சாலசூத்திரங்களைப்போல மேல், கீழ், இடம், வலத்தினில்பொருந்தி மந பிராணுதி தசவாயுக்கள் சஞ்சாரமார்க்கமாய் (எ௰உத) நாடிகளுக்குள்ளே முக்கியமான சதுர்த்தசநாடிகளில் ஈச்சுவரன் அதிதேவதையான சுஷுமுனையே மஸ்தகாந்தமாகி யிருக்கும்.

விஷ்ணு அதிதேவதையான இடையே வாமநாசிகாபுடாந்தமாகி யிருக்கும். பிர்ம்மா அதிதேவதையான பிங்கலையே தக்ஷண நாசிகாபுடாந்தமாகி யிருக்கும். இந்திரன் அதிதேவதையான காந்தாரியே வாமநேத்திராந்தமாகி யிருக்கும். திக்கு அதிதேவதையான புருடனே தக்ஷண நேத்திராந்தமாகி யிருக்கும். சந்திரன் அதிதேவதையான சங்கிநியே வாமகர்ணுந்தமாகி யிருக்கும். பிரசாபதி அதிதேவதையான பயஸ்வநியே தக்ஷணகர்

ணாந்தமாகியிருக்கும், விராட்டதிதேவதையான சரச்சு வதியே சிங்வாங்கமாகியிருக்கும். பாவகன் அதிதேவ தையானவிஸ்வோத்தனாயே ஜடராந்தமாகியிருக்கும்.பூ மிஅதிதேவதையான குகுவே கோசாந்தமாகியிருக்கும், வருணன் அதிதேவதையான ஆலம்புடையே பாயுவாந் தமாகி யிருக்கும். சூரியன் அதிதேவதையான பயஸ்வ நியே தக்ஷண பாதாந்தமாகவிருக்கும். வருணன் அதி தேவதையான அத்திசிங்ஙுவையே வாமபாதாங் குஷ்டா ந்தமாகவிருக்கும், வாயு அதிதேவதையா வாருணியே சர்வ்வாங்க காமிநியாகி யிருக்குமென்னும் சரீராப்பியாந் தரநாடி சக்கரவிசாரங்களும் ;

அந்த நாடிசோதனைக் கிரமங்களில் ரேசக, பூரக, கும்பகவிதிகளும், தன்சாநுவை தக்ஷணஅஸ்தத்தினல் பிரதக்ஷணஞ்செய்து நொடித்தலளவு ஒருமாத்திரையா ம்,சோடசாதிமாத்திரை நியமங்களும், தநு, லாகுவ, தீ பந, சடராக்கிநி யார்த்தநாதிநாடி சுத்திசிந்நங்களும், சூரி ய, பேதந, உச்சுவாஸ, சீற்காரி, சீதளி, பத்திரிகை, பிர மரி,மூர்ச்சை, கேவலமென்னும் அஷ்டகும்பகப் பிரகார ங்களும், மூலபந்த ஒட்டியாணபந்த சலாந்திரபந்த மெ ன்னும் பந்தத்திரயங்களும், பிரகிருத, வைகிருதமென் னும் துவிதமான ரேசக பூரக கும்பக உத்கருஷ, அபக ருஷ, சூநிய, உக்கிராந்தியென்னும் சப்தப் பிராணயாம லக்ஷணங்களும்; சுவேதிதம்ப தேகோத்தானமென்னும் கநிஷ்ட, மத்திம, உத்தமபிராணயாம சித்திசூசனைக ளும், பச்சிமத்துவாரகமந, பிர்ம்மாதி கிரந்திபேதந, சி ரோமத்தியகத சந்திராமிருத சேவநாதிக் கிரமங்களும், பிராணயாமங்களில் பாபக்ஷய ரூபசாந்தி, அஞ்ஞாநநிவ ர்த்தி ரூபசாந்தி, ஞாநப்பிரகாச ரூபதிர்ப்தி, புத்திநிர்ம்ம லரூபப் பிரசாதமென்னுஞ் சதுர்வித சித்திகளாகுமென்



றும், பாஃகியகர்ம்ம பரித்தியாகத்தினில் சித்தம் அந்த ர்முகமாகப் பொருந்துவிக்கிறதே லக்ஷணமான பிரத் தியாகாரத்தில் அநேகபேதங்களுண்டு.

பரசிவனென்னும் சுபாசிரியத்தினில் சித்தத்தாப நமே லக்ஷணமான தாரணையிலிருந்து பூமிதாரணாதிவெ குப்பிரகாரங்களும்; மற்றும் விஷயாந்தரத்துக் கிரங் காமல் சிவசிந்தனைப்பிரகார ரூபமான தியாநங்கள், நா நாவிதங்களும், தேயவஸ்துவில், மநோ நிச்சலாத்மகமா ன காமாதியே சுதாசுயார்த்த பேதங்களும்,அணிமாதி ய நேக சித்திபேதங்களும்; ஆலசியம், வியாதி பிர்ம்மஸ்தா ந சமுசயம், அநவஸ்திதி, அசிரத்தை, பிராந்தி, தரிசந ம், துக்கம், தௌர்மநசிய, விஷய லோலுத்துவமென் னும் தசயோக விக்கிநங்களும், லய, விக்ஷேப, கஷாய மென்னும் சித்ததோஷத்திரயங்களும் அந்தந்தவிக்கிந தோஷோபசாந்திப் பிரகாரங்களும்,இயமாதி அஷ்டாங் கயோகத்தில் இயமாதி நான்கு அங்கங்களும் பாஃகிய மாம்.பிரத்தியாகாராதிநான்கங்கங்களும் அந்தரங்கமாம்.

அவைகளுள் அஹிம்சாதி, சௌசாந்தமாந அங் கங்களுள்ள இயமத்துக்குப் பஹிர்யாகாதிகளும், தப சாதிவிரதாந்தமான அங்கங்களுள்ள நியமத்துக்கு அபி மத்தேவதாசந்தரிசநாதிகளும், சொஸ்திகாதிபேதமுள் ள ஆசநத்துக்குத் தேகாரோக்கிய அநாலசியாதிகளும், ரேசகாதிசப்த பேதமுள்ளபிராணயாமத்துக்குச் சகல தோஷ நிவர்த்திகளும், இந்திரியங்கள் அந்தரங்கத்துக் கும், ஆகருஷணஞ்செய்யும் பிரத்தியாகாரத்துக்கும் வைராக்கிய லக்ஷணக்குறியும், தத்விஷயவர்க்கவந்தநா திகளும், சுபாசிரயத்தில் சித்தபந்தந ரூபதாரணைக்கு ப் பாபக்ஷயாதிகளும், சகுணநிர்க்குணத்தியாநத்துக்கு

அநீச்சுவரத்துவ நிவர்த்திகளும், ஞாதாதிசமாதிக்கு பிரக்ஞாபிரதிஷ்டாதிகளும் பலன்களாம்.

பின்னும் அந்த அஷ்டாங்கயோகத்துள் இயமாதி அஷ்டாங்கயோகாப்பியாசிகள் கநிஷ்டமொன்றும்; ஆசநாதி அஷ்டாங்க யோகாப்பியாசிகள் மத்திமமொன்றும்; பிரத்தியாகாராதி அஷ்டாங்க யோகாப்பியாசிகள் உத்தமமொன்றும், தியாநாதி அஷ்டாங்கயோகாப்பியாசிகள் உத்தமோத்தமமொன்றுஞ் சொல்லப்படும் அதிகாரபேதங்களும்;

பின்னுந் தேகேந்திரியாதி வைராக்கியமே இயமம்; பரமாத்மப்பிரீதியே நியமம்; சர்வ்வவஸ்துக்களில் உதாசீனமே ஆசநம்; விஷயார்த்தமான இந்திரிய நிரோதமே பிராணாயாமம்; விஷயவிமுகமானதே பிரத்தியாகாரம், சுவாத்ம நிஷ்டையேதாரணம்; பிர்ம்மமே தானென்கிறதே தியாநம்; நினைப்பு மறப்பில்லாத பாவனையே சமாதியாமென்னும் நிர்க்குண அஷ்டாங்கயோக லக்ஷணங்களும்.

மூலாதார, சுவாதிஷ்டான, மணிபூரக, அநாகத, விசுத்தி, ஆக்கினையென்னும் ஆறாதாரங்களாகிய சட்சக்கரங்களும் முறையே தேகமத்தியம், லிங்கம், நாபி, இருதயம், கண்டம், புருவமத்தியம் என்னும் ஆறங்கங்களும்;

சதுராசிர அர்த்தசந்திராகார, திரிகோண, ஷட்கோண, விருத்த, விசித்திரமான, ஆறாதாரங்களும், பிருதிவியாதிமாந சாந்தமான, ஆறுபூதங்களும்; பீத, சுவேத, ரத்த, நீல, படிக, மாணிக்கமென்னுமாறுவர்ணங்களும்; சதுர்த்தள, ஷட்தள, தசதள, துவாதசதள, சோடசதள, துவிதளங்களுள்ள ஆறுகமலங்களும்; வகாராதி,ஸகாராந்த,பகாராதி ஒகாராந்த,டகாராதி ஃபகாராந்த,ககாராதி.ஂகாராந்த,சுகாராதிவிசர்க்காந்த,ஹ;க்ஷ,



என்னும் ஆறுவர்க்கதளாக்ஷரங்களும்;நகாராதிபிரணவாந்தமான ஆறுகர்ணிகாக்ஷரங்களும்; பிர்ம்மாதி சிவாந்தமான ஆறு அதிதேவதைகளும்; பிர்ம்மசக்கர, சிகாசக்கர, பச்சிமசக்கர மென்னும் சக்கரத்திரயங்களும்; இதற்குக்கிரமத்தில், மஸ்தக, சிகை, சிகாந்தமென்னும் ஸ்தாநத்திரயங்களும்; சகஸ்திரதள, திரிதள, ஏகதளமான பத்மத்திரயங்களும்; ஜோதிவர்ண, மஹாஜோதிவர்ண, அப்பிரதரிசநவர்ண மென்னும் வர்ணத்திரயங்களும்; அக்ஷராத்மகநாத, அநக்ஷராத்மகநாத, நிஸ்சப்தமென்னும் நாதத்திரயங்களும்; அந்தராத்ம, பரமாத்ம, பரப்பிர்ம்மமென்னும் அதிதேவதாத்திரயங்களும்; சோம, சூரியாக்கிநிமண்டலத் திரயஸ்தாந காந்திப்பிரகாரங்களும், பாஃகிய மத்தியாந்த, லக்ஷியத்திரயங்களும், குணரகிதாதியாகாச பஞ்சகங்களும், பூர்வ்வமத்தியாந்தமென்னும், தாரகத்திரயங்களும், சண்முகி, கேசரி, சாம்பவிமுதலான முத்திராபேதங்களும், உன்மணி, மனோன்மணி, சகசமென்னும் அவஸ்தாக்கிரமங்களும், விக்ஷேப, கதாகத, சமுசிலி, ஷ்டீஸ்வலீநமென்னும், மநோவிர்த்தி சதுஷ்டயங்களும், பாலோன்மத்த பிசாசமென்னும் யோகீச்சுவரர் சிஙந்த்திரயங்களுமாகிய வெல்லாம் யோகபாதத்தில் பிரதிபாத்தியங்களாகும்.

## ஞானபாதம்பதிலக்ஷணம்.

இதன்மேல் ஞானபாதங் கூறுகின்றனம். இதில், பதி, பசு, பாச, மென்னுந் திரிபதார்த்தங்கள் பிரதிபாதமாகும். அவற்றுள், அநாதிநிர்ம்மல சித்கனைக்கியத்தில் சிருட்டி ஸ்திதிசங்கார திரோபாவாநுக் கிரகமென்னும், பஞ்சகிர்த்திய கர்த்திருத்துவமே தனக்கசாதாரணதர்ம்மமாயுள்ளதே பதிபதார்த்தமாம்.

பின்னுஞ் சிருஷ்டியாதி பஞ்சகிருத்திய விவரணம் எப்படியெனின்,காரணகர்த்திருத்துவம், சங்கற்பகர்த்திருத்துவம்,சந்நிதாநகர்த்திருத்துவம் எனத்திரிவிதகாரியகர்த் திருத்துவத்துள்ளே, குலாலாதிகளைப்போல, விகாராத்மகமான காரணகர்த்துருத்துவமும் விட்டுப், பின் சங்கற்பமென்கிறது, ஸ்மரணவிசேஷமாகுமதனால் விச்சுவகர்ம்மாதிகளைப்போல அஞ்ஞாநாதிதோஷயுக்தமான சங்கற்பகர்த்துருத்துவமும், நியதிகளைந்து, குமுத, கமல மதுச்சிஷ்ட சேறுமிருத்திகைகள் சங்கோச, விகாச, திரவசுஷ்கங்களென்னுங் கிரமவிஷமவிகாரங்களுக்கு நிர்வ்விகாரனான சூரியனெப்படியோ அப்படிப்போலச் சந்நிதாநகர்த் திருத்துவயுக்தனாய்ப், பிந்துவின் அதிகாரா வஸ்தோபாதியால் ஈசசவிக்ஞையுள்ள பரசிவன் சகலகாரியோற்பாதகமான வியாபார விசேஷமே சிருட்டியாகும்.

ஆத்மருக்குப் பரமாநந்தோற்பவமாவதால் போகாவஸ்தையைப் பொருந்தின விந்தோபாதியினால் சதாசிவநாமதேயமுள்ள பரசிவன் சமஸ்த ஜகற்பாலாற்மக்கிருத்திய விசேஷமே ஸ்திதியாகும்.

சம்சாரத்திருந்து துக்கிதரான பசுவிசிற்மனார்த்தமாகச் சிவன் நியாமகசத்தியினால் சகலதத்துவ புவநாதிகாரியவர்க்க சங்கோசிதமான லயாவஸ்தையைப் பொருந்தின பிந்தோபாதியினால் ஈசசவிக்ஞாதனான பதியின் வியாபார விசேஷமே சங்காரமாகும்.

ஸர்வ்வாத்மர்கள் போகசாதநமான பிந்தோபாதியால் கர்ம்மாநுசாரத்தினால் அந்தந்தத் தத்துவபுவநாதிகளிலிருந்து போகத்தைப் புசிப்பிப்பதனால் வாம நாமதேயமுள்ள, பரசிவன் கிருத்திய விசேஷமே திரோபாவமாகும்.



நிசேஷமாகி நஷ்டமாவதற்கே யோக்கியமான மலபரிபாகாநுசாரத்திருந்து அத்தியந்தநாச பரிணாம விசேஷத்துக்கு உபயோக்கியமான தன் காரியவர்க்கோற்பீகாரத் துக்காபிமுகமாகும் விந்தோபாதியினால் லப்பியமான நிரதிகரண, சரதிகரண, சிவதர்ம்மணி; லோகதர்ம்மணி,நயிஷ்டிகி, பௌதிகி, சத்தியோநிர்வ்வாண; அசத்தியோநிர்வ்வாண, கிரியாவதி, ஞாநாவதி, சக்ஷுஷீ, பரிசிகி, மாந்திரிகி, வாசிகி, சாஸ்திரிகி,யோகிகி, ஹௌத்திரிகி, முதலான தீக்ஷாத்துவாரத்திலிருந்து ஈச்சுவரசவிக்ஞையனான பதியை ஸொஸ்சாமியதாரூப விசுத்தாற்மாபிவேக்தியத்துக்குக் காரணமான வியாபாரவிசேஷமே அநுக்கிரகமாம். இப்படிச் சமசித்தமான பஞ்சகிருத்தியமே தனக்கசாதாரணதர்ம்மமுள்ளதே பிரதம பதார்த்தமாகும்.

## பசுலக்ஷணம்.

அநாதிமல ருக்தக்ஞாந கிரியாசத்தியுக்த சைதந்நியமே பசுவாகும். அந்தப்பசுவே மலமாயா கர்ம்மமென்னும் பாசத்திரய சம்பந்தத்தினால் சகலரென்றும், மலகர்ம்ம பாசத்துவய சம்பந்தத்தினால் பிரளயாகலரென்றும், ஏகபாச சம்பந்தத்தினால் விக்ஞாந கேவலரென்றும், திரிவர்க்கராகி யிருப்பர்.

அவருள் சகலவர்க்கரோ பக்குவத்திரிபாசரென்றும் அபக்குவத் திரிபாசரென்றும் துவிதராவார். அந்தப்பக்குவத்திரிபாசருள் கலாமத்தகத்திருந்த மண்டலேச்சுவரர் எண்மர். குணமத்தகத்திருந்த குரோதேசாதிகளெண்மர் சூக்ஷ்ம தன்மாத்திராவர்க்கத்திலிருந்து சதருத்திரர்க்குக் கர்த்தரான வீரபத்திரன் குணதத்துவத்திலிருந்து, பிர்ம்ம விஷ்ணுவாதிகளுக்குக் கர்த்தரான ஸ்ரீகண்டேச்சுவரன் பிர்ம்மாண்ட ரக்ஷகரான சதருத்திர

ரென்னும் நாற்றெருபத்தெமணர், பரசிவன் தானேநிரதிகரண தீக்ஷையிலிருந்து மந்திரேச்சுவரர்களாக்கி யந்தந்தக் கிருத்திய அதிகாரிகளாக நிறுத்த, அவரெல்லாரும் தேகயுக்தரானாலும் மாயாதேகவசத்த ராகாதே ஸர்வ்வக்ஞராகிப் பதிபதார்த்த ராகியிருப்பர்.

அபக்குவத்திரி பாசருள் சிலாவிஷ மூர்ச்சிதனைப் போல மலநிரோதத்தில் கேவலாவத்தையராயிருந்து மேல் சிவனால் கலாயோக போக கர்ம்ம க்ஷய மலபரிபாகாதி கிரமயோகம்பெற்று, மோக்ஷத்தில் விசாராபேக்ஷராய்ச் சம்சாரத்தில் ஜுகுப்ஸை சிவபத்தர்களிடத்தில் பக்தி ஸ்ரீகுரு உபாஸ்னை சிவாகமங்களிடத்தில் விசுவாசம் முதலான சிந்நங்களுள்ள சத்திநிபாதமான, மந்தம், மந்ததரம், தீவிரம், தீவிரதரமென்னும் பேதபரீக்ஷையினால் பரசிவன் குருமூர்த்தியை அதிஷ்டித்துச் செய்யப்பட்ட சரதிகரண தீக்ஷாக்கிரமத்தால் சிவ சமானரூப மோக்ஷத்தை யெய்துவார்கள்.

பின்னும் அபக்குவத்திரி பாசருக்குள்ளே மற்றவர்களே கர்ம்மமலபோகாதிகத்திலிருந்து அதனால் முத்தராகவேண்டுமென்று சிவன் நாநாயோநியுள் பிறப்பித்துக் கிஞ்சிக்ஞத்துவம் கிஞ்சித் கர்த்திருத்துவத்தினால் சுகதுக்கமோகங்களுள்ளவராகி அந்தந்தத்தேகமே நானென்று சம்யாந்தர தீக்ஷாவிசேஷத்தினால் பசுத்துவ ஏகதேசியம் பிரித்துச் சிவத்துவ ஏகதேசாபி வெக்தியுஞ்செய்து மாயாபாச விமோசநத்தில் மல கர்ம்மமென்னும் பாசத்துவய யுக்தராகிப் பிரளயாகலரென்னும் நாமத்தை யுடைத்தாயிருப்பர்.

பின்னும் அந்தப்பிரளயாகலரே பக்குவபாசத்துவயரென்றும், அபக்குவ பாசத்துவய ரென்றும் துவிதராகியிருப்பர்.



பின்னும் அந்தப் பக்குவபாசத்துவயரே பரசிவன் நிரதிகரண தீக்ஷா சாமர்த்திபத்தினால்நிசமோக்ஷ மெய்தியிருப்பார்கள். மேலும் இப்பக்குவ பாசத்துவயர்களே புரியட்டக தேகயுக்தராகிக் கர்ம்மாதீநத்திலிருந்து அந்தந்தப் புவநத்தில் உற்பவிக்குந் தேகசம்பந்தராயிருப்பர். அவர்களுள், லோகபாலாஷ்டகர், குய்யாஷ்டகர், அதிகுய்யாஷ்டகர், குய்யாகுய்பாஷ்டகர், பௌத்திராஷ்டகரெனப் பஞ்சவித அஷ்டகர்களேமந்திரமகேச்சுவரரான அநந்தேச்சுவரரிடத்தில் அநுக்கிரகராகிச் சர்வ்வஞானராய்ப் புவநபதிகளாக இருப்பர்.

## பதிலக்ஷணம்.

பின்னும் அவர்களே விக்ஞாநயோக சந்நியாசிகளாயிருந்து கர்ம்மக்ஷயமாகி மலஐக்கிய பாசசம்பந்தத்தால் தரிசநாந்தத்துக்கே முத்தித்தாநமென்னும்,மாயாதத்துவம், சுத்தவித்தையா தத்துவத் துபயத்தந்தராள லக்ஷண கைவல்லியபதத்துள், பொருந்தி, விக்ஞாந கேவலரென்னுஞ் சௌக்கியத்தரா யிருப்பர். அந்தவிக்ஞாநகேவலரே மலவிசிட்ட பரிபாகத்தராதநத்தினில் சிவனால் சம்பிராப்த நிரதிகரண தீக்ஷாவதிசயத்தினால் வித்தையா வித்தேச்சுவர சதாசிவாதி பேதத்தினால், உத்தரோத்தரமான அதிகாராவஸ்சத்தையும் அங்கீகரித்துப் பரமுத்தனைப்போலத் துக்கலேசமில்லாதே நிரதிசயசமஸ்த வயிந்தவாநந்த சுவையைப்புசித்து அந்தப்போகத்துள் விரக்திபிறந்து பிரயோஜந கர்த்தத்துவ ஆயாசங்களைவிட்டுச் சகலவயிந்தவோத் கிரணமாகித் தத்துவாதீதமான சர்வ்வாபி வெக்தநிர்விகற்ப பரசிவசமானலக்ஷண ஞாநக்கிரியாசத்தி யுக்த, பரமுத்தரென்பித்துக் கொண்டிருப்பதே துவிதபதார்த்தமாகும்.

பின்னும் அந்த அநாதியில் சிவசத்தியிலிருந்ததிஷ்டாநமாகிப் பசுஞாநக் கிரியாசத்தியிலிருந்து ஸ்திரத்தினிலைபெற்றிருப்பதே பாசபதார்த்தமாகும்.

பாசலக்ஷணம்.

பின்னும் அந்தப்பிரகாசத்தை நிறுத்தி மாயாபீஜாங்குரத்துக்கே சாதநமாகியிருக்கும் ஆத்மருக்குப் போதத்திருத்துவம் ஆபாதித்துத் தான் ஒன்றேயானாலும் பிரத்தியேக பிரத்தியேகமாக ஆத்துமாக்களை ஆவரித்துக்கொண்டிருந்த அநேகசத்தி யுக்தமாகித் தன்பரிபாகவசத்தினில் சம்பிராப்தமான தீக்ஷாவிசேஷத்தினால் தொலைதலுள்ள அந்தச்சத்திசகிதனாய், அஞ்ஞாந, அவித்தை அவிர்த்தி, அகுஞ்சந, அசுத்தி, ஆணவம், அநிர்ம்மல, மிருத்தியு, மூர்ச்சை, திரஸ்கார, கறுப்பு, இருள், அழுக்கு, பசுத்துவமென்னும் பரியாயநாமங்களுள்ள, மோக, மகாமோக, மிஸ்ர, தரமிஸ்ர, அந்ததரமிசிரி, ஜகமோக, அஞ்ஞாநமென்னுஞ் சத்தாவஸ்தைகளுள்ள, கூடஸ்தனுதியான பாசவிசேஷமே மலமாகும்.

கிஞ்சிக்ஞத்துவ, கிஞ்சித்கர்த்திருத்துவ, போகஞத்தத் துவத்துவாதியநேக, வைலக்ஷகதர்ம்மத்துக் கநுகுணமான பரிணமயுக்த காரியவர்க்கஞ் சகிப்பதற்கு உபாதாநகாரணமாய்க் கர்ம்மபாசத்துடனே தொலைதலுள்ள ஆகந்துகபாசமாய்க் கிரந்தி, மூலப்பிரகிருதி, மோகினி மூலோபதாநம், மலாத்மிகி, பாசதத்துவை, பிரதானகரணி, சூக்ஷ்மசத்தி, சாமவர்ண அசிவை, அவ்வியத்தை ஆதாரபூமி, அசுவத்தை, அபரவித்தை, ஞாநவெஞ்சிகை, என்னும் பரியாயநாமங்களுள்ளதாகி, ஏகத்துவ, ஷடத்துவ, பரிணமத்துவ, யோகத்துவ, கலாதிகாரணத்துவ, வஸ்துரூபத்துவ, சூக்ஷ்மத்துவ, கர்ம்மாச்சிரயத்துவ, சவிகற்பஞாந புதேச்சுவர தத்துவாசினாயா



சதைகநந் தேச்சுவர, பிரேரகத்துவாதி தர்ம்மவிசிஷ்டமாய், நித்தியவியாபகமாகி யிருக்கும் பாசவிசேஷமே மாயையாகும்.

மற்றுமந்தமாயைக்குக் கர்ம்மாசினாயமெப்படியெனின், சகலாத்மருஞ்செய்யும், சுகிருத, துர்க்கிருதரூப கர்ம்மமே, தர்ம்ம, ஞாந, ஐச்சுவரிய, வைராக்கியமென்றும், அதர்ம்ம, அஞ்ஞாந அனைச்சுவரிய, அவைராக்கியமென்றும், அஷ்டபாவாத்மதத்துவத்தின் புத்தியேகுணமென்பித்து, பூர்வ்வமென்னும் பெயரினால் சமஸ்கரித்திருக்கும். அந்தக்குணங்களுள்ளே முதல் தர்ம்மாதி சதுஷ்டயமே சாத்விகம், அதர்ம்மாதித்திரயமே தாமதம், அவைராக்கியமொன்றே இராசதமாம்.

பின்னுமக்குணங்களே, சாமசித்திகமென்றும், வைநீகமென்றும், பிராகிருதமென்றுமுன்றாம். அவற்றுள் இஷ்டபூர்வ்வாதி தர்ம்மசமுஸ்காரிகளுக்கே தேகமழிந்ததன்மேல் ஜன்மாந்தரத்தில் முதல்சமுஸ்காரந்தானே உற்போதமாகிறதே சாமசித்திகமாம். தேகத்தியாகத்தின்மேல் புநர் ஜன்மத்தில் லோகபுத்தி, குருஸாஸ்திராதிகளால் அந்தச்சமுஸ்காராநுசாரமான குணந்தோற்றுவதே வயிநீகமாம். சொற்பனமூர்ச்சாதிகளில் எழுந்திருந்தவனுக்கே யதோச்சிதசமுஸ்காரமாகிறுப்போலவர்த்தமான தேகத்தினில் அந்தக்குணபி வெக்தியாவதே பிராகிருதமாம்.

பின்னும் சாமசித்திகமான தர்ம்மத்தினால், வசியாதிகள், ஞாநத்தினால் தர்ம்மபரிக்ஞாந சம்பந்தாதிகள், ஐஸ்வரியத்தினால் விக்கிந சமூக நிவிர்த்தியாதிகள், வைராக்கியத்தினால் போகபரித்தியாகாதிகள், அதர்ம்மத்தினால் அபோகாசத்தியாதிகள், அஞ்ஞாநத்தினால் திரஸ்காராதிகள், அனைஸ்வரியத்தினால் விக்கிநாதிகள், அவைராக்கியத்தினால் ஜன்மாந்தரங்கள் உண்டாம்.

பின்னும், வயிரீக பிராகிருதங்களான தர்ம்மத்தினு ல் சுவர்க்காதிகள், ஞானத்தினுல் முத்தியாதிகள், ஐஸ்வரியத்தினுல் இஷ்டசித்தியாதிகள், வைராக்கியத்தினுல், பிரகிருதிலயாதிகள், அதர்ம்மத்தினுல் பசுபக்ஷிமிருக சர்ப்ப தாபரமென்னும் பஞ்சவிதத்திரியக் யோநிபிராப்தியாதிகள், அஞ்ஞானத்தினுல் நரகபயாதிகள், அனைஸ்வரியத்தினுல் விக்கினாதிகள், அவைராக்கியத்தால் பந்தாதிகளுண்டாமென்று சகலகர்ம்ம சமுஸ்காரங்களெல்லாம் புத்தியிலுண்டாகும். அந்தபுத்தியானதே பிரளயகாலத்தில் மாயையிலடங்கும்.

அந்தச்சமுஸ்காரத்திலிருந்துகாலாந்தரத்தில்பலிப்பிக்கிறதினுல் மாயைகர்ம்மா சிளையமென்பதர்த்தமாம்.

பின்னுமனோவாக்குக்காயங்களென்னும் திரிகரணுதிகளில் சநித்துச் சுகதுக்காதி யநேககுணத்துக்குக் காரணமான தர்ம்மாதர்ம்மரூபத்தினில் விசித்திரமாகி, உத்க்ஷேபந, அபக்ஷேபந, ஆகுஞ்சந, பிரசாரண, கதிகளெனப் பஞ்சவியாபாரசம்பவமாகி, உற்பாத்திய, பிராப்பிய, விகாரிய, சமுஸ்காரியமென்னச் சதுர்விதபலமுள்ளதாகிச் சாதிப்பிரத, ஆயுப்பிரத, போகப்பிரதமாகி அத்தியாத்மீகாதி திரிசாதநமாய்ச், சுரநரதிரியக்காதி யோநிப் பிராப்திநியமத்துள் அநுகுணமான கலாதிமாயாகாரிய சநிதமாதற்கே ஸஹகாரியாகி பீஜவிருக்ஷ நியாயத்தால், பிரவாகரூபாநாதியான பாசவிசேஷமே கர்ம்மமாம்.

இந்தக் கர்ம்மத்துக்குப் போகப் பிரதத்துவமுண்டாகையால் போகலக்ஷண மெப்படியெனின் சக்ஷுராதியிந்திரியங்களே பாஃகியத்தின் வழிதாதி விஷயங்களைப் பிரகாசிப்பித்து அவற்றிலிருந்த குணதோஷங்களைப் பராமரித்துச் செய்வதே மநசாம்.



மேலும் புத்தியானது அந்தவிஷயங்களை நிச்சயிக்குமிடத்தில்நல்லது பொல்லாததைத்தானே சுகதுக்கரூபத்தினில் பரிணமித்துச் சாக்ஷாற் போக்கியமென்னும் அதுவேகாலோத்பலித சைதந்நியனுன ஆத்மன், வித்தையென்னும் அந்தக்கரணத்தினுல்கண்டு மேல் ஆங்காரமென்னுங் கரணத்தினுல் நான்சுகி, நான் துக்கியென்னுமிந்த அத்தியாசத்திருந்த போக்கியரூப புத்தியையறியும்விதமே போகமாம்.

அநந்தத்துள் அத்தியந்தவிசிஸ்டாதி காரியங்களுக்கு மாயாகர்ம்மங் கூடாதிருக்கும் அதனுல் நிரந்தரமானதிரதிசய சுகாநுபவ லக்ஷணபோக சாதநகாரியசாதஞ்சநிப்பதற்கே உபாதாநகாரணமாகி மலக்ஷயத்துடன் தொலேவதாகி ஆகந்துக பாசமாகி மஹாமாயை, குடிலை குண்டலி, கிரியாசத்தி, பரநாதம், பரபிந்து, பரிக்கிரகசத்தி, பரவித்தை, சத்ததத்துவம், சத்தப்பிர்ம்மம், சுத்தமாயை சிவதத்துவம், சடத்துவபீஜம். சிவலிங்கபீடம், யோகபீடம், மந்திரபீடம், வியோமம், வித்தியாசத்தி, வாகேச்சுவரி, அநாகதம் அகோஷம், வாக்கு, பிர்ம்மமெனப் பரியாய நாமங்களுள்ளதாய், க்ஷகாரமுதலான ஐம்பத்தொரு வர்ணுத்துவத்துக்கே, ஓம் சிவாய நமோநமாவென்பன முதலான எண்பத்தொரு பதத்துவாவத்துக்கு இருதயாய நமாவென்பது முதலான ஏகாதச மந்திராத்துவத்துக்கு, பிருதிவியாதி சுத்தாசுத்த ரூபஷட்த்திரிம்ஸதி தத்துவத்துக்குக் காலாக்கினி முதலான அநேக புவநாத்துவத்துக்கு நிவர்த்தியாதி பஞ்சகலாத்துவத்துக்கு, வைகரியாதி சதுர்வித வாக்குகளுக்கே ஆதாரபரிணும ரூபத்தினுல் காரணமான, நிர்வ்விகற்பஞ்ஞாநோபேதனுன பரசிவனென்னும் அசரீர கர்த்திருவமான பரிபூரண, பரஞ்சோதிஸ்வரூபமான, பாசவிசே

ஷமே பிந்துவாகும். மற்றந்த பிந்துவே சதுர்விதவாக்குகளுக்குக் காரணமென்றால் அந்தவாக்குகளின் சுவரூபமெப்படியெனின், பரை, பைசந்தி, மத்திமை, வைகரியென்னும் சதுர்விதமாம். அவற்றுள் யாதாமொருவன் வாயுத்திரத்தினால் மூலாதாரத்தில் சூக்ஷமநாத சொரூபத் திருந்தவனுடன் ஏகாசமாகிச் சமஸ்தத்துக்குங் காரணமாகி யிருக்கும். வாணியேபரையாம். பின் அதுவே நாபிஸ்தானத்தினில் மயிலண்டர சகதமான பாதபக்ஷாதியவயங்கள்போல அர்த்தவாக வர்ணக்கிரமமில்லாது நிர்விகற்பமாகி உட்ஜொலித்திருக்கும் வாணியேபைசந்தியாம். பின்னும் அதுவே இருதயத்தினில் பதார்த்தங்கள் வாசகவர்ணநு சந்தானரூபத்தால் பிராண விருத்தியுடன் கூடாது சவிகற்பமாயிருக்கும் வாணியே மத்திமையாம். பின்னுமதே உர, கண்ட, சிங்கு, மூலதாலு, ஓஷ்ட, தந்த, நாசி, சிரசென்னும் எட்டுஸ்தானங்களில் பிராணவாயு சம்பந்தமாக அங்கங்குப் பிறக்கும் அர்ண, வர்ண, பீஜ, லிங்க, மாத்திருகை, சுத்தமாகுமென்னும் பரியாய சௌக்ஞையால் பிரத்தியேகவர்ணதி தேவதாபலங்களுள்ள ஸ்வரவெஞ்சமென்னும் இருதிறமான ஐம்பத்தொரு அக்ஷராபி வெக்தியிற்பிறந்து இது கடம் இதுபடமென்று சொல்லிப் பரசிரவணகோசரமாகிச் சகலசமுசார வியாபாரத்துக்கும் காரணமாக முக்கிய பெங்தரூபமான வாணியே வைகரியாம்.

பின் அவற்றுள் பாஃகியத்தினிலொன்றும் அப்பியந்தரத்தில் மூன்றும்வர்த்தித்திருக்கும். அவற்றுள் முன்சொன்ன சுத்ததத்துவவர்த்திகளுக்கே, பரையென்றும், நாதசௌக்ஞையுள்ள காரணவாக்கே முக்கியமாகவிருக்கும். மிசிராத்துவாதிகளில் பைசந்தி, மத்திமையென்னுமிரண்டும் விந்து சௌக்ஞையுள்ள சூக்ஷம



வாக்குகளே வர்த்தித்திருக்கும். அசுத்தாத்துவாஸ்திதவைகரியென்னும் அர்ணசௌக்ஞையுள்ள சர்வ்வவாக்கிலிருந்து விவகரிக்கும்.

இவற்றுள், விருக்ஷங்களுக்குப்பரை, சர்ப்பாதிகளுக்குப் பைசந்தி, பசுவாதிகளுக்கு மத்திமை, மநுஷருக்கு வைகரியே பிரதானமாக விருக்கும்.

பின்னும் அந்தவைகரி ரூபசத்தசமூகமே, வாசகமென்றும், லாக்ஷணீகமென்றும், வெஞ்சநமென்றும் மூன்றுபேதங்களாம். அவற்றுள், விருத்தசங்கேதமாகி, இதுகடம், இதுபடமென்னு முக்கியார்த்த கோசரசத்தமே, வாசகசத்தமாம். அஃறிணை கூப்பிட்டது என்னுமிடத்து அசேதநமான அஃறிணை கூப்பிடாது தற்சம்பந்தியானமாநவனே கூப்பிட்டானென்று அந்நியார்த்தமும் லக்ஷிக்கிரசத்தாதிகமே லாக்ஷணீகசத்தமாம். சூரியன் அஸ்தங்கதமானான் என்னுமிடத்தில், சுவர்க்காதிக ளபேக்ஷையின் தேவதாபூசை சந்தியாவந்தனாதிகஞ்செய்யத்தக்கதென்று வேறொரு அர்த்த சூசிகத்தாதிகமே வெஞ்சநசத்தமாகும். கடாதிசகலவிஷயங்களும், வாச்சிய, வாசகசம்பந்த சங்கேத லக்ஷணசவிகற்ப ஞானமானால், முதல் நிர்வ்விகற்பத்தினில், சர்வ்வவஸ்துவின் யதார்த்தக்கிரஹணமாகும். இதுசர்வ்வஞானபரமேச்சுவரன் பிரசாதத்தினால் அநந்தேச்சுவராதிகளுக்கும், அநந்தேச்சுவரரால் சதருத்திராதியர்களுக்கும், இந்தருத்திரர்களால் பிர்ம்மாதிகளுக்கும், அப்பிர்ம்மரால் தேவர்களுக்கும்,இத்தேவரால்ரிஷிகளுக்கும்,ரிஷிகளால் அஸ்மத்பிதுராதியர்க்கும் தெரிவிக்கப்பட்டது.

இப்படிச்சொன்னமலாதி சதுர்விதபாசம் அசேதநமாவதால் தன்தன்வியாபாரத்துள் அவைதாமேயறியாததனால்,அந்தந்தப்பாசாநுக்கிரகலக்ஷணமான அந்தப்பா

சவியாப்பார சாரமாஞ்சிவ சத்திவிசேஷமே திரோதாந மாகு மென்பதே திரிபதார்த்தவிவேகமாகும்.

இப்படிச்சொன்ன இவைமுதலான சங்கேதமான, அநந்த பேதயுக்தமான பதியாதி பதார்த்தப் பிரதிபாத மே ஞாநபாதமாமென்று சொல்லப்பட்டது.

இந்தக் கிரியாபாதமுதலான நான்குபாதப் பிரவர்த்தகமான சிவாகமஞ் சிரவணப்படின்,கிரகண;மநந நிருத்தியாசநங்களால் உற்பந்நமான ஆத்மன்யதார்த்தஞாந திடத்தில் பிறந்த சமஸ்த பிரகிருதிமாயையே வைந்தவபோக நிஷ்புருலக்ஷண பரமவைராக்கிய பலத்தினுல் சடத்துவாதீதனுகும், சிவசாமியம் நானே ஆகிறேனென்னும் நிச்சயமுள்ளவனே பரமகிருதார்த்தனென்றுபேசுவதே சைவசித்தாந்தார்த்த விஸ்தாரமாகும்.இது சிவாகமார்த்த வர்ணனையுரைத்த, இரண்டாவது சைவசித்தாந்தபரிச்சேதம் சம்பூர்ணம்.

விவேகசிந்தாமணியில்

இரண்டாவது

சைவசித்தாந்தபரிச்சேதம்

முற்றிற்று.

---

உ

சிவமயம்.

ஸ்ரீகுருப்யோநமஃ

# விவேகசிந்தாமணியில்,

## மூன்ருவது,

## நாகலோகஸ்திதியுரைத்த பரிச்சேதம்.

முன்பரிச்சேதத்தில் சகலாகமார்த்தமான சைவசித்தாந்தந் தெளியச்சொன்னேன்;இந்தப் பரிச்சேதத்தில் நாகலோகஸ்திதியைச் சாதகருக்கு விஸ்தரிப்பேன். பூர்வ்வோக்த விந்துவின் காரியாவர்த்தி கலாந்தமானசடத்துவ விகாரங்களே ஆகமங்களில் பிரதிபாத்தியமாகும்.

அவற்றுள், தத்துவாத்ம, புவநாத்துமமென்னு மிரண்டையும் திரட்டுப்பால் தேன் சருக்கரைகூட்டினது போல வேதாகம புராணசம்பந்தங்கூட்டிச் சொல்லுகிறேன் என்னெனின்.

சிவ, சத்தி, சதாசிவ, ஈச்சுவர, சுத்தவித்தை, கலை, நியதி, காலம், வித்தை, ராகம், புருடன், பிரகிருதி, குணம், புத்தி, ஆங்காரம், சித்தம், சோத்திரம், தொக்கு, நேத்திரம், சிங்ஙுவை, கிராணம், வாக்கு, பாதம், பாணி, பாயு, குய்யம், சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தமென்னும் (௩க) தன்மாத்திரைகளும், நப, வாயு, வந்நி, ஜலம், பூமியென்னும் ஐந்து மகாபூதங்களுங்கூடிய (௩௬) தத்துவங்களுடைய சிருஷ்டிக்கிரம சுவரூப சித்திகுண கர்ம்ம பிரயோசனுதி விஸ்தாரங்களெல்லாம் ஆகமங்களில் விசிதமாகும்.

இவற்றுள் சிவாதிவித்தியாந்தமான ஐந்துதத்துவங்களும் பிந்துமயமான சுத்ததத்துவங்களாய் விஞ்ஞாந

கேவலரென்னும் ஆத்துமவர்க்கங்களுக்குச் சரீராதிசாதநங்களாயிருக்கும்.

கலாதி பிரகிருதியாந்தமான ஏழுதத்துவங்களும் மாயாவிகாரமாகிய மிசிரதத்துவங்களாய்ப் பிரளயாகலரென்னும் ஆத்துமவர்க்கங்களுக்குக் கர்ம்மாதியோகசாதநங்களாகி யிருக்கும்.

குணதிபூமியாந்தமான இருபத்துநாலு தத்துவங்களும் பிரகிருதிகாரியமாகிய சுத்ததத்துவமாகிச் சகலரென்னும் ஆத்துமவர்க்கங்களுக்குப் புவநாதி போகசாதநங்களாகியிருக்கும்.

அவற்றுள் கலாதிபூமியீருன (நக) தத்துவங்களும் ஸ்தூலசூக்ஷ்மமென இரண்டுவிதங்களாம். அவற்றுள் சூக்ஷ்மரூபங்களே பூததன்மாத்திரை. கர்ம்மேந்திரியம், ஞாநேந்திரியம், அந்தக்கரணம், குணம், பிரகிருதி, கலாதியென எட்டுவிதமாகி வெவ்வேறு புரியட்டகசரீரமென்பதாய்ச்சிருஷ்டிதொடங்கி பிரளயாந்தமானலும், அல்லது மோக்ஷாந்தமானலும் கெடாதிருந்து, தன் வியாபாரமுகத்தினல், சுர, யக்ஷ, ராக்ஷச, குய்யக, அயேந்திர, பிர்ம்ம, சோம, பிரஜாபதி, பசு, பக்ஷி, சர்ப்ப, மிருக, விருக்ஷ, மநுஷரென்னும் சதுர்த்தச சிருஷ்டியோக்கியரான பிரத்தியேகாத்மருக்குப் போகசாதநங்களாகியிருக்கும்.

## பிர்ம்மாண்டோற்பத்தி.

அந்தஸ்தூலரூபங்களே புவநங்களுக் காதாரமாகியிருக்கும். அஃதெப்படியெனின் பரமேச்சுவரன் பிரேரபணையினல் பிர்ம்மன், பிருதிவியாதி ஸ்தூலபஞ்சபூதங்களுள் ஒவ்வொன்றை யிவ்விரண்டு பாகமாக்கி, இறுக்கி அவற்றுள் ஒருபங்கு மவறாபூதஞ்செய்து, மற்றஒருபாகத்தை யிரண்டுபாகஞ்செய்து மற்றந்த பாகத்துவயத்துள், முதல்பாகத்தைவாங்கி நான்குபாகஞ்செய்து அதனதன் துவயத்துவய பாகங்களுள் விரவாது மற்றஇரண்டாகியபாகத்துள் ஒன்றொன்றுகூட்ட இருபத்தைந்தாம். அதெப்படியெனின ஆகாசத்தின் துவயபாகமே ஞாதுருவாம். அது அநிலத்தின் துவயபாகத்தில்கூட மநமாம். அக்கினியின் துவயபாகத்தில்கூடப் புத்தியாம். வாரியின் துவயபாகத்தில் விரவ சித்தமாம். பூமியின் துவயபாகத்தில் கதம்பமாக ஆங்காரமாம். இந்த ஐந்துஅந்தக்கரணங்களே ஆகாசபஞ்சீகரணமாகும்.



பின் வாயுவின் துவயபாகமே வியானனும். அதுநபத்துவயபாகத்தில் கூட சமானனும். வந்நியின் துவயபாகத்தில் கலக்க உதானனும். சலத்தின் துவயபாகத்தில் சேர அபானனும். தரையின் துவயபாகத்தில் கூடப்பிராணனும். இந்த ஐந்துமாருதமே வாயுவின் பஞ்சீகரணமாகும்.

அக்கினியின் துவயபாகமே நேத்திரமாம். அது வியோம துவயபாகத்துள்கூட சோத்திரமாம். சமீரண துவயபாகத்தில் விரவதொக்குவாம். சலதுவயபாகத்துள் ஒன்றச் சிங்குவாம். அவநியின் துவயபாகத்துள் பொருந்தக்கிராணமாம். இந்த ஐந்துஞாநேந்திரியங்களே அக்கிநிபஞ்சீகரணமாம்.

அப்புவின் துவயபாகமே ரசமாம். அது ககநதுவயபாகத்தில்கூட சத்தமாம். பவநதுவயபாதத்தில் விரவப்பரிசமாம். பாவகதுவயபாகத்தில்கூட ரூபமாம். தரணிதுவயபாகத்தில்கலக்க கந்தமாம். இந்த ஐந்துவிஷயமும், அப்புவின் பஞ்சீகரணமாம்.

பிருதிவின் துவயபாகமே பாயுவாம். அது அம்பரத்துவயபாகத்தில்கூட வாக்காம். பவநதுவயபாகத்தில் கூடப் பாணியாம். அக்கிநியின் துவயபாகத்துள் ளெய்

தப்பாதமாம். உதகத்தின் துவயபாகத்துளெய்த, உப த்தமாம். இந்த ஐந்துகர்ம்மேந்திரியங்களும்பிருதீவின் பஞ்சீகரணங்களாம். இந்தப்பஞ்சீகரண பூதங்களிலு ண்டானது பிர்ம்மாண்டம்.

இந்தப் பிர்ம்மாண்டத்தினில் காலாக்கினிமுதலான புவநங்களும்; இப்புவநங்களில்; அண்டச, சுவேதச, உற் பீஜ, சராயுஜ, மாந்திரிகமென்னும் ஐந்துயோநிபேதங்க ளும்; அவற்றில், (கூ) லக்ஷமநுஷசாதிகளும், (ம்ச) லக்ஷ ந்தேவசாதிகளும், (ம) லக்ஷம் ஜலசரங்களும், (ம) லக்ஷ ம்வெகுபாதசெந்துக்களும்(மக)லக்ஷம் சர்ப்பசாதிகளும் (ம) லக்ஷம் கேசரசாதிகளும் (உம) லக்ஷம் தாபரசாதிக ளுமான(அம்ச)லக்ஷமென்னும் ஸகலஜீவராசிகளுமுதி த்தன. இவற்றில் பிருதீவியாதிபூதங்கள் பஞ்சீகரித்தி ருக்கும். அவற்றில் அஸ்திசர்ம்மாதி பஞ்சகங்களே பிரு தீவு. மூத்திர ரத்தாதி பஞ்சிகங்களே அப்பு. க்ஷுதிதா காதி பஞ்சகங்களே அக்கினி. தாவந சலனுதிபஞ்சகங்க ளே வாயு. காமக்குரோதாதி பஞ்சகங்களே ஆகாசமாம் இது ஸ்தூலபஞ்சவிம்சதிகள்.

இப்படிச்சொன்ன தத்துவம்புரியஷ்டகமான சூ க்ஷமசரீரம்பூசந்மமானஸ்தூலசரீரங்களுள்ளே தத்துவ ங்களே சமஸ்தசீவருக்கும் போகாசிரயங்களாகிய சாத நமென்பது. சூக்ஷமசரீரங்களே, வெவ்வேறு ஒவ்வொ ருவருடைய சீவபோகங்களுக்குச் சாதநங்களாகிய அ சாதாரணங்களென்பதாம். ஸ்தூலதேகங்களே அந்நி யோந்நிய சீவருக்குச் சாதாரண அசாதாரணமாம்.

## பிர்ம்மாண்டபுவநாதிகளின்லக்ஷணம்.

அந்தப்பிர்ம்மாண்ட புவநாதிகளின் லக்ஷணமெ ப்படியெனின் பஞ்சீகரித்த மூலப்பிருதீ விதத்துவத்தி ல் தசாங்கத்துள் ஏகதேசத்தில் ஒருகோடியோசனைப் பிரமாணக்கதுமையுள்ள சுவர்ணமயமான கப்பரத்தின் ஒருஅற்புதயோசனை ஸதூலமான நூறுகோடியோசனை ப்பிரமாணவிசால உந்நதமான உள்வலயமுள்ள ஆகார மானதே பிர்ம்மாண்டமாம்.



அந்தப்பிர்ம்மாண்டத்தையே பிரமன் மத்தியத்தி னில் சமானமாகக் கொப்பனையாகாரத்திருந்து இரண் டுபொதியாக்கித் தானதனுட்புகுந்து அந்த இரண்டுபொ தியையுங் கரண்டகமூடுவதுபோலப் பொருத்திமுன் போலத் திடமாகச்சேர்த்து அதில் அதிவிசித்திரமான புவநரசனைசெய்ததனுல் பிரம்மாண்டமாக்கி அதன் அ டிப்பக்கத்தின் வலயத்துள் கநகம்பிரமான வாரிபூரித மாக்கி, அதனடுவில் விச்சுவகர்ம்மன் நிர்ம்மித்ததிவ்வி யசிங்காதநத்தில் ஜலஸ்தம்பகத்திருந்து சோபையாய் ஆதாரசத்தியான இரணியமயசரீரத்தோடு ஏகவத்திர திரிலோசநங்களின் வர அபயகலஸோற்பல வாம தக்ஷ ண கரசதுஷ்டயத்தோடு லாவண்ணியமாய்ச் சிவத்தி யாநத்தோடு நிச்சலாத்மனுக விருப்பன்.

அந்தச்சத்தியின் மஸ்தகத்தின்மேற் சூட்டின்பொ ற்குமனைபோல தசகோடியோசனையகலஞ் சுவர்ணமய கூர்ம்மமிருக்கும். அந்தக்கூர்ம்மமுதுகின்மேல் இந்திரா தியஷ்டதிக்கில் கிரமத்தில், ஐராவதம், புண்டரீகம், வா மநம், குமுதம், அஞ்சநம், புஷ்பதந்தம், சாருவபூமம், சு ப்பிரதீபமென்னும் அஷ்டதிக்கஜங்கள்; அப்பிரமை, கபி லை, பிங்களை, அநுபமை, தாமிரபருணி, சுதந்தி, அஞ்ச னை, அஞ்சநாவதியென்னுந் தங்கள் ஸ்திரிகளுடனேகூ டிப் பூமியைச்சுமந்திருக்கும். அந்தஸ்தம்பாகாரத்திலி ருந்து குரல்வளையைவளைத்துத் தங்கள் படங்களினு லே பூமியைமுறையே இந்திராதிதிக்குகளில்நின்றும் வா

சுகி, அநந்தன், தக்ஷன், சங்கபாலன், குளிகன், பத்மன், மகாபத்மன், கார்க்கோடகன் என்னும் அஷ்டநாகங்களு ம்சுமக்கும். *

பின்னும் அந்தக்கூர்ம்மத்தின் நடுமுதுகில் நிருத் திய பரம ஐஸ்வரியசம்பந்நனுகிய சோபையான மஹா சேஷன் (ரூஉத) யோசனேஅகலமுள்ள படசகஸ்திரத் தினுல் சுமந்திருப்பன். அந்தக்கச்சபம், பணி, மஹாசே ஷனென்பவர்கள் ஒருவரொருவ ராகார சமயத்துள் மா ற்றிப் பூமியைச்சுமந்திருப்பார்கள். இப்படிக் கச்சப, மத்த க, பணி, மகாசேஷன் படங்களின்மேல் ஒருகோடி யோ சனேப்பிரமாணம் கதுமையுள்ள, அதிவிசாலமான சர் வ்வாதாரமாகும் சுவர்ணமய்பூமி கண்கொளச்சோபை யாயிருக்கும்.

அதன்பின் இந்திராதி தசதிக்குகளில் முறையே கோபிச்ச, பிஸ்ஸர, அநந்தேச்சுவர, பிங்கல, கால, கு ரோதச, சல, தபல, தநத, சங்காரமென்னும் தசலோகே ச்சுவர புவநமத்தியில் ஏகாதசபுவநமாய்க், காலாக்கிரு த்திரபுவநம், ஐந்துகோடி விஸ்தீர்ணமாகவிருக்கும்.

## காலாக்கிநிருத்திரலக்ஷணம்

அதன் மத்தியிலிருக்கும் அரண்மனே இரண்டுகோ டியோசனே அகலமும், ஒருகோடியோசனே உந்நதமுமா யிருக்கும். அதில் நாநாரத்திநகசிதமான திவ்வியசிங்காத நத்தில், அலங்கிருதனுன காலாக்கிநிருத்திரன் மகாதே ஜோமயனுகி ரத்தவர்ணமாய் ஒருகோடியோசனே தீர்க்க சரீரத்தனுகிக் கராளவதந சதுஷ்டயமும், தீர்க்கரோம ங்களும், துவாதச அக்ஷங்களும், கட்க, கட்டுவாங்க, பாச

* மகாபத்மனுக்குக் குரோடனென்றும், குளிகனுக்குக் கம்பளனென்றும் பெயருண்டு.



பாண, வரதங்களுள்ள தக்ஷணபஞ்ச அஸ்தங்களும், சூல, அங்குச, தண்ட, தநு, அபயங்களுள்ள வாமபஞ்ச அஸ்தங்களுஞ், சோபையாயிருக்கத் தான் ஊர்த்தமுக மாயின் பிராணிகள் சங்காரமாமென்று அதோமுகனுகி த், தன்னேயொத்த கோடி உருத்திரர்கள் சூழஇருப்பன்.

அவன் சுவாலேதசகோடியோசநாந்தம் ஆவரித்து க்கொண்டிருக்கும். அவன் தூம்பிரம் ஐந்துகோடியோ சனேவீசும்.

## நரகலோகஸ்திதி.

அதன்மேல் இயமராஜன் ஆக்கினேநடத்தும் முப் பத்துமூன்று பட்டணங்கள் ஒவ்வொன்று லக்ஷம்யோ சனே விஸ்தீர்ணமுள்ளதாகவும் ஒன்றுக்கொன்று ஒன் பதுலக்ஷம்யோசனே அந்தரமுள்ளதாகவும் பாபிகளே வேதனேசெய்வதற்கு ஏற்படுத்திய நரகலோகமிருக்கும்.

அம்முக்கியநரகம் முப்பத்திரண்டும், மகாநரகம் நா ன்கும், இராஜநரகம் இருபத்தெட்டுமென இரண்டுபிரி வினவாம்.

## மகாநரகங்கள்.

க-வது-நரகம்—ரௌரவம், துரவாசதம், ஊஷ்ணசித சந்தாபம், அம்புஜம், மகாம்புஜம், காலசூத்திரமென ஆறும்

உ-வது. மகாநரகம்—சூசிகாமுகம், காலகஷ்கம், சுராதாரி, அம்பரீஷகம், தக்தாங்காரம், மகாதாகம், சந் தாபங்களென ஏழாம்.

ரு-வது. இராஜநரகம்—லக்ஷப்பிரலேப, மாங்குசா த, திருச்சாச, சநிச்சாச, யுக்குமாத்திரி, காலமலி, லோகப் பிரீதிப, சுக்ஷுபாசக, கிலமிசங்குலமென ஒன்பதாம்.

ச-வது. இராஜராஜேச்சுவரநரகம்—லோகஸ்தம்ப, வீணள, முத்திர, வைதருணீநதி, தாமிச்சிர, அந்தாமிஸ்ஙி

ர, கும்பிபாக, சாரௌரவ, மகாபாதாநுக, விசித்திரமெனப் பத்தாம்.

## இராஜநரகங்கள்.

க - வது. கோரநரகமானது—ரௌரவ, மகாரௌரவ, தம, சீத, ஊஷ்ணமென்னும் (ரு) மந்திரி நரகங்களுடன்கூடியிருக்கும்.

உ - வது. அசகோரநரகமானது—சுதமன், சுதீக்ஷணன், பத்மன், சஞ்சவன், சதாமகாசன் என்னும் (ரு) மந்திரி நரகங்களுடன் கூடியிருக்கும்.

ங - வது. அதிகோரநரகமானது—லோம, சுபீம, கடங்கட, தீவிரவேக, கராளமென்னும் (ரு) மந்திரி நரகங்களுடன் கூடியிருக்கும்.

ச - வது. அகோரநரகமானது—விகராள, பிகம்ப, பத்ம, சுவத்திரி, காலனென்னும் (ரு) மந்திரி நரகங்களுடன் கூடியிருக்கும்.

ரு - வது. குரோதநரகமானது — பிரமார்த்தன, சூசிமுக, அசுமேகிச, பீடந, பாதகமென்னும் (ரு) மந்திரி நரகங்களுடன் கூடியிருக்கும்.

சு - வது. தரளதாரநரகமானது—கும்பிபாகம், சுபாகம், பிரமுகம், தாருணம், அங்கராகமென்னும் (ரு) மந்திரிநரகங்களுடன் கூடியிருக்கும்.

எ - வது. பயாநகநரகமானது—தகந, அஸ்திரிஹத்தீக்ஷண, மத்துண்ட, சகுநிபல, ஹௌதமகாசப்பியவரதகமென்னும் (ரு) மந்திரிநரகங்களுடன் கூடியிருக்கும்.

அ - வது. காலாத்திரநரகமானது—கிரிதுரகி, மாங்கிசதக்த, செந்துலேப, திரவத்திரிபு, உச்சாசமென்னும் (ரு) மந்திரிநரகங்களுடன் கூடியிருக்கும்.

கூ - வது. பயோத்தகாநரகமானது—நிருச்சாச, சுதீர்க்க, உச்சாலமலி, அரிஷ்டி, சுமஹான மென்னும் (ரு) மந்திரிநரகங்களுடன் கூடியிருக்கும்.



க0 - வது. சண்டநரகமானது—தாந, பிரவாக, ரிஷச, சுப்பிரவாக, சேஷமென்னும் (ரு) மந்திரிநரகங்களுடன்கூடியிருக்கும்.

கக - வது. மகாசண்டநரகமானது—சாகல, சலல, சிங்ச, கேசாநந, வியாக்கிரமென்னும் (ரு) மந்திரிநரகங்களுடன்கூடியிருக்கும்.

கஉ - வது. சண்டகோலாகலநரகமானது—சுநக, சூகர, அஜ, மஹிஷ, அரிபக, மென்னும் (ரு) மந்திரிநரகங்களுடன் கூடியிருக்கும்.

கங - வது. பிரசண்டநரகமானது—உக்கிர, விருகாசய, கிரக, கும்பி, நக்கிரமென்னும் (ரு) மந்திரிநரகங்களுடன்கூடியிருக்கும்.

கச - வது. பத்மநரகமானது—சர்ப்ப, கூர்ம்ம, வாயச, பவணை, உலூக மென்னும் (ரு) மந்திரிநரகங்களுடன் கூடியிருக்கும்.

கரு - வது. மகாபத்மநரகமானது—ஜலூக, மகாவியாக்கிர, கர்க்கட, மர்க்கட, கண்டகமென்னும் (ரு) மந்திரிநரகங்களுடன் கூடியிருக்கும்.

கசு - வது. விரசீவிமநரகமானது—பூதிவத்திர, ரத்தபூதி, மிருத்திகை, கநா, தூமமென்னும் (ரு) மந்திரி நரகங்களுடன் கூடியிருக்கும்.

கஎ - வது. வீமவீஷணநரகமானது— துஷாக்கிகி, கிருமிசங்கம், அமேத்தியம், அப்பிரதிருஷ்டி, மூத்திரமென்னும் (ரு) மந்திரிநரகங்களுடன் கூடியிருக்கும்.

கஅ - வது. காலாந்தகராளநரகமானது—மலபக்ஷண, ஆத்மபக்ஷண, ருத்திராம்புபக்ஷண, சர்ப்பபக்ஷண, சுதாரணமென (ரு) மந்திரி நரகங்களுடன் கூடியிருக்கும்.

ககூ - வது. விகராளநரகமானது—சங்கட, விசங்கட, சுவிசால, கட, விகடமென்னும் (ரு) மந்திரிநரகங்களுடன்கூடியிருக்கும்.

உ௰-வது. வச்சிரநரகமானது—அம்பரிசிக, தட, சத்தலோகாசயிந, வைத்திரணீநதி, காஷ்டமென்னும் (ரு) மந்திரிநரகங்களுடன் கூடியிருக்கும்.

உக-வது. திரிகோணநரகமானது—சீதளதர, அஸ்தியந்திர, அஸ்திகம்பர்வ்வீபீடந-திலயந்திர, இக்ஷுயந்திரமென்னும் (ரு) மந்திரிநரகங்களுடன் கூடியிருக்கும்.

உஉ-வது. பஞ்சகோணநரகமானது — தாலசஞ்சூர்ண, மகாசூர்ண, கூட்டவிஷப்பிரமத்திந, தக்தலோகாய, தக்ததைலமயமென்னும் (ரு) மந்திரி நரகங்களுடன் கூடியிருக்கும்.

உங-வது. சுதீர்க்கநரகமானது—பர்வ்வதலு, இக்குமுபர்வ்வத, சூரிதார, ருத்திரகூப, விஷ்டிகூபமென்னும் (ரு) மந்திரி நரகங்களுடன் கூடியிருக்கும்.

உச-வது. வர்த்துளநரகமானது—க்ஷுரகூப, அந்தகூப, சாதநாமுசல, உலூகலயந்திர, சிலாசகடமென்னும் (ரு) மந்திரி நரகங்களுடன் கூடியிருக்கும்.

உரு-வது. சப்தபௌமநரகமானது—லாங்குல, தாலபத்திர, அசிகாஹந, சரமந்திர, மோகந மென்னும் (ரு) மந்திரி நரகங்களுடன் கூடியிருக்கும்.

உசு-வது. அஷ்டபௌமநரகமானது— வஸ்திகம்ப, தக்தசூலமய, தக்தகுண்ட, வெகுதுக்க, மகாதுக்கமென்னும் (ரு) மந்திரி நரகங்களுடன் கூடியிருக்கும்.

உஎ-வது. திப்திநரகமானது—சாலமல, சமல, ஆலகால, விரூப சுவரூபமென்னும் (ரு) மந்திரிநரகங்களுடன் கூடியிருக்கும்.

உஅ-வது. மாயாக்கியநரகமானது—இயமானுக, ஏகபாத, விபத்தீவர, விபசி, ரந்திரமென்னும் (ரு) மந்திரிநரகங்களுடன் கூடியிருக்கும்.



## பாபலக்ஷணம்.

இப்படிச்சொன்ன இராஜநரகங்கள் இருபத்தெட்டும், நூற்றுநாற்பது மந்திரிநரகங்களும், ஒவ்வொன்றற்கும் ஒவ்வொருகோடியாக இருபத்தெட்டுக்கோடி நாயகநரகங்களும், அநேகபரிவார நரகங்களுங்கூடித் தீவிரவேதநாரூபங்களாக இருக்குமென்பது நிச்சயமாம்.

இத்தன்மையான நரகங்களுக்குப் பிராப்திஏது பூதங்களான பாபசுவரூப மெப்படியெனின்; பிர்ம்மஹத்தியென்னும் சிரசும், பயங்கரமென்னும் வதநமும், சுவர்ணசிநேகமென்னும் புஜங்களும், சுராபாந மென்னும் இருதயமும், குருதல்பகமநமென்னும் சகநமும், பாதகமென்னும் அங்கப்பிரத்தியாங்கங்களும், உபபாதகமென்னு முரோமமும், கள்ளமென்னும் கருநிறவுடலும், குரூரமென்னுங் கண்களும், பொய்யென்னு மீசையும், கொலையென்னுங் கரங்களுமாகி ஜநங்களின் வாமகுக்ஷியிலிருந்து, அவரவருடைய மநவாக்குக் காயங்களை வசமாக்கிக்கொண்டு, மகாபஞ்சபாதகமென்றும், அதிபாதகமென்றும், பிரசாங்கிகபாதகமென்றும், பாதகமென்றும் உபபாதகமென்றும், சாதிப்பிரம்சகர மென்றும், சங்கரீகரணமென்றும், அபாத்திரீ கரணமென்றும், மலிநீகரணமென்றும் பரீகிகரணமென்றும் தசவிதமாகியிருக்கும்.

அவற்றுள் க-வது-மகாபஞ்சபாதகம்—பிரமஹத்தி, சுராபாநம், சுவர்ணசிநேகம், குருதல்பகமநம், இவர்களைச் சிநேகித்தலென்பனவாம்.

உ வது. அதிபாதகம்—மாதுரு, புத்திரி, மருமகள் அக்கிரசை, இவர்களின்கமநம் பிர்ம்ம, விஷ்ணுவாதிமூர்த்திஸ்தாநபதந மென்பனவாம்.

ங-வது. பிரசாங்கிகபாதகம்—சதி, சுதி, கர்ப்பிணி, பந்துஇவர்களைவதைத்தல், தேவ, பிராமண, தபசிகளின்

சொத்தையபகரித்தல், அத்தை, ராஜஸ்திரீகமநமென்பனவாம்.

சு-வது. பாதகம்—மாதா,சகோதரி,தமயன் மனைவி, கமநம், சமயபிரஷ்டமாதல்; அபக்ஷணமென்பனவாம்.

ரு-வது. உபபாதகம்.கோஹத்தி,மித்திரன்ஸ்திரி, தன்மனையில் வந்தவன்பாரி கமநம், பாஷாண்டசம்பந்தம், ஈநனுக்குயாகஞ் செய்வித்தல், மாதாபிதாகுருபுத்திரர்களை ஆதரியாமை என்பனவாம்.

சூ-வது. சாதிப்பிரம்ஸகரம்—கோள்சொல்லல்,குருவேததேவநிந்தைசெய்தல்,வேதாத்தியந,யாகம்மாதா, பிதா,சகோதர, புத்திர, பத்திநித்தியாகம், பாத்திராபாத்திரமறியாது தாநப்பிரதிக்கிரஞ்செய்தல், அபிசாரக்கிரியை,புருஷமைதுநம், மிருகமைதுநம் என்பனவாம்.

எ-வது. சங்கரிகரணம்—மிருகாதிகொலைசெய்தல் ஊன்விற்றல், பிரேததுர்க்கந்தம்படல் என்பனவாம்.

அ-வது. அபாத்திரீகரணம்—கிராமாரணிய,பசு,பக்ஷி, ஹிம்சைசெய்தல்,நிந்திக்கப்பட்டவன் பொருள் வாங்குதல், இழிந்தவியாபாரஞ்செய்தல், இழிந்தவனிடத்தில் சேவித்தல், பொய்சொல்லல் என்பனவாம்.

கூ-வது. மலிநீகரணம்—கிருமியாதிகளைக்கொல்லல், அசாஸ்திரவிதிசொல்லல், சூத்திரன்வேதாத்தியநஞ்செய்தல் என்பனவாம்.

க௦-வது. பரீதீகரணம்—வந தடாகாதிகளிலிருந்த பக்ஷிமிருகங்களைவலைகட்டிக்கொல்லல்,தடாககூபங்களைத் தூர்த்தலென்பனவாம். இவைகளே முக்கியபாதகங்களாம். இன்னமும் அநேகபாதகங்களுமுண்டு, அவைகளுக்கு விரகீரணமென்றுபெயராம்.

மேற்கூறிய பாதகங்களைச் செய்தவர்கள்,இகத்தில் மூன்றுவருஷம், மூன்றுமாதம், மூன்றுபக்ஷம், மூன்று



திநங்களுக்குள் மகாதுக்கத்தையடைந்து மறுமையில் நரகவாதனையை அடைவார்களென்றுநிச்சயிக்கவேண்டும்

## மரணக்குறி

மேலும் பிறந்தவர்களிறப்பது நிச்சயம். மரணகுறியெப்படியெனின், துருவன், அருந்ததி,சந்திரசாயா மகாபதங்கள், காணவிடின் ஒருவருஷத்திலும்; ரஸ்மிரகிதனை சூரியனையும், ரஸ்மியுக்தனை பாவகனையுங்கண்டால் (கக) திங்களிலும்; சொப்பநத்தில், அல்லது பிரத்தியக்ஷத்தில் சுவர்ண, ரசிதம்போலவாந்திசெயக்காணின் (க௦) திங்களிலும்; கநவில், பிசாச, பூத, கந்தருவநகரம், ருக்மதூம்பிரவர்ண சோதியைக் காணின் (கூ) திங்களுள்ளும்; ஒருநாள் தன்சரீரம்,அதிஸ்தூல அதிசூக்ஷ்மமாகவும், அதிகிருஷ்ணவர்ணமாகவும் காணின் (அ) மாதத்திலும்; தன்னடிச்சுவடு மணலில்பாதியாகக்காணின் (எ) மாதத்திலும்; காக்கை, கூகை, கபோத பக்ஷி, மஸ்தகத்தைத்தொடின் (சூ) மாதத்திலும்; மணல்,மழை தன்மேலுதிரவும், தன்னிழலில் கரசரணதிகள் தோன்றாவிடினும் (ரு)(சு) மதியிலும்; தக்ஷணத்தில் மழைமேகமில்லாமல் மின்னல்காணினும், ரவிமுன்வாயுமிழ் ஜலத்தில் இந்திரசாபங்காணினும் (ங) மதியிலும்; நிர்ம்மலதர்ப்பணத்தில் தனக்காயினும், அந்நியனுக்காயினும், தன்சிரநிழல் தோன்றாதாயின் ஒருமதியிலும், தன்தேகம், சுகந்தமாகவாயினுந் துர்க்கந்தமாகவாயினும், நிம்பகந்தமாகவாயினும் வீசின் (கரு) திநத்திலும்; மார்புலர்ந்து சதாநாறினும் (க௦) திநத்திலும்; சொப்பநத்தில், தக்ஷணமுகமாகக் கரடி பிலத்திலிழுத்துக்கொண்டுபோகக் கண்டாலும்,கறுப்புவஸ்திர முடுத்துச் சதி சமேதனாகத் தக்ஷணத்தில் போகக்கண்டாலும், திகம்பரனாகப் போகக்கண்டாலும், கிருஷ்ணவர்ண ரத்த

வர்ண சந்திரனைக்கண்டாலும், இரவில் ரத்தவர்ண இந்திரசாபங்கண்டாலும், சூரியசந்திர மண்டலங்களில் சித்திரவர்ணங் கண்டாலும், பகலில் அநேகநக்ஷத்திரங்கண்டாலும், கனவில்மயானத்தில் பந்துவர்க்கங்களைக்காணினும், எண்ணெயிட்டு ஸ்நாநஞ்செய்யப், பல்விழக்கண்டாலும், ஒட்டகம், கார்த்தபம், ரதாரூடனுகக்கண்டாலும், முத்தகேசனுகிப் பாடியாடித் தக்ஷணத்திற்போகக்கண்டாலும், அக்கினிக்குழியில் விழக்கண்டாலும் சீக்கிரத்திலும் மரணம் வருமென்றறிவதாகும்.

யாவரும் இப்படிமரணசூசனையைச் சூதசங்கிதை முதலிய நூல்களா லறிந்துகொண்டு பாபசோகாதிகளை விட்டுத், திடசித்தராகி யிருக்கவேண்டும். மேலும் தேகவியோககாலத்தில் மநதில் எந்தப்பாவனையைக் கொண்டிருக்கிருனே அந்தப்பாவனை ரூபாதிகந் தப்பாதென்றறியவேண்டும்.

ஆதலால் யாவரும் அதற்காக புண்ணியக்ஷேத்திரயாத்திரை செய்யவேண்டும். அப்புண்ணியக்ஷேத்திரம் எவையெனின், வாரணாசி, ஸ்ரீசைலம், பொன்னம்பலம், மதுரை, அருணசலம், சிகாளத்தி, காஞ்சீபுரம் ஆரூர் முதலியனவாம். இவைகளைத்தரிசிக்கவும், அல்லது தன் ஆச்சிரமங்களி லிருந்து, சிரசே ஸ்ரீசைலம் லலாடமே கேதாரம், புருவமத்தியமேகாசி, குய்யமே குருக்ஷேத்திரம், இருதயமே பிரயாகையென்னும் பாவனுயுக்தனுகி, ருத்திராக்ஷதாரணுதி நிஷ்டாபரரின் பாதோதக பிரசாதங் கொண்டு சிவார்ச்சனைமந்திரசெப சிவத்தியாந சிவஞானாதிகளினுல் நரகவாதைகளைச்செயித்துப்பரபோகமோக்ஷங்களைப் பெறவேண்டுமென்பதே இதோபதேசமாம்.

முற்கூறிய நரகலோகத்துக்கப்பால் (௩௰௲) யோசனைக்குமேல் நவலக்ஷயோசனைப் பிரமாணபூமியிருக்கும் அது நாலனை லக்ஷயோசனை சுவர்ணமய மேற்கதுமையும், நாலனைலக்ஷயோசனைக் கீழ்க்கதுமையுமுள்ளலோகமய, மிருண்மயமாகிய லோகமிருக்கும்.



அதில் முற்கூறிய நரகங்களுக்கு அதிபதியான இயமராஜனுக்கதிபதியாகிய கூஷ்மாண்டனென்னும் ருத்திரன் மிகுந்த பீகாகாரனுகி காலாநலப்பிரகாசத்தோடும், சாப, பாண, பலகை, கட்க கரசதுஷ்டயத்தோடும், தன்னையொத்தபூதகணங்களோடுங் கூடியிருப்பன்.

அதன்மேல் உத்தரோத்தரமாகிப் பிரத்தியேகமாய் (௨௰௲) யோசனைவிசாலவுந்நதமுள்ள, மகாதல, ரசாதல, தராதல, சுதல, நிதல, பாதாளமென்னும் உலகம் முறையே, சுவர்ண, ரசித, தாமிர, கஞ்ச, லோக, வாலுக, மிருண்மயமாகிப், பிரகார, கோபுர, விசித்திர, ரசனையுள்ளநகரங்கள் சுவர்க்கத்தை யொத்திருக்கும். இவைகளுக்குப் பல, அதிபல, பலவாந, பலவிக்கிரம, பலேச, பலேசாலி, பலாத்தியமென்பவைகள் கர்த்தாவாகியிருக்கும். அவைகள்ஒவ்வொன்றும் மும்மூன்றுகண்டங்களாகும். அவைகளில் சங்குகர்ணன், பிரகலாதன், சிசுபாலன், வக்கிரதந்தன், இரணியாக்ஷன், பிரகோபன், பலீகன் என்னுந் தயித்தியர்களும், குடில, வாசுகி, கம்பள, கார்க்கோடகனென்னும் புஜங்கர்களும், விகடலோகிதாக்ஷன், விகடாநநன், கராளவீமன், நிகரார்த்தன், பிங்கலன் என்னும ராக்ஷசர்களும் தங்கள் தங்கள் ஓலக்கங்களில் இருந்து, சிவ, சம்பு, சங்கர, நீலகண்ட, உமாபதி, சர்வ்வேச்சுவர, நீலகந்தர நாமமுள்ள சிவலிங்கங்களை ஆகமவிதிப்படி மிகுந்தபக்தியோடு பூசைசெய்வார்கள்.

பின்னும் அதன்மேல் பூப்புருஷ்டாந்தமாக (அஅ) லக்ஷ மதிகமான, இரண்டுகோடி யோசனைப் பிரமாண த்திலே, சத்தபாதாளங்களுக்கு, அதிபதியான, ஆடகே

ச்சுவரனென்னும் ருத்திரன், ஆயிரம்யோசனை விஸ்தீர்ணமான மணிகசித திவ்விய சிங்காதநத்தின்மேல், கோடிகந்தர்ப்ப லாவணியத்தோடு பொருந்தி சமஸ்த அசுரர்களும் சேவிக்க இருப்பன்.

அந்தக்காலாக்கினி ருத்திரன்முதல் ஆடகேச்சுவராந்தமான சமஸ்தபாதாளங்களில் அந்தந்தப் புவநங்களில்வாசமானவர்களின் காயகாந் திரத்திநாபரணங்களின்பிரகாசங்களால் சகலபொருள்களும் விளங்குவதல்லது சந்திரார்க்கரபேக்ஷையென்றும் வேண்டாம்.

இப்படிப்பார்க்கப் பிர்ம்மாண்டத்தடியின் கப்பரவலயம் காலாக்கினிருத்திர புவநமாம். அது ஒருகோடியோசனைப்பிரமாணமும், அதன்சுவாலை தசகோடியோசனையும், அதன் தூம்பிரம் ஐந்துகோடியோசனையுமாம். அதன்மேல்நாகலோகம் இரண்டுலக்ஷம்யோசனையிலிருப்பது. அதன்மேல் கூஷ்மாண்ட ருத்திரபுவநம் (கூ)லக்ஷத்து (கூஉத) யோசனை. அதன்மேல் சத்தபாதாளங்களுங்கூட (எஉத) யோசனையாம். அதன்மேல் ஆடகேச்சுவர ருத்திரபுவநம் பூப்புருஷ்டாந்தமாகி இரண்டுகோடியே (அஅ) லக்ஷயோசனை. அதன்மேல் முன்சொன்ன பூமியொருகோடி யோசனையிலிருந்து பிர்ம்மாண்டத்தின் அர்த்தகடாதி பூமியாந்தமாகிப் பஞ்சாசதகோடியோசனை உந்நதமென்றுநிர்ண யஞ்செய்யவேண்டும்.

விவேகசிந்தாமணியில்

மூன்றாவது,

நாகலோகஸ்திதியுரைத்த பரிச்சேதம்

முற்றிற்று.

---

உ

சிவமயம்.

ஸ்ரீகுருப்யோநமஃ

## விவேகசிந்தாமணியில்,

### நான்காவது,

### பூலோகஸ்திதியுரைத்த பரிச்சேதம்.

முன்பரிச்சேதத்தில் நாகலோகஸ்திதியை யாவருக்கும் விளங்கச்சொன்னேன்; இந்தப்பரிச்சேதத்தில் பூலோகவிஸ்தீர்ணதிரசனைகளைத்தெரியச்சொல்லுவேன்.

பூர்வோக்த ஆடகேச்சுவர ருத்திரபுவநத்தின்மேல் ஒருகோடியோசனைக் கனமையுள்ள சம்புத்தீவு முதலான சப்ததீவுகளும், சப்தசமுத்திரங்களும், சப்தகுலபர்வ்வதங்களும், அநேககிரி, நதிநதாதிகளால் விசித்திரசனையுள்ள பூலோகம் அதிரம்மியமாகவிருக்கும், இதற்கு வெவ்வேறான அநேககர்த்தர்களுண்டு.

### மநுக்களின்சந்ததிகள்.

சுவயம்பு, சுவாரோசிஷ, உத்தம, தாமச, ரைவத, சாக்ஷுஷ, வைவசுத, சூரியசாவர்ணிய, தக்ஷசாவர்ணிய, பிர்ம்மசாவர்ணிய, தர்ம்மசாவர்ணிய, ருத்திரசாவர்ணிய, தேவசாவர்ணிய, இந்திரசாவர்ணிய ரெனப்பதினான்கு மநுக்களுண்டு.

அவர்களுள் சுவயம்புமநுவுக்கு, உத்தானபாதன், பிரியவிரதனென இரண்டுபிள்ளைகள் பிறந்தனர். அவர்களுள் உத்தானபாதனுக்குத் துருவனென்று ஒருபிள்ளைபிறந்தான். அவன் நக்ஷத்திரமண்டலத்திற் காதாரத்தினில் அகில ஐச்சுவரிய சம்பந்நனாகிப் பிற்சொல்லும் புவலோகத்தின் ஆக்கிரசித்தனாகி யிருப்பன்.

பிரியவிரதனுக்கு அக்கினியுக்தன், மேதாதி,ஓபுஷ்டீ, மந்த ஜோதிஷ்டீ, மத்துதி, சந்தபல்வியன், சர்வ்வனென ஏழுபிள்ளைகள் பிறந்தனர். பிரியவிரதன் ஒவ்வொருவருக்குஞ்சம்புத்தீபமுதல் சப்ததீபங்களையுங்கொடுத்தான்.

இவருள் அக்கினியுக்தனுக்கு, நாபி, கிம்புருஷன்,அரி, இளாவிரதன், ரம்மியகன், ஜர்ணவதன்,உத்தரகுரு,பத்திராசு,சுவேதகேதுமாலியென ஒன்பதுபிள்ளைகள் பிறந்தனர்.இவர்களுக்கு அக்கினியுக்தன் சம்புத்தீபத்தை நவகண்டமாக்கிஒவ்வொருவருக்கும்ஒவ்வொன்ருகக்கொடுத்தான். இவர்கள்பெயரோ அக்கண்டங்களுக்காயின.

நாபிக்கு விரஷபன் பிறந்தான் விரஷபனுக்குப் பரதன்பிறந்தான், இப்பரதனல் ஆளப்பட்ட இக்கண்டத்துக்குப் பரதகண்டமெனப் பெயர்வழங்குகிறது.

இந்தப்பிரபஞ்சம் பூர்வ்வோக்த பூமியின்நடுவே வர்த்துளாகாரமாய் ஒருலக்ஷம்யோசனை விசாலமான சித்திரவர்ண பூமியுள்ள சம்புத்தீபம் பூகாந்தைநாபி மண்டலம்போல அதிசோபையாக விருக்கும்.

## மகாமேருலக்ஷணம்.

இப்பூமத்தியில் சுவர்ணமயமான இமத்பர்வ்வதம் பூகாந்தை இருதய கமலகர்ணிகை போன்றுவர்த்துளாகாரமாய் (ய௰த) யோசனை பூமியுட்புதைந்து (அ௰சுத) யோசனை உந்நதமும் லக்ஷயோசனைச் சுற்றளவும், மூலத்தில்(ய௰த)யோசனைப்பரப்பும், அக்கிரத்தில்(௬உத)யோசனை விஸ்தீர்ணமுமுள்ளதாகி யிருக்கும்.

அம்மேருவின் அக்கிரத்தில் பிர்ம்மாவுக்கு (சய௰த) யோசனை அகலமும் ரத்திநப்பிராகாரமும் முத்துச்சிகரமுமுள்ள. சகலதேவர்களுக்கும் ஆசிரயமாகிய அலங்கிருதமான சர்வ்வபோக சிரேஷ்டமான மாநாவதியென்னும் பட்டணமிருக்கும்.



அம்மாநாவதியின் பச்சிமத்தில் விஷ்ணுவுக்கு நிவாசமான ரஞ்சிதமுள்ள வெள்ளிமலையிருக்கும்.

மாநாவதியின் தக்ஷணத்தில் பிதாமகனுக்குச் சுயாதீநமான சுவர்ணமய சிகரியிருக்கும்.

அதற்கீசாநத்தில் சர்வ்வேச்சுவரனுக்குஸ்திரமான ரத்தினகசித சிங்காரமுள்ள ரத்தின ஜோதிகந்தனென்னும் பெயருள்ள அதன் மத்தியத்தினில்,கந்தாந்தி, மகாகாள, கணேச்சுவராதி ரம்மியாச்சிரமங்களநேகமுண்டு. அதில்பிர்ம்மேந்திரர் உபேந்திரர்கள் முக்கியதேவர்களால் சேவை செய்யப்பட்டிருப்பர். மேலும் அந்தப்பட்டணத்துக்கு அகழிகளாக, ரஞ்சிதை, அழகநந்தை,சாக்ஷபத்தி,நூகு என்னு நான்கு நதிகளிருக்கும்.பின்னும்மேருவின் ஒரு அந்தரத்தில் நவரத்திநஜோதியுள்ள விருத்தாகாரமான கங்கணத்திரய முண்டு.

அவை ஒவ்வொன்றும் (௬த) யோசனை விஸ்தீர்ணமும், கதுமையும் (உ௰த) யோசனை ஒன்றுக்கொன்று அந்தரமுமுள்ளதா யிருக்கும். அவற்றுள் ஊர்த்தகங்கணத்தின் பூர்வ்வாதி அஷ்டதிக்குகளில் பொற்கோடுகளெட்டுண்டு. முறையே அவை யொவ்வொன்றிலும் (சுத) யோசனை விஸ்தீர்ணமுள்ள எட்டுப்பட்டணங்களுண்டு, எவையெனின்.

## திக்பாலகர்பட்டணங்கள்.

இந்திரனுக்கு நீலரத்திநக்கொம்மையோடு கூடிய சுவர்ணமயக்கோட்டையுள்ள அமராவதியும்; அக்கினிக்கு வச்சிரரத்திநக்கொம்மையுள்ள கமலலோஹிதவர்ணக்கோட்டையோடு கூடிய தேஜோவதியும்; இயமனுக்குப்புஷ்பராகக் கொம்மையோடுகூடிய அஞ்சநவர்ணக்கோட்டையுள்ள சமநாவதியும்; நிருதிக்கு, முத்துக்

கொம்மையோடு கூடிய கிருஷ்ணலோக வர்ணக்கோட்டையுள்ள ரஞ்சிதமான * ரக்ஷாவதியும்; வருணனுக்கு மகாசோபையுள்ளநாநாரத்திநக்கோட்டையோடு கூடிய சுத்தாகாசவர்ணமுள்ள சுத்தாவதியும்; வாயுவிற்குவைடூயக்கொம்மையுள்ள பச்சைநிறக்கோட்டையோடு கூடிய சோபையயான கந்தாவதியும்; குபேரனுக்கு முத்துக்கொம்மையுள்ள நாநாரத்தினக்கோட்டையோடு கூடியலாவண்ணியமான *0 அளகையும்; ஈசானனுக்கு நவரத்திந சிகரங்களோடுகூடிய சுப்பிரவர்ணக்கோட்டையுள்ள அலங்கிருதமான 00 கைலாசமுமாம்.

அமராவதியை வளைந்து சுந்தரகாமாவதி, சாஷ்மனெ, சுமதி, குசுமாவதியென்னும் நான்கு பட்டணங்களுண்டு. அவற்றில் முறையே சுரர், அப்சரர், சித்தர், துவாதசாதித்தர்களிருப்பர். தேஜோவதியைச் சூழ்ந்து தத்துவந்நி ரைதி யென்னு மிரண்டுப்பட்டணங்களுண்டு; அவற்றில் முறையே மய, விச்சுவகர்ம்மாதி தேவசிற்பிகளிருப்பர். சமநாவதியைச்சுற்றி, மாத்திரு, நந்திலோகிதை, குணவதிஎன்னு மூன்றுபட்டணங்களுண்டு; அவற்றில் முறையே, பிதுரர், ருத்திரர், ஏகாதசருத்திரர்களிருப்பர். ரக்ஷாவதியை ஆவரித்துப், பிங்கலை, கிருஷ்ணவதி, சுகாவதி, காந்தாரிஎன்னும் நான்கு பட்டணங்களுண்டு; அவற்றில் முறையே, கர்ம்மதேவதைகள், பிசாசர், ஜலதேவதைகள், மேகாதிபதிகளிருட்பர். சுத்தாவதியைச்சூழ்ந்து, சித்திரசேனை, ஏமசௌக்னை, சித்திரவதி, என்னும் மூன்றுபட்டணங்களுண்டு; அவற்றில் முறையே பூதர், வசுக்கள், வித்தியாதரரிருப்பர். கந்தா

* கிருஷ்ணங்கனை என்றும் பெயருண்டு.

*0 மகோதயமென்றும் பெயர்.

00 யஜோவதியென்றும் பெயர்.



வதியை அடுத்துச் சித்தமென்னும் ஒருநகர மிருக்கும், அதில் கிந்நரரிருப்பர். அளகையைச்சூழ்ந்து, கந்தர்வ்வை சித்தனா, சுபேதை, பிரமதை, சித்திராவதி யென்னுமைந்து பட்டணங்களுண்டு; அவற்றில் முறையே சித்திரதர், சாரதர், தும்புரர், தர்ம்மதேவதைகள், குய்யகர்கள், இருப்பர். கைலாசத்தைச்சூழ்ந்து மூன்று பட்டணங்களுண்டு அவற்றில் முறையேபிர்ம்மா, விஷ்ணு தந்வந்தரிருப்பர்.

## அஷ்டகஜாதிகள்.

அதன்மேல் முறையே சுவேத, ரத்த, கிருஷ்ண, தாம்பிர, சுக்கில, தூம, சீத, சுப்பிரவர்ணமுள்ள, கரி, துருகா, மயிஷ, நர, மகர, இரலை, அய, விரஷப மென்னுந் திக்குப்பாலகர்கள் வாகநங்களும், வைச்சிரம், சத்தி, தண்டம், குந்தம், பாசம், அங்குசம், கட்கம், சூலமென்னும் அவர்களாயுதங்களுஞ் சோபையாகவிருக்கும்.

திக்குப்பாலகர்களுள் குபேரன், பதுமம், மகாபதுமம், சங்கம், மகரம், கச்சபம், குந்தம், முகுந்தம், நீலம், சரசங்களென்னும் நவநிதிகளு முடையவனாகியும், ஈச்சுவரனுக்குத் தோழனாகியுமிருப்பன்.

பின்னும் ஈசாநதிக்கில் ஈச்சுரக்ஷேத்திர முண்டு அதில் நந்திகேச்சுவரன் கநகமய சரீரியாகி ஏகமுக திரிநேத்திர, சதுர்ப்புஜ சுவேதவஸ்திராபரண கந்தபுஷ்பாதிகளால் அலங்கிருதனாகிச் சூலபாணியாய்ச் சநற்குமாராதி சிஷர்களோடுகூடிச் சிவார்ச்சநா தற்பரனாகவிருப்பன். மத்தியகங்கணத்தில் சித்தர், மநுக்கள், முநீச்சுவரர்களும், தநுஜர், திவிஜர், காந்திருவாதியரு மிருப்பர்.

மேலும் மேருவின் மூலகுகாந்தரங்களில் மருத்கணங்களிருப்பர். மேருவின் திடத்துவத்துக்காக அசநிநகற்பிதமானகிலசபர்வ்வதங்கள் ஒவ்வொன்றும்(ருமத)யோ

சணையுந்நதமுள்ள சுவேதவர்ண மந்தரம் மேருவின் பூருவதிக்கிலும், பீதவர்ணகந்தமாதநம் மெருவின் தெற்கிலும், நீலவர்ணவிபுலம் மேருவின்மேற்கிலும், அருணவர்ணமான சுபாரிசகிரி மேருவின் வடக்கிலுமிருக்கும். இவைகளின்மேல் தேவதைகள் சதாசிவநாமமுள்ள சிவலிங்கங்களை ஆராதிப்பர்கள். இக்கிலகபர்வதங்களின் மேல் முறையே, கதம்ப, சம்பு, அச்சுவத்த, வடசவிக்ஷையுள்ள கற்பகவிருக்ஷங்கள் (கு) யோசனை உந்நதமும், (கு) யோசனை விஸ்தீர்ணமுமாயிருக்கும். இக்கந்தமாதநத்தில் சம்பு விருக்ஷத்தில் மகா கஜப்பிரமாணமென்னும் மநுஷருடைய (சா) முழநீளமுள்ள பழம் பழுத்துக்கனிந் தொழுகும் ரசந் திரைகளையுடைய விசாலமான சம்புநதியென்னும்பெயர்பெற்று மேருவின் மூலத்தைவளைந்து இளாவிரதபூமியைப் பதினறுமாற்றுக் ககமயமாக்கித் தன்னை ஆசரித்த சகலபிராணிகளின் தேகத்தைச்சுவர்ண காந்தியாக்கும். அந்நதியிலுண்டான கநகமே தேவர்களாபரணத்துக்கு யோக்கியமாம்.

மந்தரகிரி மூலத்தில் நந்தியென்னுநதி குபேராதியருக்குக் கிரீடார்த்தமாகும். மேலும் சைத்திராந்த மென்னும் வநமும், ஏமப்பிரபைநிறைந்த அருணேதகமென்னுங் கயங்களும், சுரரார்ச்சிதமான தற்புருஷநாமலிங்க க்ஷேத்திரங்களும் அதிசோபையாயிருக்கும்.

கந்தமாதனத்தினடியில் பத்திரையென்னுநதி கந்தர்வ்வாதிகளால், ஆவர்த்தமானந்ததமென்னுநதி வநமும் மனோகரமான சாவரமென்னுஞ் சரசும், அமரசித்தமாகும் அகோரநாமலிங்கக்ஷேத்திரமும் அலங்கிருதமாக விருக்கும்.

விபுலத்தின் அதோபாகத்தில், சுரபியென்னுநதியும். வைப்பிராசதமென்னும் வநமும், ரவிகிரண காந்திமய



கஞ்சரசிதமாகுஞ் சீதோதக சரோவரமும், தேவார்ச்சிதமான சத்தியோசாதலிங்க க்ஷேத்திரமும் பரிசோபித்திருக்கும்.

சுபாசத்தினடியில் சுமுனையென்னு நதியும், பிதுர்தர்ப்பனைகளினல் செவ்வியான துருதிமதியென்னும் வநமுஞ், சுகந்தமாவலங்கிருதமான பத்திரகாவென்னுங் குளமும், விபுதார்ச்சிதமான வாமதேவநாமலிங்க க்ஷேத்திரமும் சோபையா யிருக்கும்.

அதன்மேல் சயித்திராதாதிநான்கு நக மத்தியில் ஒவ்வொன்றிலும் நாநாரத்திந மயமான மாடி, நகரங்களும்; மந்தார, பாரிசாத, கற்பக, சந்தாந, அரிச்சந்தநமென்னும் பஞ்சசுரதாருக்களும்; காமதேனு சிந்தாமணிமுதலிய சித்திரசாதிவஸ்துக்களும்; அமுதமயமான நதி, வாவி, கூப, தடாகங்களும்; கமல, கல்லார, குமுதகுசுமங்களும்; சகோர, சக்கரவாக, அம்ஸ, ராஜஅம்ஸ, ஜலகுக்கிடமென்னும் நீர்ப்பக்ஷிகளும்; சாதி, மல்லிகை, முல்லை, முதலான புஷ்பசாலங்களும்; கதலி, நாரிகேள, பூக, சம்பு, புன்னுக, சூத, பனச, மலயசமுதலிய தாருசாலங்களும் ; வநிதையர் ஆட, உமிழ, உதைக்க, நகைக்க, பார்க்க, தழுவ, நிந்திக்க, பாட, நிழல்பட, சிநேகிக்க முறையே மலர்கின்ற, புன்னை, மகிழ், அசோகு, முல்லை, மரா, குரா, பாதிரி, குருக்கத்தி, சண்பகம், ஏழிலைம்பாலை என்னும் மகளிரான்மலர் விருக்ஷங்களும்; அங்குர, பல்லவ, முக, குசும, பலபக்குவ பலவிருக்ஷங்களும், சுக, கோகில, மதுகர, மயூர, கபோதவிசித்திர, பக்ஷிகளும்; மிருக, கஸ்தூரிமிருக, கவரி, கோ, புருஷாமிருகாதி சாதிமிருகங்களும்; சைத்திய, மந்த மலய மாருதங்களும்; மநோகரமாயிருக்கும்; அந்தவநங்களில், சித்திரசாலை, சந்திரகாந்தமாளிகை, ரத்தினசாலை, சுரபிசாலை, லதாமண்ட

பங்களுமான மேடைகளில்,வித்தியாதரர்,யக்ஷர்,கருடர்,
இம்புருஷர்,கந்தருவர், கின்னரர், பிசாசர், பூதர்,மகாசித்
தரென்னுந் தேவர்பேதங்களில், சுரசிரோஷ்டரான, மகர
த்துவஜ, நளகூபர, சயந்த, அநுருத்த, கூஸ்மார, பாஞ்
சால, பல்லவப் பிரவீணருமான தேவவிடரும்; ரம்பை
உருவசி, திலோத்தமை, சித்திரரேகை, மஞ்சுகோஷை
மேநகை, சுகேசி, முதலான தேவகணிகையரும்; சர்வ்
வாபரண வஸ்திரவிசித்திர மாலிகா அலங்கிருதராகி, ம
ல்ல, துருகா, மகிஷயுத்தங்கள் பார்த்தும்,நாநாவித சது
ரங்காதி சூதுபோர், மதுபாந, ஜலகேளி, வநகேளி செய்
துகொண்டு மிருப்பர்.

## கேசாரபர்வ்வதங்கள்.

மேலும் மேருவின் மந்தராதி இலகபர்வ்வதங்களி
ன் மத்தியில், சீதாந்த, சாரகுந்த, குத்தி, மாலியவான்,
வைகங்க மென்னும் (ரு) கேசார பர்வ்வதங்கள்,மந்தரத்
துக்கும், கந்தமாதநத்துக்கு நடுவிலிருக்கும்.

திரிகூடம், குருவிந்தம், மதங்கம்,ருசகம், நிஷதமெ
ன்னும் (ரு) நகங்கள், கந்தமாதநத்திற்கும், விபுலாத்திரி
க்கும் மத்தியிலிருக்கும்.

சிகிவாச, வயிடூய, கபில, காந்தார, சாருதியென்
னும்,(ரு) மலைகள் விபுலாத்திரிக்கும், சுபாரிச்சிகிரிக்கு
ம் நடுவிலிருக்கும்.

சங்ககூட, விரஷப, அங்கிச, காளாஞ்சந, சிகரிக
மென்னும், (ரு) மலைகளும் சுபாரிச்சிகிரிக்கும், மந்தரத்
துக்கும் நடுவிலிருக்கும் இந்த (உ௰) கேசாரசைலங்கள்
ஒவ்வொன்றும்,(௲) யோசனை யுயரமாய்; சமஸ்தசுர ச
ந்ததிகளுக்கும் ஆசிரயமாகி யிருக்கும். இவைகளின் ம
த்தியில் இப்படி விசித்திரரசனையுள்ள மகாமேருவைவ
ளைந்திருக்கும் நவகண்டங்களின்விபரமெப்படியெனின்.



மேருவின் உத்தரதிக்கில், நீல, சுவேத, சிஸ்சிருங்
கங்களென்னும் சிமாகிரித்திரயங்களுண்டு. அவற்றுள்
ஒவ்வொன்றும் (உ௱) யோசனை விசாலமும், (௰௱) யோ
சனை யுந்நதமும், (௬௱)யோசனை அந்தராந்தரங்களுமுள்
ள பூருவபச்சிம, லவணத்திபரியந்தம் நீண்டிருக்கும்.

அந்தக் கிரித்திரயங்களின் மேலும் நாநாவர்ண,வி
ருக்ஷங்களுண்டு. அக்கிரிகளின்மேல் தேவ, மகேச்சுவ
ர,ருத்திர நாமதேயமுள்ள லிங்கங்களை, நிசிசரர்பூசித்
திருப்பர்.

அந்தமேருவின் தக்ஷணபாகத்தில், நிஷத, ஏமகூ
ட, மந்தாரங்களென்னும் சிமாபருவதத்திரயங்களுண்
டு; அந்நீலாதிகிரிகள் (உ௱) யோசனைப்பிரமாண விசால
உந்நத அந்தராந்தரங்களா யிருக்கும். அக்கிரித் திரயங்க
ளில் விசித்திரவர்ண விருக்ஷங்களுண்டு. அக்கிரிகளில்
ஈசாந ஈச்சுவர, பார்வதீபதியென்னும் நாமதேயமுள்ள
லிங்கங்களைத் தேவர்களாராதித் திருப்பர்.

அந்தமேருவின் பூருவபச்சிமதிக்குகளில்(௬௱)யோ
சனையுள்ள மாலியவசந்தம்,கந்தமாதனமென்னுஞ் சிமா
கிரிகளிரண்டுண்டு. அக்கிரிகளில்ஒவ்வொன்றும்(௲)யோ
சனை அகலம், (ரு௱) யோசனை யுந்நதமுமாய், முன்சொ
ன்ன நீலாதிசிமாகிரிகளைச்சுற்றியிருக்கும். அவைகளில்
வெகுவர்ணவிருக்ஷங்களுண்டு. அக்கிரிகளில் மகாதே
வ, மகேச்சுவரநாமமுள்ள லிங்கங்களை சமஸ்தசுரரும்
அர்ச்சித்திருப்பர்.

## ௧-வது. இளாவிருதவருஷம்.

பின் விபாக சைலாஷ்டகங்களின் அந்தராளதிசை
களுக்கு வருஷபூமியென்று பெயராம். அவைகளுக்கு
முற்கூறிய இளாவிரதாதி நாமமுள்ளவர்களே கர்த்தர்க

ளாவர். அவற்றின்விஸ்தீர்ண மெவ்வளவற்றெனின், மேருவின் உத்தரதக்ஷண பூர்வபச்சிம திக்குகளிலுள்ள நீல,நிஷத, மாலியாவந்த,கந்தமாதன மென்னுஞ் சிமாகிரி சதுஷ்டயங்களுள்ள வலயமே நவசகஸ்திரயோசனையுள்ள இளாவிருதமாம்.

சீதாந்த, சாருகுந்த, குருஷி அசிலோத்தம, மணிகண,சிலாத்திரி, விருக்ஷவாநு, ருக்மவித்துவாநு, மந்தரவேணுமாநு, மேககிரி, நிஷத, தேவாகமென்னும் (யஙு) குலசைலங்களே பூர்வோக்த மந்தாரமென்னுங் கிலகபர்வதங்களுக்குப் பூர்வதிக்கி லிருக்கும்.

பின்னும், சைலதுவி, சிகிரி, திரிசிகிரி, ஏகசிருங்கி, மகாசைலம்,கசசயிலம்,பிசாசசைலம்,பஞ்சசைலம்,கைலாசம், இமவான், என்னுந் தசகுலபர்வதங்கள்பூர்வோக்த கந்தமாதந மென்னுங் கிலகபர்வதத்துக்குத் தக்ஷண திக்கிலிருக்கும்.

சுகந்தி, சிகி, திரிசிருங்கி, புஷ்பகம், சுபட்சகம், குசைல, வபியே, கபில, பத்திர, குமுத, மதுமாந, அஞ்சந, மகுட, பாண்டர, சகஸ்திரசிகிரி,பாரிசாதமென்னும் பதினாறு குலாசலங்கள் பூருவோக்த விபுலமென்னுங் கிலக பர்வதத்தின் பச்சிமதிக்கிலிருக்கும்.

சங்ககூட, மகாநக, அங்கிசகிரி, நாகசைல, கபிலாத்திரி, இந்திரகிரி, சாநு, மாநு, சாருதி, ஏமகூடம், நீலபத்திரம், சகடசிருங்கம், புஷ்யராகம், மேருபர்வதம், ஏமப்பிரபை,பவாரகிரி, மயூரங்க, சாருதிசைலமெனப் பதினேழு சைலகுலோத்தரங்கள் பூர்வோக்த சுபாரிச்சிகிரியென்னும் கிலகபர்வதத்துக்கு உத்தரதிக்கி லிருக்கும் இந்த (ருசு) குலாத்திரிகள் சுரசித்த சந்ததிகளுக்கு ஆச்சிரயமாகியிருக்கும்.



இந்த இளாவிருத வருஷத்துள் வெவ்வேறாக ஒவ்வொன்றும்(உத)யோசனையுந்நதமாகித் தோன்றுங் கிரிகளின்மேல் அநேகமகாபட்டணங்களுண்டு எவையெனின் சந்திரகாந்த, சுசுப்பிரபாரிசாத, குமுதவதீயென்னுமலைகளில் தாநவருக்கு (அ௱) புரங்களும்,

திரிகூட, சாருதி, சகசிரசிகிரி, நமுசி, மகாநட, மகாதம்ப, அக்கிநிமுக, காலநேமி, விரோசந, சுபருவ, சபல, கிரவிந்திய மென்னுங் கிரிகளில் ராக்ஷதாசுரர்களுக்கு இரண்டுலக்ஷம் புரங்களும், குவிருதமென்னும் கிரியில், நீலாதி அயக்கிரீவர்களுக்கு (கூசு) புரங்களும், மகாநீலகிரியில் கின்னரர்க்கு (ரு௱) புரங்களும், சுவேதோக பர்வதத்தில், அளசசி, ஸ்வகந்தரோணக, உலூகல; சுவசுவன என்பவர்முதலிய சுபநருக்கு (ருத) ம் புரங்களும்,வேணுமாநுகிரியில் வித்தியாதரருக்கு,(எ௱) புரங்களும், கஞ்சபர்வதத்தில் கந்திருவருக்கு அநந்த புரங்களும். மேகபருப்பதத்தில், அத்திரி, ஆங்கீரச அகஸ்திய, பார்க்கவ, பாரத்துவாச, பிருகு, வியாச, விசுவாமித்திர, வசிஷ்டாதி ரிஷியீச்சுவருக்கு அநந்த ஆச்சிரமங்களும், புச்சகேது பர்வதத்தில், நாரத, தும்புரு, பரத கோலாகலாதி தேவமுநி மந்திரங்களும், ஏமகூடத்தில் துவாதசாதித்தர்களுக்குப் புரங்களும் பஞ்சகூடபர்வதத்தில் வாணிபத்திர, சுவீர,பாஞ்சீக, விபாண்டக, திரிதிராக்ஷச, பூரணபத்திர, விருபாக்ஷர் முதலிய ஐந்துகோடியக்ஷர் பட்டணங்களும்,குமுதபர்வதத்தில் பத்மாதி நாகர்களுக்கு நிகேதநங்களும், பாரயாத்திரபருப்பதத்தினில்குபேரநகரியும்,மரியாதபருப்பதத்தில், விக்கிநேச்சுவர நகரியும், சசோத்துங்கபருப்பதத்தில் துர்க்கைநகரியும், ஏகசிருங்கபருப்பதத்தில் பிர்ம்மநகரியும், கிரிக்கூடபருப்பதத்தில் விஷ்ணுநகரியும், ஸ்ரீகண்டபருப்பதத்தில் ஈச்சுவரன்இராஜதாநியு மிருக்கும்.

பின்னும் அந்த ஸ்ரீ கண்டபர்வ்வதத்தின் சமீபத்தில்எமகூடத்தில்,வச்சிர,வயிரே,கோமேதக,புஷ்யராக,பதுமராக,நீல,வித்துரும,மௌத்திக,மரகதங்களென்னும் நவரத்நகசிதமான, அஷ்டசிமயத்தின் மத்தியில்.

## தக்ஷிணாமூர்த்திலக்ஷணம்.

பிரணவமே மூலம், சந்தஸாதிகளே சாகைகள், இருக்குவேதமே தளம், எஜுர்வேதமே புஷ்பம், சாமவேதமே பலம், அதர்வணவேதமே பலரசம், ஏலகக்கமே சீதளசாயைகளாக விளங்கும் வடசௌக்ஷயான கற்பவிருக்ஷமிருக்கும். அதன்பிரமாணம் சகஸ்திர யோசனை விசாலோந்நதமான தாகும்.

அதன்மூலத்தில் மணிகசித திவ்விய சிங்காசநத்தின்மேல் தக்ஷிணாமூர்த்தியானவர், அமிருதமய சரீரத்தோடு ஜடாபந்த சந்திரகலை ஏகமுகதிரிநேத்திர, பணிகுண்டல, நீலக்கிரீவ, சாப, யக்ஞோபவீத நாகயோகபடங்களைப் போர்த்துடுத்த கஜவியாக்கிர சர்ம்மத்தோடு வித்தியாமுத்திரா,அஷ்டசூத்திர சுதாகலச,புஸ்தகங்களுடைய தக்ஷணவாமகர சதுஷ்புஜங்களும் கந்தமாலிகா பரணதிகளால் அலங்கிருதனுகி, வீராசநத்திருந்து,மோகோபத்த மாரன்மேலிருத்திய தக்ஷணபதகமலப்பிரகாசமாக, விசித்திர வேஷதாரிகளான கேசாநந ஷண்முக, கணேசாதிகளுக்கும், நாரதாதி முனிவர்களுக்கும், சாங்கியாதி நாநாசமய சாதகர்களுக்கும், வேதாதி சகல சாஸ்திரங்களையும், உபநியாசஞ்செய்து கிருதார்த்தராகச் செய்வர்.

இப்படிச் சகலதேவதைகளுக்கும் ஆஸ்பதமான இளாவிரத வருஷத்தினில் திவ்வியதேகரான மாநவர்ஆயிரவர்ணமான மஹாப்பிரகாச மயமானமேருவிற் கா



ணப்பட்ட சகலவிஷய விசாரங்க ளுள்ளவர்களாய்ச் சம்புவென்னுங் கற்பவிருக்ஷ பலாகாரத்தராகி (யஅத) வருஷ ஆயுளுள்ளவர்களாய் ஈச்சுவரநாமலிங்கபூச கராகி நித்த சுகிகளாக இருப்பர்.

## உ-வது. பத்திராசுவருஷம்.

அதன்மேல் அம்மேருவின் பூருவம் (கூத) யோசனைவிஸ்தீர்ணமாய் மாலியாவந்தமென்னும்சிமாகிரிமுதலாகப் பூர்வ்வலக்ஷண சமுத்திர அவதியாகி சந்திரகாந்தவர்ணத்தின் பூமியுள்ளதே பத்திராசுவருஷமாகும்; அது(ருஉத)யோசனைப்பிரமாணத்தினில் சதுராஸ்சிரயமாகியிருக்கும். அதில் சத்தகுல பர்வ்வதங்களும், அங்கங்குசைல நதிநதாதிகளுண்டான வருஷங்களின் சசிகாந்திமயமான ஜநங்களும், நிலாவிருஷமென்னும் கற்பலதாருபலாசனத்தில் (யத) வருஷசீவிகளாகி மஹாதேவநாமலிங்கபூசகராகித் துக்கவர்ச்சிதராகி யிருப்பர்.

## ரு-வது. சுவேதகேதுமாலியாவருஷம்.

பின்னும் அந்தமேருவின் பச்சிமத்தில் (கூத) யோசனையந்தத்தில் பச்சிமலவண சமுத்திரமந்தமாகச், சிவந்தநெய்தற் காந்திமயமான பூமியுள்ளதே சுவேதகேதுமாலியாவருஷம்; அது (ருஉத) யோசனை சதுராசிரயமாகவிருக்கும். அதில், சத்தகுலகிரிகளும், அங்கங்குமகாநதி, நதாதிகளும் உண்டான வருஷங்களில், சிவந்தநெய்தல் நிறத்தையுடையவர்களாய்ப் பலாசமென்னுங் கற்பகவிருக்ஷபலந்தின்று (யத) வருஷ ஆயுளுள்ளவர்களாகி மகாதேவ நாமலிங்கபூசகராகிப் பலவான்களாக இருப்பர்.

## சு-வது. ரம்மியகவருஷம்.

பின்னும் அம்மேருவின் உத்தரத்தில் நீலசுவேதமென்னுஞ் சிமாகிரியுகங்களின் அந்தராளத்தில் (கூத)

யோசனைப்பிரமாணமான நீலவர்ணத்தின் பூமியுள்ள ரம்மியக வருஷமிருக்கும். அது பூர்வ்வபச்சிமலவணச முத்திர பரியந்தமாய் நீண்டிருக்கும். அதில் சத்தகுலப ர்வ்வதங்களும், அங்கங்குபிறந்த நதிநதாதிகளும் விசால மாயிருக்கும். அந்தவருஷத்தில்நீலச்சாயையுள்ளவர்கள் இக்ஷுவென்னுங் கற்பகவிருக்ஷசாசாங்கியத்தின் (மஉத) ஆயுளுள்ளவர்களாகி மகாதேவநாமலிங்க பூசகராகிச் சதாநந்தத்திலிருப்பர்.

## ரு-வது. ஐர்ணவதவருஷம்.

பின்னுஞ்சுவேதசிருங்கமென்னுஞ் சிமாபர்வ்வதத் துவயத்தின் நடுவில்லவணத்திபரியந்தம்(கூத)யோசனை யாந்தந்தவளவர்ணமுள்ள ஐர்ணவதவருஷம் பூர்வ்வ பச்சிம நீளமாகியிருக்கும். அதில், சத்தகுலகிரிகளிருக் கும்; அங்கேமனோகரமான நதிநதாதிகளுண்டு. அந்த வருஷத்தில் சந்திரப்பிரபாமயரான சனங்களிருப்பர். வ குளமென்னுங் கற்பகவிருக்ஷபலாகாரத்தில் (மஉத) வ ருஷ ஆயுள்பெற்று மகேசநாமலிங்காபூசகராகி சுக்ஷே மத்திலிருப்பர்.

## கூ-வது. உத்தரகுருவருஷம்.

சிருங்ககிரியின் உத்தராத்திரி கடையாக(கூத)யோ சனைகற்றுழம்பூவர்ணபூமியுள்ள உத்தரகுருவருஷம், அ ர்த்தசந்திராகாரமாகவிருக்கும்; அதில்சத்தகுலபர்வ்வத ங்களிலங்கங்கே உற்பத்தியான நதிநதாதிகள்ரம்மியமாக உண்டு. அதில்பிங்கலதரநாநாவர்ணத்தின்பலசகிதஅநே கவநங்களும், குசுமத்தின்சாயலுடையவர்களிருப்பர். அ வர்கள் இக்ஷுகற்பக விருக்ஷபலஆகாரத்தினில்(ருமத)வ ருஷ ஆயுளுள்ளவர்களாய்ருத்திரநாம லிங்க பூசகராகவி ருப்பர். அவருள் ஸ்திரிகள் ஓரோகர்ப்பத்தின் பெண் ஆ ண் பிறக்க அவ்விருவருமே சதிபதியாக நிஷேதமில்லா மல் நிசாநந்தத்திலிருப்பர்.



மேலு மிந்த உத்தரகுருவருஷத்தின் சமுத்திரசமீ பத்தில் (சமத) யோசனைப் பிரமாணத்தில் உத்தரவாயு திக்கில் சித்தமுநி முக்கியருக்குஆஸ்பதமான சிவப்புக் கமலவர்ணமுள்ள பூமிசந்திராகார,பதுமாகாரமென்னு ந் தீபத்துவயங்கூடி வர்த்தித்திருக்கும்; அதில்கிரமத்தி ல் சசி நீலவர்ணகாந்திஜநங்கள் சம்புவென்னுங் கற்பகவி ருக்ஷத்தின் பலாகாரிகளாகி(மநத) வருஷஆயுள்பெற்று ருத்திரநாம லிங்கபூசகராகிச் சந்தோஷமாக விருப்பர்.

## எ-வது. அரிவருஷம்.

மேருவின் தக்ஷணத்தில் நிஷத, ஏமகூட, சிமாநக யுகங்களின் அந்தராளம் (கூத) யோசனை பீதரசிதவர்ண பூமியுள்ள அரிவருஷம் பூருவபச்சிம லவணத்தி பரி யந்தமாக நீண்டிருக்கும், அதில் ஏழுகுலகிரிகளிருக்கு ம், அங்கேபிறந்தநதிநதாதிகளுண்டு. அந்தவருஷத்தில் ர சிதப்பிரபாமயமான சனங்களிக்ஷு வென்னுங் கற்பகவி ருக்ஷபலஆகாரஞ்செய்து, (மஉத) வருஷஆயுள்பெற்று ஈசாந நாமலிங்கபூசகராகிச் சித்திரசுகிகளாகி யிருப்பர்.

## அ-வது. கிம்புருஷவருஷம்.

பின்னுமந்த ஏமகூடம் இமபர்வ்வதஅந்தராளத்தி னில் (கூத) யோசனையுள்ள சுவர்ணமயபூமி கிம்புருஷவ ருஷமாம். அது பூர்வ்வபச்சிம லவண சமுத்திராதியாகி யிருக்கும். அதில் ஏழுகுலகிரிகளும், நதி சுரநதாதிகளு முண்டு; அந்தவருஷத்தில் ஏமவர்ண மநுஷர்கற்பகவி ருக்ஷ பலாகாரத்தினில் (மத) வருஷஆயுள்பெற்று ஈசா ந நாமலிங்கபூசகராய்ச் சுகசீவிகளாயிருப்பர்.

பின்னுமிந்தப் பிரகாரமான வருஷாட்டகத்தி லிரு ந்த ஜநங்கள் கிருதயுகா வநுக்கிரமத்தில் யுக்த தேசோ பல சம்பத்தாதிகளுக்கு விர்த்திக்ஷய மில்லாமல் ஓரே பிரகாரமாக விருப்பர்.

## ௬-வது. பரதவருஷம்.

பின்னும் அந்த இமோத்பருப்பதமுதல் தக்ஷணசமுத்திர பரியந்தம் (௬௦) யோசனைப்பிரமாணமுள்ள நானாவர்ண பூமியுள்ள பரதவருஷம் ஏறிட்டவிற்போலிருக்கும். இந்தப்பரதவருஷம் வெகுகண்டங்களாம். இதில்

### சக்கரவர்த்திகள் மகாராசாக்களின் ஓலக்கலக்ஷணம்.

அரிச்சந்திரன், நளன், புருகுற்சன், புரூரவன், முசுகுந்தன், கார்த்தவீரியன் என்னுஞ் சட்சக்கரவர்த்திகளும்; கயன், அம்பரீஷன், சசிபிந்து, சிபி, பிருது, மருத்துவான், பரதன், சுகோத்திரன், ராமன், திலீபன், ரகு, அந்திதேவன், யயாதி, மாந்தாதா, பகீரதன், அநங்கனென்னுஞ் சோடசமகா ராஜர்களும்;

தங்கள்தங்கள் ஸ்திதிகாலங்களில், அடிமை, இராசாங்கம், பந்து, வாகநம், தநம், தாநியம், சுதன், ரத்திநமென்னும் அஷ்டஐச்சுவரியயுக்தராகி;

சதி, ஸ்நாந,போஜந, வஸ்திர, கந்த, புஷ்ப, தாம்பூல, சயநமென்னும் அஷ்டபோக சம்பந்நராகி;

தடாக, தநநிக்ஷேப, பிர்ம்மாலய, சுராலய, வந, சத்கீர்த்தி, புத்திரனென்னும் சப்தசந்தாந யுக்தராகி;

சாம, தாந, பேத, தண்டமென்னும் சதுர்விதஉபாய சம்பந்நராகி ;

சந்தி, விக்கிர, யாந, ஆசந, துவைதீபாவ, ஆசிரயமென்னும் ஷட்குணசமேதராகி ;

பேததந்திர, பரீக்ஷாதந்திர, விசுவாசதந்திர, வஞ்சநாதந்திர, மித்திரகாரிய தந்திரமென்னும் பஞ்சதந்திரப் பிரவீணராகி ;



பிரபாவசத்தி, மந்திரசத்தி, உற்சாகசத்தி யென்னும் வர்க்கத்திரய விசிஷ்டராகி ;

ரத, கச, துரக, பதாதிகளென்னுஞ் சதுரங்கபல சகிதராகி ;

வித்துவாமிசர், கவிகள், காயகர், பட்டர், பரிகாசர் இதியாசக்ஞர்,பௌராணிகர் என்னுஞ் சபாசத்தாங்கபரிவேஷிதராகி யிருக்குஞ் சபாமத்தியில்,இவ்வியசிங்காசநாதி பதிகளிருபுறஞ் சூழ்ந்திருக்க, மந்திரி, சாமந்தர்,முதலான சகலநியோகர்கள்திருமுகநோக்கஇனிதினிருந்து

உத்தா, அநுத்தாதி, இருபத்தாறு சந்தசுகளும், சமாசோக்தி, பரியாயோக்தி, முதலியசதாலங்காரங்களும், புர, கிரி, நந்தந வநஜலகேளியாதி, வர்ணனைகளும்பொருந்த, பிரசாத, சமதை, மாதுரியாதி தசப்பிரமாணம்பிடித்து ; கௌடரீதி, வைதர்ப்பரீதி, பாஞ்சாலரீதிஎன்னும் ரீதித்திரயத்தோடு, ரசபாவசித்திராதி அஷ்டபிரகாரம் பிடித்து, வியாகரணந் தப்பாமல், சுருதிக்குரூர, வியர்த்தமுதலிய அஷ்டபததோஷம் பொருந்தாமல், கண்டிதாபக்கிரமாதி அஷ்டவாக்கிய தோஷங்கலவாமல்; சப்தபுநருத்தியாதி அஷ்டசட்த தோஷம்பொருந்தாமல்,பத்தியம்,கத்தியம்,சம்புவென்னுந் திரிவிதவாக்கியப்பிரபந்தமும்,சமஸ்கிருத,பிராகிருதஅபப்பிரஞ்சபைசாசிகாதி பாஷாபேதங்களிற் சொல்லுங்கவீச்சுவரரும்;

யாவருக்கும் ஆநந்தந்தோன்ற பதவேத்தியஞ்செய்து கேட்போர் செவிகுளிர மதுரவசநோற் சாரணஞ் செய்யுங் காயகரும்;

நியாயவை சேஷிக,கண்டித,சிந்தாமணியாதி சாஸ்திரகோபிதரான வாதிகளும்;

சிங்காராதி நவரசங்களுக்கும் பீஜபூதமான தத்தாயிபாவங்களே தக்ஷணுதி நாயகரிருதயத்தில் தாயாயிருந்து சுவகீயாதி நாயகியொன்னும் ஆலம்பனவிபாகங்களில் அங்குரித்து, உத்தீபந வியாபகங்களால் பிரகடநஞ்செய்து பரர்சரீரங்களுந்தானுகி அந்தந்த ரசகாரியமான, சுரபேத கம்பநாதிசேஷ்டா விசேஷங்களும்,லச்சைசங்கையாதி முப்பத்தாறு சஞ்சாரியங்களுமறிந்த, பாரங்கதரும், நிறைந்திருக்கவும்,

## நவரசந்தோன்றும்விதம்.

ரதியொன்றே அந்தந்த உபாதிவிஷய பேதத்தினுல், அவஸ்தாபாவ சௌக்ஞைபெற்று, அந்தந்த வியாபாரஅநுபாவ சாத்துவீக சஞ்சாரியா பாவங்களில் தோன்றிச் சிங்காராதி சௌக்ஞைபெற்றிருக்கும்.

எப்படியெனின் ரதியொன்றே காந்தாதிகளின் விஷயமாக, ராகமயமாகும். அதிலிருந்து, சிங்காரசௌக்ஞையானது, புத்திராதி விஷயமாக வாச்சல்யநாமமும், மித்திராதிவிஷயமாகச் சிநேகநாமமும், பந்துவிஷயமாகப் பிரேமாநாமமும், நிருப,குரு,தேவதாவிஷயமாகப்பக்திவாசகநாமமும்,ஆத்மவிஷயமாகப் பரமப்பிரீதிநாமமும், வஸ்து விஷயமாக இச்சாநாமமும் பெற்று, அசிதவ்விய, சோச்சிய, துவேஷ, பிரதிஷ்டை, பீஷண, சிகுஜை, ஆச்சரிய, சாகியாஸ்தங்களென்னும்அஷ்ட ஆலம்பநாவிபாவபாகங்களிலிருந்து முறையே சிங்கார,ஆசிய, கருணை, ரௌத்திர, வீர, பயாநக, அற்புத சாந்தியென்னும் எட்டுரசங்களு முண்டாகுமென்பதாம் *

மேலும் திரோதாப்த, தீரோதப்பித, தீரலலித, தீரசாந்தனென்னுஞ் சதுர்வித மகாநாயகரும் ;

* சிலர் மருட்கையோடு நவரசமென்பர்.



சேச, விரஷய,அஜனென்னும் பிரமாணபுருஷரும், மந்தவேக, மத்தியவேக, சண்டவேகனென்னும் ரதிபரிணிதரும்;

விட, தூஷக, பீடவர்த்தந,நாகரீகனென்னுஞ் சதுர்விதபோகசங்கரரும் ;

பூமாரன், சந்தநன், பத்திரசங்கியன், பாஞ்சாலசங்கியன்என்னும் சதுர்விதகாயஜாதிபுருஷர்களும்;

சுவகிய, பரகிய, சாமாகிய னென்னுந் திரிவித நாயகியரும் ;

சேஷ்டை, கநிஷ்டை, யென்னுந் துவிதகுண விசேஷவநிதையரும்;

(அ) (௬) (௰௨) (உ௰) (௩௰) (௪௰) (ரு௰) பருவாநுக்கிரமத்தில், முளையௌவநம், இளையௌவநம், நிறையௌவநம், தம்பயௌவநம், மீட்செவ்வநம், பச்செவ்வநம், விடுச்செவ்வநங்களுடைய, கௌரி, கந்நிகை, வாலை, முத்தை, விதத்தை, பிரகற்பை, இச்சாகதிய னென்னும் பெயர்பெற்றுச்,சுத்தவயோ விசிஸ்டராய்ச் சிலத்தை, மத்தை, களையென்னும் ஆகாரயுக்த சீமந்தியரும்;

உத்தமை, மத்திமை, ஜகநியனென்னுந் திரிவிதகோபபிரசாதலக்ஷண லக்ஷித லலிநியரும்;

திரய, திரயாயிகனென்னும் பிரபுடைகந்நியரும்;

சுவாதீநபதிகை, கண்டிதை,அபிசாரிதை, வாசகார்ச்சிதை, கதபர்த்தாரிகை,அபிசந்திகை, கநனை, சமுக்காயியென்னும் அஷ்டவித அவஸ்தாகாமியரும் ;

மோக்ஷாயிதை, விரபோகலலிதை, லீலை, கிலகிஞ்சிதை, விசித்தை, விலாசை, விசிர்த்தை, விப்பிரலம்பகுட்டிமை, தயை, லலிதை யென்னுந் தசவிதகேளிபாலலீலாசதியரும்;

அத்திநி, சங்கிநி, சித்திநி, பத்மிநியென்னும் நான்குசாதி காயஸ்திரிகளும்;

அகருணி, அசுவை, இபக்கேயவென்னும் பிரமாணித, பருமித பிரமதேயரும்;

மந்தவேகி, மத்தியவேகி, சண்டவேகி என்னும் ரதிபேதகாந்தியரும்;

தேவசத்துவ, யக்ஷசத்துவ, கந்திருவசத்துவ, நரசத்துவ, நாகசத்துவ; காகசத்துவ, வாநரசத்துவ, மூஷிசத்துவ, பிசாசசத்துவ, ராக்ஷசசத்துவ, கிந்நரசத்துவ, கரசத்துவமென்னுந் துவாதசசத்துவ சதியரும்;

சாரிகை, சதுரிகை, சகஞ்சாதிநகை, தாதிகையென்னுஞ் சதுர்வித சதியரும்;

அபிமாநப்பிரீதி, விபவப்பிரீதி, சதுர்சப்பிரீதி, விஷயப்பிரீதியென்னும் நால்வகைப்பிரீதியரும்;

லச்சாமோகம், விபவமோகம், கருணைமோகம், நீசமோகமென்னும் உத்தம, மத்திம, அதம, அதமாதம மோகமயரும்;

பாதம், கரடு, முழங்கால், சகநம், ஊரு, கொப்பூழ், இதயம், குய்யம், கக்ஷம், தொண்டை, கபோலம், துடி, கண், கணைக்கால், உச்சியென்னும் பஞ்சதச கலாஸ்தாந சுக்கிலபக்ஷாதி திதிக்கிரமங்களை யறிந்தலக்ஷணரும்;

புஷ்கர, விவிதக, திருஷ்டக பீடந, விருக்ஷாரோகண, லதாவேஷ்டந, திலதண்டுலாக்கிய, க்ஷீரநீர, ரூபகட்ட, சகோபகட்ட, ஸ்நாபக்கிலேச, லலாடிக மென்னுந் துவாதச ஆலிங்கநங்களும்;

உத்தர, சம்புடிக, சிங்வாமௌந, சிங்விவிகை, அதிகண்டாற்பிரக, மண்டலாகிருதி, குரோத, சரிவித, வாரக சரிவிதமென்னும் அஷ்டவிததாடந லக்ஷணீகரும்;



பஞ்ச, நகயோக, துவந்துபோக, அர்த்தசந்திரிகாமண்டல, மயூரபத, சசப்புலுத்த, உத்பலமென்னுஞ்சத்தகோபாதி விதரும்;

மதநாந்தோளந, மதந, சந்திரபூரண, சந்திராதிநாடி வர்ணமகீபரும்;

செயதுரோகரண, விகிர்தோருகரண, திரியக்குகரண, திதிகரண, உதரணவாதியநேககரணபரிணதரும்;

விருகசிங்கசம்போக, விருகாசசம்போக மென்னும் ரதிகலாகுசலரும்;

ஆதிமத்தியாந்தமென்னும், ரதிதந்திர சாதுரியரும், பூர்வ்வாநுராக, மாநக்கிய, பிரவாச, கருணாத்மகமென்னும் வியோகசதுஷ்டயரும்; விசிஷ்ட பரிசிந்நப்பிரகாச விப்பிரலம்பமென்னும் வித்தகரும்;

காரிஸ்மிசாகரண, சாகரண, சந்தாபந மென்னும் அவத்தாத்திரயபரீக்ஷகரும்.

உந்மதந, மதநமோகந, சந்தாபந, வசிகரணமென்னும் பஞ்சமந்திர வர்ணப் பிரதாபப்பிரவீணரும்.

அசோக, அரவிந்த, சூத, மல்லிகை, நீலோற்பலமென்னும் பஞ்சகுசுமாத்திரி கோபிதரும்;

பின்னும் பஞ்சபாணங்களுக்கு லக்ஷியத்தாநமான, மத்தக, முக, வக்ஷ, பிருஷ்ட, இருதயமென்னும், பஞ்சாவயவங்களும்; கிரமத்தில் ஒவ்வொன்றுக்கு, இவ்விரண்டாகப்பிறக்கு மபிலாசை, சிந்தை, கபிஸ்மிருதி, விபகுணகிதி, சநதாபந, கிரியாத்துவேஷ, விகள, மௌந, மரணமென்னுந் தச அவத்தாவிசார பரருசிறைந்திருக்க;

## சுரராகலக்ஷணம்.

அகார, உகார, மகாரமென்னும், மூன்று பீஜாக்ஷரங்களுள், அகாரமேரஜோகுணாத்மகப்பிர்ம்மன், உகா

யாவளி, ஏகாக்ஷரி யென்னுமூன்று சுருதிகளும் ரிஷபத்திலும்; பிரங்கசாதி, புரங்கிதையென்னு மிரண்டு சுருதிகளுங்காந்தாரத்திலும்;ரஞ்சகி, பூரணீ,அலங்காரராணி வாசுகியென்னு நான்கு சுருதிகளும் மத்திமத்திலும்; ரேணுகி,லலிதை,தத்துரங்குசேசுவா,வாங்சுசேயென்னு நான்கு சுருதிகளும் பஞ்சமத்திலும்,பாஷாங்கி, வர்த்தகி,சம்பூரணி யென்னுமூன்றுசுருதிகளுந் தெய்வதத்திலும், பிரசங்கிய; சர்வ்வவியாபி யென்னு மிரண்டுசுருதிகளும் நிஷாதத்திற் பிறந்தனவென்று நிச்சயித்து

கமகபேதம்.

சுவரித; பிரமத, தீர்க்க, லலிதோற்சார, கிருத, தித, உல்லாசித, உல்லோசித, கம்பித, சூக்ஷமித, தீர்க்க,லோலித, லீலோதீர்க்க, தீர்க்கலீலித, பிரஸ்துத, தாந்திக, ஊர்ச்சித, சிட்டபத; அடவி, மூல, ரசித, கோமளமென்னும் இருபத்திரண்டுசுருதிகமகங்களும்;

கம்பித, சசுரித, லீந, திரி என்னுநான்கும், சத்ததர, ஆந்தோளித, ஆகதமென்னு மூன்றுமாகிய எழுதேசிககமகங்களும், அறிந்து.

இராகலக்ஷணம்.

இந்தச்சுரம், சுருதி, கமகங்க ளென்னுமிவைகளிற் பிறந்த இராகங்கள் சுவரத, சுவர, மதுர, அக்ஷர, அலங்கார, ஆலாபந மென்னும் ஆறுலக்ஷணங்களே யுடையதாயிருக்கும். அந்தராக உற்பத்திக்குச்சட்ஜக்கிராம, மத்திமக்கிராம, காந்தாரக்கிராம மெனகிராமத்திரயங்களுண்டு, அவற்றுள் காந்தாரக்கிராமமேதேவலோகத்தில் வர்த்திக்கும். மற்றக்கிராமங்களிரண்டும் மற்றலோகங்களில் வர்த்திக்கும்.

இவைகளிலுண்டான ராகங்கள் அநேகமுண்டு, அவற்றில் தலைமைபற்றிய இராகங்கள்(கூஉ)அவைபைரவி,



தேவக்கிரியை, மேகவிரஞ்சி, குறிஞ்சி,பூபாளம், வேளாவளி, மலகரி, பௌளி, சீராகம், இந்தோளம், பல்லதி, சாவேரி, படமஞ்சரி, தேசி, லலிதை,தோடி, வசந்தம், இராமக்கிரியை, வராளி, கைசிகம், மாளவி, நாராயணி, குண்டக்கிரியை,கூர்ச்சரி,பங்காளம், தந்நியாசி,காம்போதி, கௌளி, நாட்டை, தேசாக்ஷரி, காந்தாரி, சாரங்கமென்பனவாம்.

இவற்றுள், பைரவி—புருஷராகம். பிராமணசாதி. இதன்மனைவிகள், தேவக்கிரியை, மேகவிரஞ்சி, குறிஞ்சி, அதிதேவதை ஈசாநன்.

பூபாளம்—புருஷராகம். பிராமணசாதி. இதன்மனைவிகள், வேளாவளி, மலகரி, பௌளி, அதிதேவதை திருமால்.

சீராகம்—புருடராகம்.அரசசாதி.இதன்மனைவிகள் இந்தோளம், பல்லதி, சாவேரி, அதிதேவதைசரஸ்வதி.

படமஞ்சரி—புருஷராகம்.அரசசாதி.இதன்மனைவிகள், தேசி, லலிதை, தோடி, அதிதேவதை இலக்குமி.

வசந்தம்—புருஷராகம். வைசியசாதி. இதன்மனைவிகள், ராமக்கிரியை, வராளி, கைசிகம், அதிதேவதை சூரியன்.

மாளவி—புருஷராகம். வைசியசாதி.இதன் மனைவிகள், நாராயணி, குண்டக்கிரியை, கூர்ச்சரி, அதிதேவதை நாரதன்.

பங்காளம்—புருஷராகம். சூத்திரசாதி. இதன்மனைவிகள் தந்நியாசி, காம்போதி, கௌளி. அதிதேவதை விநாயகன்.

நாட்டை—புருஷராகம். சூத்திரசாதி. இதன்மனைவிகள், தேசாக்ஷரி, காந்தாரி, சாரங்கம், அதிதேவதை தும்புருவன் என்னும் இவைகளின் பேதங்களுமறிந்து பாடி மோகிக்கச்செய்யும் காயகரும்.

தோற்கருவி, துளைக்கருவி, நரம்புக்கருவி, கஞ்சக் கருவி, மிடற்றுக்கருவி யென்னும் பஞ்சமகாவாத்திய நவீக்ஷணரும்.

வீணைகளின்பேதமுதலியன.

விபஞ்சிகை,சித்திரிகை,சித்திரகோஷாவணி, லவுலாக்ஷி, கூர்ம்மிகை, குச்சிகை, பரிவாதிநி, கிந்நரி, வல்லகி வீணை, கிஸதி, ராவணஸ்வரம், சகளவல்லகி, ஆரவாளி, ஆநாவித, கைசிபவீணை, பிர்ம்மவீணை, சாரங்கவீணை, சரவீணை, ஆகாசவீணை, அந்தரவீணை, ருத்திரவீணை என்னுமிருபத்திரண்டு தந்திரிவாக்கிய வீணைக் கிரமமாம். பின்னும் மகதி, பிரகதி, கச்சளா, களாவதி யென்னு நான்குவீணைகளும், முறையே- நாரதர், தும்புரு, சரஸ்வதி,கந்திருவருக்குரியனவாம்.

அவை, துக்கடி, கிதாநுகந்தம், சுருதாநுகந்தம், உபயாநுகந்தம், வீணாநுகந்தம் என்னும் ஐந்துதிறமாக விருக்கும்.

அவை யெப்படியெனின், சாதி, மூகவை, சநிகை யென்னுமிவை மூந்தாதே பிரமாணித்து, அந்தந்தராகாநுகூலமாகக் கூட்டித் தந்திரிகளைக் களையேறுவித்துச், சத்தசுரபேதமறிந்து செநிசெநங்களை யாராய்ந்து கேட்போர் செவிக்குச் சோபிதமாகத் தந்திரிவாசிக்கும் வேத்தியரும்;

சாதி, சுசாதி, சுகுமாரிகா, பக்ஷ, புவந, சுவேத,ஆதித்திய, ருத்திர, அரி, நிதி, சிக்கு, ரிஷி, குமார, அகோர, பிர்ம்ம,திரிபுரை,சிவ,சத்தி, என்னும் பதினெட்டு வாசாலக்ஷணங்களின் லக்ஷணமறிந்து, அந்தச்சாதி, மூக, கலே,மணமும்,சயிதுவும்,புட்காம்பிறக்க,(உச)திறத்தில், ச, ரி, க, ம, ப, த, நி யென்னுஞ்சப்த சுராக்ஷரங்களிலி



ருந்து ஆரோக, அவரோகமுந்தாத, நாற்பத்தாறுபேதமறிந்து ஆலாபித்துக் கேட்பிக்கும், பரசுரரசாவாச விலாசத்திலிருந்து, சுத்தசராளங்க, சங்கீர்ண, டட, வணியளென்னுஞ் சதுர்வித மிருதங்கமும்; மேளம் கூட்டுக்கத்தரி, கொட்டுக்கதடியென்னும் பேதங்களையும்; தொந்தய, ஆலங்கிய, ஊர்க்கதமென்னும், திரிவிதக்கிரமமறிந்து பேசுவிக்கும் மத்தளிகரும்;

கந்தூவிச, படாவிச, குடபாவிச, அடாவிச மென்னும்நான்குதிற,ஆவிச மநோகரமாக்கும்ஆசியக்காரரும்;

தாளலக்ஷணம்.

தகாரமேருத்திரன், ளகாரமேபார்வதி உபயசம் புடமானநாதமே ஈச்சுவரனும். இந்தத்தாளமிரண்டு மொன்றுகக்கூட ஒருதுருவமாம்;இத்துருவமிரண்டு மொருமாத்திரையாம். அம்மாத்திரை இரண்டுகுருவாம். மூன்றுமாத்திரை புலுதமாம். ஒன்றரைப்புலுதம் நாலமாத்திரையாம்.இதேவிராமமாத்திரையாம். இந்தமாத்திரை யேறினல் சூக்ஷமநிமிஷார்த்தத்துக்கு வெஞ்சந காலாதீத அநாகதவர்த்தமானத்தின் கிரியாகாரமநேகமாகித்தாள உற்பத்தியாச்சுதென்று தாளவுதயந்தெளிந்து, அந்தத்தாளமாநத்தின், கால, மார்க்காதி (ரு௧) தாளமும், அங்கதாளம், பங்கதாளம், உபாங்கதாளம், விபாங்கதாளம்,சுத்ததாளம்,அநுதாளமென்னுமாறுவர்க்கசங்கியாபேதமாகி யிருக்குமென்று சொன்னபரதசாஸ்திரபரிணிதராகு தாளகிரகிகளும்; நாதத்தினில் திநந்திநத்துக்கு ரஞ்சிப்பதாகிய,சர,பாவ,சந்நிதான,ஆசிரியங்களென்னும் பிரபந்தாங்கிசசதுஷ்டயங்களைத் தெளிந்து,முக, திருஷ்டி, அஸ்த, பாதங்களென்னும் அவயவலக்ஷணங்கள்தப்பாமல்,மேலும்,முகரசமே ஆவம்.நேத்திரவிலாசமே பா

வம். பதநியாசம் தப்பாததேவிலாசம்.பிர ஈக்ஷணமேவி ப்பிரமமிச்சதுர்விதமோகநாங்கம் மெய்யினிற்காட்டிமா ர்க்கதேசிகமென்னும்மார்க்கத்துவயமும் அங்கங்கொண் டு, தாண்டவ, நாட்டிய, நிர்த்த, விலாஸ்மி,குண்டல, பே ககண, சல்லண: அபரீபாத்திர, சபாத்திர, சர்வ்வதோப த்திரமென்னுந் தசவிதபாத்திரங்களுங் காட்டிரஞ்சிக்க ப்பண்ணும் நிர்த்தநாயகியருஞ்சூழ.

இப்படிக் கீதாநுகுணமான வாத்திய, வாத்தியசா ரமான நிர்த்தமென்னுந் தூரியாத்திரயமுதலான சம்பி ரமங்களோடு ரஞ்சித்து, ஆந்தோளந, வஸ்திராபரண, வாகந இராச்சியபார விநயமென்னுந் தியாகாங்க, சத் தககதராகி, சத்தசமுத்திராதீஸ்வரராகிப் பிரசாபால நாதி சத்குணசம்பந்நராகித் தசதிக்குப் பரிதபுண்ணிய கீர்த்திமெய்யராகி ராச்சியபாரஞ் செய்திருந்தனர்.

பின்னும்அவர்களுள் சகரசக்கரவர்த்திக்கு,(கூ௰த) குமாரர்களுண்டு.அவர்கள்ஒரு அசுவமேதயாகத்தின் நி மித்தத்தால் தக்ஷணசமுத்திரத்தை(அ௲) யோசனைஅக லம் (கூ௰த) யோசனை நீளபூர்வ்வபச்சிம அகலமாக, அகழஅதனுள் சமுத்திரோதகம் வளையநடுத்திடர் சம் பூத்தீபாதி சப்ததீபங்களாயின. அவை பிரத்தியேகமாக ஓவ்வொன்றும் (௲) யோசனை விஸ்தீர்ணமுள்ளதாகி,மி லேச்சசாதி, ஈநசாதிகளுக்கு ஆசிரயமாகியிருக்கும்.

அவைகளுள் ஆயிரம்யோசனை கந்நியாகுமரியாதி இமோத்பர்வ்வத பரியந்தங் கந்நியாதீபமென்னும் பெய ர்பெற்றுப் பிராமணாதி சகலவர்ணங்களுக்கும் ஆஸ்பத மாகியிருக்கும்.

இவற்றுள்அநேகபரியாய பர்வ்வதவநங்களும் மூந் நூறுயோசனைபூமியிம மூடியிருக்கும். இந்தஇமசேதும



த்தியத்துள் (எ௱) யோசனைத்தலமே பிரசித்தமான பர தகண்டமென்பதாம்.

அதில் மயேந்திர, மலய, சைய, சுத்திமாந, விரு க்ஷபாரியாந்திரமென்னுஞ் சப்தகுலாசலங்களுண்டு.

அவற்றிலுதித்த நதிகள்ளவையெனின், திரிசாமிய இருஷகுலமென்னும் இரண்டுநதிகளும் மயேந்திரத்தில் பிறந்தன. கிருதமாலை, தாம்பிரபர்ணி யென்னு மிரண் டுநதிகளு மலயத்திலுதித்தன. கோதாவரி, சரஸ்வதி, கிருஷ்ணவேணி யென்னு மூன்றுநதிகளுஞ்சையபர்வ தத்திலுதித்தன. தப்தி, பயோட்டிணியென்னு மிரண் டுநதிகளும் விருக்ஷபர்வ்வதத்திலுதித்தன.நருமதை,சா சையென்னுமிரண்டுநதிகளும்விந்தியபர்வ்வதத்திலுதித் தன. வேதை, ஸ்மிருதியென்னு மிரண்டு நதிகளும் பா ரயாத்திர பர்வ்வதத்திற் றோன்றின. சதருத்திர, சந்திர பாகாவென்னு மிரண்டுநதிகளும் இமோத்பர்வ்வதத்தி லுதித்தன வென அறிக.

பலப்பிரோகி, மணிமுத்லத, மந்தாகிநி, கோமதி கங்கை, துங்கபத்திரா,கண்டிகை, காவிரி, கபிலை, கவுண் டலிநி, கௌசிகை, கேசரி, சரயு, சரஸ்வதி, சுவர்ண முகி, சோணபத்திரி, வாருணை, பத்திரா, நிரஞ்சநி,சா நுவி முதலான (௱) மகாநதிகளும், ஒருகோடி புண் ணியதீர்த்தங்களுமுண்டு.

அயோத்தி, மதுரா, மாயா, காசி, காஞ்சி, அவந் திகை, துவாரகையென்னுஞ் சத்தபுரங்கள் தன்னைஆ சரித்த பிராணிகளுக்கு முத்திப்பிரதாயகமாகும். அத னுள், காசியென்னுமொன்றே வாரணசி, காசி, அவிமு த்தம், அந்தரஜகமென நான்குதிறமாகும். அங்குமரண மானபிபீலிகாதி சகலபிராணிகளுக்கும்விஸ்வேஸ்வரன் தக்ஷணகர்ணத்தில் தாரகபிரம்மமந்திரமுபதேசித்துச்

சத்தியோமுத்தி சேர்ப்பிப்பதென்று சுராபாண்டேசுரா தி லிங்கதிருஷ்டாந்தமாகி வேதாகம புராணங்களில் பிர சித்தமாகச் சொல்லப்பட்டிருப்பதால் காசி சர்வ்வோத் கிருஷ்டமாம். மற்றத்தீர்த்தம்போலல்ல அதற்குச் சமா னமில்லை யென்றறிவதாம்.

இந்தப் பரதகண்டத்தில், அங்காதி, (நுசு) தேசங் களும், வெவ்வேறுநகரம், பட்டணம், கிராமம், கோட் டம், பாக்கம், முதலியவைகளும், சலதுர்க்க, வநதுர்க்க, கிரிதுர்க்க, கிர்த்திகாவநதுர்க்க மென்னும்துர்க்க சது ஷ்டயங்களும், அலங்கிருதமான துவாதசயோசனைக் கொவ்வொன்றுவிபாகமாய்நியதி, சொல், உடுக்கை, தொ டுக்கை முதலியகிரியாபேதத்தினல்வர்த்தித்திருப்பர். இ ப்பரதவருஷத்தில் அநேகவர்ணஜநங்கள் கிருதயுகாதி அநுக்கிரமத்தில், ஞாந, ஐஸ்வரிய, தேஜோ பலாதிகளில் ஏற்றக்குறைவுள்ளவர்களாகிக் கிருஷி, வாணிபம், சேவ கம், யாசகமுதலான அநேகவியாபாரத்தால் கஷ்டாந் போத்துருக்களாய்; சுசி, நித்திய, ஆத்ம, சுகமென்னும் மாயையில் மோகித்து, அவித்தை, அஸ்மிதை, ராக, து வேஷ அபிநிவேஷங்களென்னும் கிலேசபஞ்சகத்தா சையாகி, ஞாநவிகிருதிபாவ, வர்த்தநாவிகிருதிபாவ, மோகநவிகிருதிபாவ மென்னும் பாவத்திரயத்தில் பிரமி த்து, அர்த்தேஷணை, புத்திரேஷணை, தாரேஷணை எ ன்னும் ஈஷணத் திரயத்தின்தோஷத்தால் மிகநொந்து,

சாதி, வர்ண, ஆச்சிரம, குல கோத்திர, நாமமெ ன்னுஞ் சட்பிரமையால் பிராந்திகொண்டு, பிராண, புத் தி, தேகங்களுக்கும், முறையே ஒவ்வொன்றுக் கிவ்விர ண்டாக, அசந, விவரச, பிராண, சோக, மோக, புத்தி, ச ஞா, மரண, சோக, தேகமென்னுஞ்சதேர்மையால்பெருமை கெட்டுந், தநுவியசந, மநவியசந, தநவியசந, ராச்சியவியசந விஸ்வவியசந, உச்சாக வியசந, சேவகாவியசநமென் னுஞ் சப்தவியசநத்தால் மகிமைகெட்டுத், தேகாபிமா ன, மந்த, மதி, மோக, சட்பாவ, நித்திரா, நிஷேதகர்ம்ம ஆலசிய, சபலத்துவாதி, தாமதகுணத்தால்அதோலோக த்தை ஆசரித்தும், மத, மாந, மாற்சரிய, நிஷ்ரேத்துவ, காம, கபட, கோப, சண்டை, தர்க்க, கடுசோக, லோபாதி ரஸோ குணத்தால் மத்தியலோகதிதனுகியும், ரதி, வி ரதி, விவேக, விதரண, விநய, தயை, தமை, தர்ம்ம, தைரி ய, நிராபிமாந, நிர்த்தராகிச் சாத்வீககுணத்தினல்ஊர்த் தலோகஞ்சார்ந்தும். பூர்வ்வஜந்மாந்திரத்தில் செய்த சுகி ருத துஷ்கிருதகர்ம்மமே ஸமஸ்காரரூபத்தால் அநேகப வங்களுக்குப் பீசமாகிப் புத்தியிலிருக்குஞ் சஞ்சிதகர்ம் மம். அந்தச்சஞ்சிதகர்ம்மத்துள் இப்போதே ஒவ்வொரு தேகத்தை யாசரித்துப் போகங்கொடுப்பதே பிராரத்த கர்ம்மம். அது உண்ணச்செய்வதேபாவம்முன்னுக்கு ஆ காமியகர்ம்மம். இந்தக்கர்ம்மத்திரயத்தால் நொந்து பாவ கர்ம்மாதீநத்தில் வியாகூலமுள்ள சித்தமென்ன ஆதி யாத் மீகத்திற்பிறந்த துக்கரூபம மகோததியாத்மீகமெ ன்பது. வியாக்கிரபுஜங்காதி யென்னும் அதிபூதபயத்தி ருந்துபிறந்த துக்கரூபம், ஆதிபௌதிகமாம். அதிர்ஷ் டவாதவருஷாதிகளால்ஆதிதெய்வீகத்திற்பிறந்த துக்க ரூபமே ஆதிதெய்வீகமென்பதாம். இவை தாபத்திரய த்தின் உருக்கெட்டு (அக) வகைவாதம், (சுச) வகைபி த்தம் (உ௰௫) வகைசிலேஷ்பமான (௱௭௰௫) பேதமா ய் ரோகரூப தோஷத்திரயத்தால் பலங்கெட்டுக் காவாக மேறி இக்ஷுதண்டம்பிடித்துப் பீதவர்ணரூபமான கா மத்தால் குருதாரங்களுக்கு ஆசையாய், மைஷவாக நமேறித்தடிபிடித்து ரத்தவர்ணரூபமான குரோதத்தா ல், உடலுள்ளிருந்த கலாதிகளைப் பஸ்மஞ்செய்து கெடு த்து; மார்ச்சாலவாகநமேறிச் சுரிகைபிடித்துத் தமோ

வர்ணமாந லோபத்தால் இகபரலோகத்தைநீக்கிச், சு ணங்கவாகநமேறி தோட்டிபிடித்து வெகுவர்ணரூபமா னமோகத்தால் நித்தியாநித்தவஸ்துவிவேகவீநனுய்ச்,சூ கரவாகநமேறி அங்குசம்பிடித்துக் கிருஷ்ணவர்ணரூ, பமான மதத்தால் நீதியீநனுகி, அகிவாகநமேறி, முசல ம் பிடித்து மோகவர்ணரூபமான மாற்சரியத்தால் பாகு ணம் நிராகரித்து; இப்படிமநோவிகாரரூபமான அரிசடு வர்க்கமும்பரிபாவித்துப் பூர்வ்வதளத்தில்புண்ணியமதி அக்கிநிதளத்தில் நித்திரை ஆலசியம், இயமதளத்தில் குரோதபுத்தி, நிருதிதளத்தில் பாபகிர்த்தியம், வருண தளத்தில் விரோதம், வாயுதளத்தில் கமநம், குபேரத ளத்தில் ரதிப்பிரீதி, ஈசாநதளத்தில் திரவியாதீநம், மத் தியதளத்தில் வைராக்கியமென்னும் இருதயகமலத்தின் அஷ்டதளகதிகளால்சுழன்றுசுழன்று,லிங்க,ஈச,சூத்திர விராட், ருத்திர,பிர்ம்ம,விஷ்ணு, விக்கிநேச்சுவர, குமார விரஷப, வைரவ, யக்ஷ, ராக்ஷஸ, கௌரி, துர்க்கை, லக்ஷ்மி, சாரதா, மாத்ருகை, யக்ஷணி, யோகிநி, பசு, அசுவ,மிருக, பக்ஷி, புட்டு, சாலக்கிராம,புஸ்தக, அச்சுவத்த,பாஷாண,காஷ்ட,மிருத்திகை,சித்திரரூபவாச்சி,குந் தாலி, மண்வெட்டிமுதலிய வெகுதேவதோபாசனைகளா ல் அந்தந்தப் பூச்சிய பூசாநுசாரமான தாரதம்மிய கதி யையெய்திச் சகலசஞ்சாரிகளாகி யிருப்பர்.

இப்பரதகண்டத்தில் செய்தகர்ம்மபலன், இளாவி ருதாதிவருஷங்களிலும், தீபாந்தரங்களிலும், சுவர்க்கா திலோகங்களிலும், அநுபவிப்பதாகி,இக்கர்ம்மபூமிமற்ற ப்போகபூமியாகும். அதனுல் அந்தப்போகபூமிக்கே இக்க ர்ம்மபூமிகாரணமாகும். இங்குள்ள சகலபிராணிகளுக்கு ம் அகற்பிதமரணமில்லாவிடின், விதிகல்பித ஆயுள் எ றும்புக்கு (கரு) நாள். ஆட்டுக்கு (கஉ) வருஷம். சுணங் கனுக்கு (கரு) வருஷம், கோவுக்கு (உ௰) வருஷம். எரு



மைக்கு (ங௰) வருஷம். குதிரைக்கு (ஙஉ) வருஷம். நர ருக்கும், யானைக்கும் (ா) வருஷம். பக்ஷி, சர்ப்பங்களுக்கு (து) வருஷம். நரருக்குப் பாலிய, விருத்த, யௌவந, நே த்திர, சர்ணும, மதி, சோத்திர, விஷய, உத்தாந, பதந மென்னும் பத்தும்முறையே, ஒவ்வொன்றுக்கும் (௰) வ ருஷமாக இருக்கும்.

வநிதாதிவிஷயசாதநங்களுக்கு, தாற்காலிக, போ க, ஏதத்துவ, பரணுமத்துவ, நிராசத்துவ, அவிசாரி, ர மணிய, ஏதத்துவக்ஷண, பங்குரத்துவாதிகளும், சொப் பனப் பிரபஞ்சத்துடனே சமானமாவதால் சகலவிஷ யங்களெல்லாம், பேய்த்தேர், நிரக்ஷர, ஆலாங்கட்டி, நீர் க்குமிழி, தீபச்சுவாலை இவைமுதலானவைபோல், நிய மமில்லாமல் கெடுவதென்றறிந்து, சர்வ்வதாஸ்திரமில் லதென்று கண்ணுற்கண்டு, செவியாற்கேட்ட விவேகி கள் இப்பரதகண்டத்தில் முன்நித்தியசுகஞாநங்கள் சம் மியமாக ஆசரிக்க வேண்டுமென்பதே சத்தியம். இப் போது சொன்ன பரதவருஷமுதலான நவகண்டங்களு ம் அவ்வவற்றின் வியாபகசைலங்களும் யோசனைக்கிர மத்தின் ஒருலக்ஷம் யோசனை விசாலமான சம்புத்தீ பமாகும். இச்சம்புத்தீப ஸ்திதிவர்ணனைசம்பூரணம்.

விவேகசிந்தாமணியில்,

நான்காவது,

பூலோகஸ்திதியுரைத்த பரிச்சேதம்

முற்றிற்று.

---

உ

சிவமயம்.

ஸ்ரீகுருப்யோ நமஃ

# விவேகசிந்தாமணியில்,

## ஐந்தாவது,

## தீபாந்தரஸ்திதியுரைத்த பரிச்சேதம்.

பூலோகத்தின்சம்புத்தீபஞ்சொன்னேன் மற்றத்தீபங்களுஞ் சத்தசமுத்திரத்தின் வர்ணனையுஞ் சொல்லுவேன்.

### சாகாதிதீபங்கள்.

எப்படியெனின் இந்தச்சம்புத்தீவின் புறத்தில் வளைந்திருக்கின்ற லவணசமுத்திரம் லக்ஷம் யோசனை விஸ்தீர்ணமாயிருக்கின்றது. அதில் கமட, கர்க்கடக, சலூக, மகரமச்சாதி மகா சலசரப் பிராணிகளாகிய பத்துலக்ஷம் ஜாதிகளுக்காசிரயமாகி, முத்து மாணிக்க பவளாதி நவரத்நங்களுக்கு ஆதாரமாகிப் பேன, தரங்க, புற்புதாதிகளால் கோஷிக்கும்; இந்தலவணசமுத்திரத்தின் புறத்தில் ஆவரித்துச் சுவேதவர்ண பூமியுள்ள சாகத்தீபம் இரண்டுலக்ஷம் யோசனைவிசாலமாகி யிருக்கும். அதற்கு மேதாதிதியென்பவன் அரசனும். அவனுக்குச் சாந்த, பய, சிசிர, சுபோத, அநந்த, சிவக்ஷேமக, தத்துருவனென்னும் எழுபிள்ளைகளுண்டு. பிதா இந்தத்தீபத்தை, எழுகண்டமாகப்பிரித்து எழுவருக்குங் கொடுத்தனன். அவரவர்பாகம் அவரவர்பெயரினால் பெயர்வழங்குகின்றது. அவற்றுள் பூர்வ்வாதி பிரதக்ஷணமாக, கோமேதகிரி, சந்திரகிரி, நாரதகிரி, துந்துபிகிரி, சுமணகிரி, அங்சகியகிரி வயிப்பிரிசகிரி, என்னும் எழுகிரிகளும்



இவைகளில்தோன்றிய அநுதத்தை, சிகி, விபர்ப்பை, திரிதியை, கலமகனா, அம்மிருதை, சுக்கிருதைகளென்னும் நதிகளும் அக்கண்டங்களில் பாய்ந்து சமுத்திரகாமிகளாயிருக்கும். அந்தக்கண்டங்களேழுக்கும் ஒவ்வொன்றுக்கு மெவ்வேழுகுலபருப்பதங்களும், க்ஷுத்திரகிரிகளும், நதி, நத, வனாதிசோபநங்களநந்தமுண்டு. அங்குள்ளவர்கள் மூன்றுபனைமர உயரமுள்ளவர்களாகிக் கற்பகவிருக்ஷ பலாகாரராகி (௰௲) வருஷாயுள் உடையவராய் நரைதிரைகளில்லாமல் அரநாமலிங்க பூசகராகிப் பரம ஐச்சுவரியத்தோடிருப்பர்.

சாகத்தீவின் புறம்பாவரித்து க்ஷீரசமுத்திரம் இரண்டுலக்ஷம் யோசனை விசாலமாக விருக்கும் ஆகல்லியதாராதேவி, சுதை, சுதாங்குச, சுரர்தரு, சுரதேனு, சிந்தாமணியென்னு முக்கியவஸ்துக்களுதித்திருக்கும் அதில் (௰௲) யோசனை விசாலத்தின் கநகமணிமயமான அரண்மனையில் நாராயணன் அநந்த சயநனாகியிருப்பன்.

அந்த க்ஷீரசமுத்திரத்தை ஆவரித்து நீலவர்ணமயமான பூமியுள்ள குசத்தீபம் நாலுலக்ஷம்யோசனை விசாலமாயிருக்கும். அதற்கு ஒபூஷக்குருமந்தனென்பவன் அதிபதியாம். அவனுக்குச், சுவேத, பரித, சீமுத, லோகித, வயித்துதக, மானச, சுப்பிரபனென்னும் எழுபிள்ளைகளுண்டு. அவர்களுக்கு அவன் அத்தீபத்தை எழுபங்காக்கிக் கொடுத்தனன். அவரவர் பெயரினால் அக்கண்டம் வழங்குகின்றது. அவற்றுள் பூர்வ்வாதி பிரதக்ஷணமாக, குமுதநகம், உன்மதந்துநகம், வலாநகம், கேதுநகம், துரோணநகம், மயிஷிகநகம், திருத்தநகம், எனச் சத்தபர்வ்வதங்களும், இவற்றில் தோன்றிய, யோகி, தோயி, வித்திரி, சந்திரா, சுக்கிலை, விமோசிநி, நி

வர்த்தி என்னும் ஏழுநதிகளும், பரந்து சமுத்திரகாமி னியாய் அக்கண்டங்களேழில் ஏழேழுகுலசயிலங்களும் சாமானியகிரி, நதி, நதவநாதிகள் அநேகரசனைகள் சங் கியை யில்லாதவையுண்டு. அங்குள்ளவர்கள், ஒருபனை ப்பிரமாணராய்க் கற்பகவிருக்ஷ பலாகாரிகளாக (௨௰௲) வருஷாயு ளுள்ளவர்களாக நரைதிரை யில்லாமல் ருத் திரநாமலிங்கபூசகராகிச் சுகித்திருப்பார்கள்-ஒரு பனைப் பிரமாணமென்பது மனுஷருடைய (௪௰) சாணாகும்.

அந்தக் குசதீபத்தை ஆவரித்து மத்தியசமுத்தி ரம் (௪) லக்ஷ யோசனையாகவிருக்கும். அதைஆவரித் துக் கபிலவர்ணபூமியுள்ள கிரௌஞ்சத்தீபம்(௮) லக்ஷ ம்யோசனை விசாலமுள்ளது;அதற்குச்சோதிசுமந்தனெ ன்பவன் அரசனும். அவனுக்கு; உத்துப்போத, வேணு மானு, சயிரத, லம்ப, தருதி, பிரபாகர, கபிலனென்னு மேழுபிள்ளைகளுண்டு. அவன் அவர்களுக்கு அத்தீவை ஏழுபங்கிட்டுகொடுக்க அவர்கள் பெயரினால் அகண்டங் களுக்குப்பெயருண்டாயின. அவற்றில்,பூர்வ்வாதி சீமா பர்வ்வதம், வித்துருமபர்வ்வதம், இமபர்வ்வதம்,துதிமா நபர்வ்வதம், புஷ்பமாநபர்வ்வதம், குசபர்வ்வதம், மந் தாரபர்வ்வதங்களும்,இவற்றுதித்த தூத, பாபை, சிவை பௌத்திரை, சம்மந்திது, திதம்பை, மயிஷிகை, சர்வ்வ, பாபகரை என்னுநதிகளும் பரந்து சமுத்திரகாமினியா ய்ச் சாதாரண சத்தகுலபர்வ்வதங்களும் நதிநதவநாதி ப ரிகற்பிதங்களாம் அங்குள்ளவர்கள், மூன்றுபனைப்பிரமா ணராய்க் கற்பகவிருக்ஷ பலாகாரிகளாய் (௨௰௲) வருஷ ஆயுள்பெற்று நரைதிரைகளில்லாமல் ஸ்தாணுநாமலிங் க பூசகராய்ச் சதாநந்திகளாக விருப்பார்கள்.

கிரௌஞ்சத்தீவை ஆவரித்துக் கிருதசமுத்திரம் எட்டுலக்ஷம் யோசனை யகலமாயிருக்கும். அந்த ஆவரி



த்துரத்தவர்ண பூமியுள்ள சான்மலத்தீபம்(௰௬)லக்ஷம் யோசனைவிசாலமாம்.அதற்குவிதிமந்தனென்னுமரசனு ண்டு.அவனுச்குக் குசல,மநோ,அநுக,ஊவோஷ்ண,பிர னுவர, அந்தகாரமுநி, வதிஷ்டனென்னும் ஏழுபிள்ளைக ளுண்டு. அவன் அத்தீபத்தை ஏழுபாகஞ்செய்து அவ ர்களுக்குக் கொடுத்தனன், அவரவர் பெயர்களே அக்க ண்டங்களுக்குப் பெயராயின. அதை ஆவரித்துப் பூர்வ் வாதியாகக் கிரௌஞ்சநக,வாமநகிரி,அந்தகாரசைலம்,தி வாவிருக்ஷபர்வ்வதம், விவிதசிகிரி, புண்டரீகாத்திரி, துந்துபி கோத்திரமென்னும் பர்வ்வதங்களுண்டு.இதில் தேவர்கந்திருவர்களிருப்பர். அவற்றிற் றோன்றின கௌ ரி, குமத்துவதி, சந்தியாராக, மநோசகுல, சகியாதி, பு ண்டரீகை, புண்ணியவதி என்னுநதிகள் ஒவ்வொன்று ஒவ்வொரு கண்டத்தில் பாய்ந்து சமுத்திரகாமினியாய் அக்கண்டங்க ளேழிலுஞ் சமாநியகுல கிரிகளேழும்நதி நதவநாதி அநந்த விசித்திரங்களு முண்டு. அங்குள்ளவர் கள்மூன்றுபனைஉந்நதராய்க்கற்பகபலாகாரராய் (௨௰௲) வருஷ ஆயுள்பெற்று நரைதிரையில்லாமல் பிமேசநாம லிங்கபூசகராய்ச் சுகசுவரூபராயிருப்பர்.

அக்கிரௌஞ்சத்தீபத்தை ஆவரித்து இக்ஷுசமுத் திரம் (௰௬) லக்ஷம் யோசனையாகவிருக்கும் அதையாவ ரித்து ரத்தவர்ணபூமியுள்ள புஷ்கரத்தீபமிருக்கும் அது (௱௰௨௲) யோசனை விஸ்தீர்ணமுள்ளது. அதற்கு பௌ விய னென்பவன் அரசன் அவனுக்கு, ஜலத, குமாரக, ம ணிசக, சுகா, உத்தம, கலூதை குருஷ்டன்என்னும் ஏழு பிள்ளைகளுண்டு. அவர்களுக்குப் பிதா அத்தீபத்தை ஏ ழுபங்காக்கிக்கொடுத்தனன். அக்கண்டங்களுக்கு அவர் கள் பெயரேபெயராக வழங்குகின்றன; அக்கண்டங்களை ச்சுற்றிப் பூர்வ்வாதியாக,உதயாசல,ஜலதாஜல,ரைவதகா சல, மயிந்திராசல,சாமாத்திரீயசல, அம்போததிரியசல,

அம்பிகாந்திரியசல,ரம்மியகாந்திரியசல மென்னச் சத்த பர்வ்வதங்களும், அவற்றிலுண்டான, பாபபயிநை,மகா புண்ணியை, குமாரி, சுகுமாரி, நளிநி, வேணுங்கை, செ ணயயென்னுமேழுநதிகளும், அக்கண்டங்களில் பரந்து சமுத்திரகாமிநியாகும், அக்கண்டங்களில் ஏழுகுல கிரிகள், க்ஷுத்திரகிரிகள், நதி, நத, நந்தநாதிகளுமுண்டு. அங்குள்ளவர்கள் மூன்றுதால உயரமுள்ளவர்களாகக்க ற் பகபலாகாரிகளாய் (௨௰த) வருஷ ஆயுள்பெற்று நரை திரையில்லாமல் விசுவேச்சுவர நாமலிங்கபூசகராய்ச் சுகி த்திருப்பர்.

அந்தப் புஷ்கரத்தீவை ஆவரித்துத் ததிசமுத்தி ரம் (௩௨)லக்ஷம்யோசனை விஸ்தீர்ணமாக விருக்கும். அ தைச்சுற்றித் தவளவர்ணபூமியுள்ள பிலக்ஷத்தீபம்(௬௪) லக்ஷம்யோசனை விசாலமுள்ளது. அதற்குச் சவன் என் பவன் அரசன். அவனுக்கு, தாதுகி, சுகோற்கருஷன் என இரண்டுபிள்ளைகளுண்டு. அத்தீபத்தை யிரண்டா கப்பிரித்து அவர்களுக்குக் கொடுக்க அவர்க ளுடைய பெயரோ அக்கண்டங்களுக்குப்பெயராயின. அவற்றின் மத்தியில் மாநசோத்திர பர்வ்வதமிருக்கும். அதில், யக்ஷ ராக்ஷச, கருட, கந்திருவராதியர்பட்டணங்கள் அநந்தமு ண்டு. அதன்உத்தரபாகம் தாதுகிக்கும். தக்ஷணபாகம் சு கோற்கருஷனுக்கும் சொந்தமாம். அக்கண்ட துவயத் தில் மகாநதிகள் க்ஷுத்திரகிரிகள், நதி, நதாதிகள், நந் தநவந நாநாரசனைகளுண்டு. அதிலுள்ளவர்கள் மூன் றுபனையுந்நதராய்க் கற்பகபலா காரதராய்(௨௰த)வருஷ ஆயுள்பெற்று நரைதிரையில்லாமல் சோமேசநாமலிங்க பூசகராகி நித்தியசுகியாயிருப்பர்.

பிலக்ஷத்தீவை ஆவரித்துச் சுவாதோதக சமுத்தி ரம் (௬௪) லக்ஷம்யோசனை விசாலமாகி சமஸ்தமே க



மாலைகளுக்கும் உதகங்கொடுத்துச் சகலலோகோபகார மாக விருக்கும். இதை ஆவரித்துச் சர்வ்வதேவதைகளு க்குங் கிரீடார்த்தமான இரணிய மயபூமி தசகோடியோ சனை விசாலமுள்ளதாகச் சங்கப்பிரமாண சலமயமாகி நிர்ச்சரப்பிர தேசமாகியிருக்கும். இதை ஆவரித்துச் சுர சந்ததிக்காஸ்பதமான சூரியன் ரதசக்கரம் சஞ்சரிக் கிறவிடமான தன்தக்ஷணபாக மாதியாகச் சூரியப்பிர காசப் பிரவேசத்தினில் விளங்கு முத்தரபாகமானக டையினில் சூரியப்பிரகாச மில்லாததாகித், தமமுள்ள தாகி,லோகாலோகபர்வ்வத மென்னும் பெயரையுடைய தாகி யிருக்கும். அந்தக்கிரி கோட்டைபோல இரணிய பூமியை வளைந்து (௰த) யோசனைவிசாலமும், (௫௰த) யோசனை யுயரமுமாகியிருக்கும்.

அந்தக்கிரியின்மேல் சூரியன் ரதத்துக்குத் தமோ பூமி ராக்ஷசர் விக்கிநமாகாதபடி இந்திராதி திக்குப்பால கர் தம்முடைய பதாதிமுதலான சைநங்களோடு தந்தந் திசைகளைக் காத்துக்கொண்டிருப்பர். அந்தச்சாகையி ல் தமமூடியபூமி (௩௫) கோடியே (௰௫) லக்ஷத்து(௪௰த) யோசனை விஸ்தீர்ணமுள்ளதாக விருக்கும். அதில்நிசா சர இராக்ஷதர்களிருப்பர். பின்னும் அந்தச்சாகையில் கர்ப்போதகசமுத்திரம் ஒருகோடியே (௨௭)லக்ஷம்யோ சனை விசாலமாக இருக்கும் அதில் வலம்புரிச்சங்க கிரி கச்சபம், திமிதிமிங்கிலமாதி மகா சலசரப் பிராணிக ளும் உண்டு.

அந்தத் திமிங்கிலமீன்கள் நிரீக்ஷித்துச் சையோக மதநத்தில் கூடில் அச்சமுத்திரசலம் உப்பி சமஸ்ததீ பங்களுள்ளாகும்படி ஜலப்பிரளய முண்டாகும். அச்சு முத்திரமத்தியில் மஹாபர்வ்வதா காரமான கமடம் ஒ ன்று சோபையாக இருக்கும். அதன்சாகையில் பிர்ம்மா

ண்ட கடாந்தமான ஆகாசம் ஒருகோடியோசனை விசா லமாக விருக்கும்.

பின்னும் இந்தக்கிரமத்திற்சொன்ன யோசனைப் பி ரமாணம் எண்ணிப்பார்க்கச் சம்புத்தீபமுதலான ஏழு தீபமும் லவணுதி சமுத்திரமுந் தனித்தனி ஒருகோடி யே (உஎ) லக்ஷப்பிரமாணமாம். இருண்மயபூமி தசகோ டி யோசனைப்பிரமாணமாம்.

லோகா லோகபர்வ்வதம்(ய்த)யோசனைப்பிரமாண மாம். தமோமயபூமி (ருடு) கோடியே (யகூ) லக்ஷத்து, (சூய்த) யோசனைப் பிரமாணமாம். அந்தத் தமோமயசா கை கர்ப்போதக முத்தரம் ஒருகோடியே (உஎ) லக்ஷம் யோசனைப் பிரமாணமாம். அந்தச்சாகைவெளி ஒருகோ டியோசனைப் பிரமாணமாம். இந்த ஐம்பதுகோடியே (ருய்த) யோசனைக்குள் ஒருலக்ஷம் யோசனைப்பிரமாண மான சம்புத்தீபத்துக்கும், மேருமத்தியமமான காரண த்தின்மேல் (ருய்த) யோசனைகழிக்க மேருவின் அர்த் தபாகாதி பிரமாண்ட கடாந்தமான பூமிபஞ்சா தச கோடியோசனைப் பிரமாணமாகும். இந்தக்கிரமத்தினில் மேருவின் பூர்வ்வபச்சிம, தக்ஷண, உத்தர, கடையான பிர்ம்மாண்டாந்தம். நூறுகோடியோசனைப் பிரமாண மென்று நிச்சயமாகும்.

இந்தமத்திய லோகஸ்திதிவர்ணனை நாமபஞ்சமப ரிச்சேதஞ் சம்பூரணம்.

விவேகசிந்தாமணியில்,

ஐந்தாவது,

தீபாந்தரஸ்திதியுரைத்த பரிச்சேதம்

முற்றிற்று.

---



சிவமயம்.

ஸ்ரீகுருப்யோநமః

# விவேகசிந்தாமணியில்,

## ஆறுவது,

### ஊர்த்தலோஸ்திதியுரைத்த பரிச்சேதம்.

முன்பரிச்சேதத்தில் பூலோகஸ்திதி விசிதமாகச் சொன்னேன். இந்தப்பரிச்சேதத்தில் ஊர்த்தலோகஸ் திதியைத் தெரியச்சொல்லுவேன் சாதகருக்கு ஆச்சரிய முண்டாக எப்படியெனின்.

பூலோகாதி துருவமண்டல பரியந்தம் (ருய) யோ சனை யுந்நதத்தின்மேல் புவர்லோகமிருக்கும். அதில் வா யுவாதாரமான சப்தமேகங்களுக்கும், சித்தர், கந்திருவர் களுக்கும் ஆச்சிரயமான சூரியாதி நவக்கிரகங்களும் உ த்தரோத்தரமா யிருக்கும் எப்படியெனின்.

### வாயுமண்டலம்.

முதல் தன்வாயு பூதலத்தின்மேல் (ருய) யோசனை பரியந்தம் வியாபித்துக்கொண்டு பூமியில் சகலஓஷதி களையும் வளர்க்கும். அந்தவாயுவுள், ததிவாகனென்னு ம் வாயு இத்தனையில் வியாபித்துச் சமஸ்தபிராணிகளு க்குந் தீபநங்கொடுத்துச் சாகமந பக்ஷிபறப்பதற்கும் ஆதாரமாகிச் சுககரமாயிருக்கும்.

பின் அந்தவாயுவிலுதித்த பிரசேநனென்னும் வா யு ஒவ்வொருவேளையில் வெறிக்காற்றுகவடித்து, விரு க்ஷங்களை முறித்துப், பாவகனைஎழுப்பிக் கிரகங்களைத் த கிப்பித்துச்சமுத்திரவடவாக்கினியைச் சொலிப்பிக்கும்.

அதன்மேல் செசனென்னும் வாயுபஞ்சுவர்ணமுககனென்னும் மேகத்தை, சுவாதோதக சமுத்திரத்திலானாலும், லவணோதக சமுத்திரத்திலானாலும் உதகமுகந்து பூமிக்கு நூற்றைம்பது யோசனை யுந்நதத்தில் தெப்பம்போல மிதக்கச்செய்து, அதிலுள்ள ஜலத்தைக் கிரிவநக்ஷேத்திரங்களில் சல்லடைகொண்டு சல்லுவதுபோலச் சல்லிப் பூமிக்குக் காததூரத்தினின்று மழையாகப் பொழியச்செய்து மழையின்காந்தி யதிகரித்து வாயு வந்நிஜல சம்பந்தத்தைக் கொண்டிருக்கும்.

மற்றந்தச்சுவாதோதகம்இப்படிவிசித்திரமானபூமியின் சம்பந்தத்தினால் ரசவிசித்திரமாகும். லவணசமுத்திரோதகம், அந்தந்த வெகுவாசநா மேகசம்பந்தத்தினால்,சுவாதோதகமாம். மழைபெய்யும் போதெல்லாம், அந்தவாயு பூமிக்கு ஒருகாதப் பிரமாணத்தில் மேகங்களைநிறுத்துமென் றறியவேண்டும்.

பின்னும் (ாருய) காதயோசனைக்குமேல் (ா) யோசனையுந்நதாந்தரத்தில் அசேசநியென்னும் வாயுசத்துவாஹங்கனென்னு மேகங்களால் தந்த உதகத்தில் மண்டூக, மச்ச, கூர்ம்மங்கலந்த மழைகளைச் சிதறுவிக்கும்.

அதன்மேல் (ருய) யோசனை உந்நதத்தில் மேகமென்னும் வாயுஔஷதமென்னு மேகங்களால் தந்தசலம் விருஷ்டியாகிப் பூமியிலுள்ள சநங்களுக்கு அச்சலபாநத்தால் துக்கங்கொடுக்கும்.

அதன்மேல் (ருய)யோசனை யுந்நதத்தில் நின்று அமோகமென்னும் வாய்வு, மாருதனென்னும் மேகம்பெய்த உதகத்தால் பூமியிலுள்ள பிராணிகளுக்கு மரணங்கொடுக்கும்.

அதன்மேல் (ருய) யோசனை யுந்நதத்தில் நின்று வைச்சிராங்க னென்னும் வாய்வு, பலகாங்கயனென்னு



மேகம் பெய்தசலத்தால் விருக்ஷாதிகளின் பல்லவகுசும, பலங்களைப் பலிதமாக்கும்.

அதன்மேல் (ருய)யோசனையுயரத்தில் வத்துதமென்னும் வாயு மேகங்களின் சம்பந்தத்தினால் இடியை (சாருய) யோசனைதூரத்தில் கர்ச்சிக்கச்செய்து; மழைபெய்விக்கும்.

அதன்மேல் (ருய) யோசநாந்தத்தில் ரைவத்கனென்னும் வாயு, புஷ்டிவாகனென்னு மேகத்தாற் பெய்வித்த ஜலபாந பரிசநங்களால் புஷ்டிகளாக்கும்.

அதன்மேல் (ருய) யோசனைதூரத்தில் சங்கவர்த்தனென்னும் வாயு ரோஷதனென்னு மேகங்களாற் கொடுத்த ஜலத்தினாலும், அதன்மேல் (ருய) யோசனைக்கு மேலிருக்கும் விஷமவர்த்தனென்னும்வாயு முன்ரோஷதனென்னு மேகங்களாற் றந்தஜலத்தினாலும் பூமியிலுள்ள ஜநங்களுக்கு வியாதிகளுண்டாக்கும்.

அதன்மேல் (ருய)யோசனைதூரத்திலுள்ள விஷமவர்த்தனென்னும் வாயு குரோதனென்னு மேகங்களாற் றந்த சலஞ்சோனையாகப் பெய்ய அந்த ஜலபாநத்தினால் ஜநங்களுக்குக் குரோதயுத்தங்க ளுண்டாகும். பின்னும் அந்த விஷ்டிகளால் ராக்ஷசருக்குச் சங்காரங்களுண்டாகும் அவ்விடத்தில் தூமஜோதி சலிலமாருதங்கள் கூடமேகங்களாம். அந்த மேகங்கள் பெய்யும்போதுமேஷாதி (யஉ) ராசிகளும், அசுபதிமுதல் (உஎ) நக்ஷத்திரங்களும், தங்கள்தங்கள் அதிகாரஞ்செய்யும்.

அவற்றுள் ஒவ்வொரு நக்ஷத்திரமும் நந்நான்குபாதமாகி மேஷாதி ஒவ்வொருராசிக்கும் ஒன்பதொன்பதுபாதமாகச் சேர்ந்து வர்த்திக்கும். அம்மேஷாதியுதயமேலக்கிநமாம், அந்தலக்கிந சுபாசுபருபத்தின் பூஷணமான நக்ஷத்திரங்களின் தசகால கர்ம்மவசத்தால் சூவி

ருஷ்டி, அற்பவிருஷ்டிகளாகி நரருக்குப் போகசாதநங்களைக்கொடுக்கும்.

அப்படியாகும் மழைகளைச் சூரியகிரணதாரத்தால் இந்திரன் தன் ஆக்கினையைக் கொண்டு பெய்யச்செய்வன். இப்படிவாயு, மேகம், மழை, மின்னல் முழக்கம், ஆலிகளைக்கர்ப்பிகரித்துக்கொண்டு மேகங்களிருக்கும் பிந்தத்தின்மேல் (௯௲௯௱) யோசனைப் பிரமாணத்தின் மேல், மோக, அமோக, வச்சிராங்க, வயித்துதக, ணாவதக, சங்வர்த்தக, விஷமவர்த்தக மென்னும் ஏழுபவநாதாரத்திலிருந்து உத்தரோத்தரமான விசித்திரமேகா சிரயபட்டணங்களில் (௩௰௲) ரௌத்திரமூர்த்திகள் காமரூபிகளாய் மகாப்பராக்கிரமராய், பூமியாதி சகலலோக சஞ்சாரியென்னுஞ் சண்முகனை ஆராதித்திருப்பர்.

## பாலாரிஷ்டதேவதைகள்.

பிசாசதேவதைகளும், தந்தை, பீஷணி, காளிகை, பீமரூபி, அங்குசிநி, பூதிநி, முத்தகேசி, ஆகாசிநி, அரிகோராதிநி, சகுநி, பூமாயி, உத்தமி, பிங்கலை, கோகர்ணி, பங்கஜை, ஸ்ரீமுகி, சேநி, கும்பகர்ணி, தாபதை, காலார்க்கி, நந்திநி, குரோதிநி, தாணுநி, சாகிநி, பஞ்சாளை, காமிநி, மேதிநி, நளிநி, மகாகும்பிநி, அரநி, ஆகாசகர்ணி, வாயுவிசிக்கிநி, சுகந்திநி, வநதேவி, குண்டநியென்னுந் தேவதைகள் பத்துத்திநாதி (௰௬) வயதுவரையிலுள்ள பாலகரைப்பிடித்துத் தங்கள் தங்கள் விகாரங்களைகாட்டி வெவ்வேறுனபலிபூசை கொள்வர்.

## மேகாசிரயபட்டணாதிபர்கள்

அதன்மேல், மோக, அமோகமென்னுமிரண்டு பவநாதாரங்களின் மேகாசிரியபட்டணங்களில் ருத்திரனிற்றோன்றிய, நீலாஞ்சநவர்ண;ஸ்தூலகாய, கசவக்திர, மகோதரசர்ப்பாபரணமுள்ள (௩௰௲) கோடி விக்கிநேச்சுவரர் இந்தமத்தியலோகத்தின் துர்ம்மார்க்கர் செய்யுஞ் சற்கர்ம்மபலத்தை அபகரித்துக்கொண்டு மிக்கபலமுள்ளவர்களாக விருப்பர்.



அதன்மேல் வச்சிராங்கமென்னும் மூன்றாம்பவநாதார மேகாசிரயபட்டணத்தில் பின்னுமஞ்சநகாந்திமயமாயும்பீகாகாரமான தேகயுக்தரானகோடாகோடி வீரர்கள் மசாநபூதவேதாளமந்திர சாதகர் இந்தலோகத்தின் மசாநருத்திரர்களாக வீரகல்லியரூபத்தினில் பலிபூசை கொண்டிருப்பர்.

அதன்மேல் வயித்துதகமென்னும் நான்காம் பவநாதார மேகாசிரய பட்டணத்தில் தேவேந்திரனுக்கினையினுல் அப்சரனென்னும் வீரதேவதைகள் இப்பூலோகத்தில், குரல் கொய்துகொண்டும், அக்கிநியில் விழுந்தும், ஜலத்தில்புகுந்தும், போரினைப்புரிந்தும், கோகரணத்தைச்சேர்ந்தும், பராக்கிரமத்தினுலு மடிந்தவர்களைத் தேவகந்நியர் சூழமணிமய விமாநத்திலேற்றி வீரசுவர்க்கஞ்சேர்ப்பிப்பர்.

அதன்மேல் ணாவதகமென்னும் ஐந்தாம்பவநாதார மேகாசிரயபட்டணத்தில் மகாசித்தரிருப்பர் அதில் இப்பூமியில் மந்திரசத்திப் பிரதாபர், மந்திரசாதகர்கள் அடைவர்.

அதன்மேல் சங்வர்த்தகமென்னும் ஆரும்பவநாதார மேகாசிரயபட்டணத்தில் (௱) கோடிவித்தியாதரர் மகதைச்சுவரியத்தோடிருப்பர்.

அதன்மேல் விஷமவர்த்தகனென்னும் ஏழாம்பவநாதார மேகாசிரயபட்டணத்தில் வீணாதிவாத்திய தந்திரசித்த பக்ஷிசங்கமிருக்கும். இப்படி ஏழாம்பவநாதாரத்தின் ஸ்திதிபேதங்களாகும்.

## மருதாதாரலோகம்.

அதன்மேல் (௱) யோசனாந்தத்தினில் பத்துமருதாதாரத்தில் பிர்ம்மசிருஷ்டியான தசமகா மேகஸ்தானங்கள் உத்தரோத்தரமாகியிருக்கும்.

அவற்றுள் முதல் மருதாதார மேகஸ்தானத்தினில் காசிபப்பிர்ம்மனு லுற்பவித்தவெள்ளரிமலே, மின் இடிகாரணமான சுரபதியாணையால் (௰) கோடி வாரிதாரமேகங்களானதேஅப்பிரகப்புனாபோல அடுக்கடுக்காகிக்கூடிப்பொருந்த அந்தவாரிதாரமேகங்களுஞ் சுதந்திரகமநமில்லாததாகி வாயுக்களே நடத்தப் பூருவோக்தப்பிரகாரத்தினில் பூலோகத்துக்கு மழையைப் பெய்வித்துக் காற்றுப் படம்போல வந்திக்கொண்டுபோய் முதல் ஸ்தானத்திலிருத்திவைக்கும்.

அந்தவாரிதாரமேகங்களிருக்கும் பிரதம ஸ்தானமிந்தப்பூமிக்குப் (௰த) யோசனையாகும். அதிலிருந்துமேல் (௰த) யோசனாந்தத்தினில் துதியமருதாதார மேகஸ்தானத்தினில் ஸ்தூலகாயத்தின் சீமுகனென்னும் வித்தையாதரரும், விசாலவிசித்திர கிரகங்களிலிருக்கும் அந்தக்கந்திருவரிடத்தில் பூருவயுகத்தினில் புண்ணியபரிபாகத்தினல் இந்தச்சிருஷ்டிப் பிராரம்பத்தினில் உற்பவித்தவர்களே தேவகந்திருவர்களாம்.

மேலும் சிருட்டிப்பிராரம்பத்தினில் மநிதராகிச்சநமித்துப் புண்ணியா தீநத்திலிருந்து அந்தப்பதமெய்தினவர்கள் மத்தியகந்திருவராகும்.

அதன்மேல் (௰த) யோசநாந்தத்தினில் மூன்றுமருதாதார மேகஸ்தாநத்தினில் வெவ்வேறு ஆகாரவாகந ஆயுதங்களுள்ள அக்கிநி கந்நிகைகளிருப்பர். பிராமி, மகேச்சுவரி, கௌமாரி வைணவி, வாராகி, மாகேந்திரி, சாமுண்டியென்னுஞ் சத்தமாத்திருகாசிவருத்திர கந்நிகையாம் மத்தியசத்தியர்கள், தேவி, திவ்வியயோகி, தூர்ச்சடி, தூமாக்ஷி, தத்துவங்ஷணி, தநசாவேசி, பிரீதாசநி, பிரேதபூஷணி, பிரிசாதிநி, பரமேச்சுவரி, குரோதிநி, சங்காரி, காளாராத்திரி, கலகப்பிரியை, காக்கிஷ்டி, காமரூபி, காளி, கிங்கிணி, கபாலி, வீரகௌமாரி, விரூபாக்ஷி, வீரபத்திரா, விசுவரூபி, விசாலாக்ஷி, விஷலங்கிணி, வியாக்கிரி, உக்கிரி, உக்கிராநுதாரணி, உக்கிரகேசி, தாடகி, துஷ்டி, திரிபுராந்தகி, திரிபுண்டரதாரணி, ரௌத்திரி, ரௌத்திரவேதாளி, ராக்ஷசி, ரக்தாக்ஷி, பூதசங்கை, பயங்கரி, பைரவி, பேசிரி, பீசணி, லக்ஷ்மி, லம்போஷி, நிசாசரி, நாபோசநி, கணேசி, கோரா, ஈசை, யக்ஷணி, அதோமுகி, டாங்கிநி, சண்டி, உங்காரியென்னும் யோகிநியருந் தத்தம்நாம உச்சாரணமாத்திரத்தில் கிரகாதி சமஸ்தவிக்கிநங்களும் பரிகாரஞ்செய்வர்.

அதன்மேல் (௰த)யோசநாந்தத்தின் நான்காமருதாதார மேகஸ்தாநத்தினில் கட்காதி, (௯உ) ஆயுதபாணிகளான கணதேவர்க ளிருப்பர்.

அதன்மேல்(௰த)யோசநாந்தத்தில்பஞ்சமருதாதாரமேகஸ்தாநத்தினில்இந்திரன்ஐராவதாதிகசங்களிருக்கும்.

அதன்மேல் (௰த) யோசநாந்தத்தில் ஆறுமருதாதார மேகஸ்தாநத்தினில் ககேச்சுவரரான கருடோத்தமரிருப்பர். அதன்மேல் (௰த) யோசநாந்தத்தினில் சப்தமருதாதார மேகஸ்தாநத்தினில் தேவகங்கை தசலக்ஷயோசனை விஸ்தீர்ணத்தினில் விசித்திரவர்ணத்தின் கமலகுமுதாதிகளா லலங்கிருதமாகித்தேவமநுமுநிசித்தகந்திருவாதிகளுக்குத் தநதரிசந பரிசநஸ்நாநபாநாதிசேவனை பரமபாவநஞ் செய்திருப்பர்.

அதன்மேல் (௰த) யோசநாந்தத்தினில் எட்டாமருதாதார மேகஸ்தாநத்தினில் சகலகணங்கள்சூழ நந்திகேச்சுவர னிருப்பன்.

அதன்மேல்(௰த)யோசநாந்தத்தினில் ஒன்பதாமரு
தாதாரமேகஸ்தாநத்தில் தக்ஷப்பிரசாபதியிருப்பன்.சம
ஸ்தமேகாசிரயங்களி லிருந்தவர் அங்ககாயகாந்தி ரத்தி
நாபரணுதிப் பிரபாவத்தால் அங்கங்குள்ள விஷயங்களி
ன் பிரகாசமல்லது சந்திரசூரியர் பிரகாசத்துக்கு அபே
க்ஷைப்படாரொன் றறியவேண்டும்.

அதன்மேல் (௰த) யோசநாந்தமான பத்தாமருதா
தாரத்தின் மேகஸ்தாநமென்னுஞ் சூரியன் புவர்லோக
மிருக்கும். அதில் மகேச்சுவரனின் மாநசோற்பவரான
வீரபத்திர, சம்பு, அயக்கிரீவ, ஏகபாத, அகிர, பத்திந,
பிநாகி, தாணு, பசுபதி, பாவத்துவேஷாம்பதிகளென்
னு மேகாதசருத்திரர் அதிபூச்சியராகி யிருப்பர்.

மேலும்அஷ்டவசுக்கள், துவாதசாதித்தர் முதலா
னவர்கூடி வர்த்தித் திருப்பர்.

பின் புவர்லோகத்துக்கும் பூமிக்கும் ஒருலக்ஷ
யோசனைப்பிரமாணமாகும்.

## சூரியன்ரதாதிலக்ஷணம்.

அந்தப்புவர்லோகத்துக்கு ஈச்சுவரனை சூரியன்ர
தாரூடனுகி மகாமேரு பிரதக்ஷணமாகத் திரிந்து பூலோ
கத்தின் திவாராத்திரிகளை நடத்திக்கொண் டிருப்பன்.
அவன்ரதத்துக்குக் காலொன்று அது (எ௰த) யோசனை
விர்த்தாகாரம் அதனுள்நேமியாப்புக்கதுமை (௲) யோச
னை. அதற்கு ஐந்துகுத்துக்காலுண்டு. அந்தக்காலின்க
துமை (௲)யோசனை.அதனுள்வாயகலம் (௰த) யோசனை
அதன்சுவரூபம் வச்சிரவேதிகை. அந்தக்கால் பூருவோக்
தபூமியின் லோகாலோக பருவதத்தின்மேல் ஆழவாரி
யினில் நடந்துவரும். அதன்நாபியுள் பிரவேசித்த அச்
சு(௰௬)கோடி யோசனை நீளமாகும். அதன் சதுராசிரய



மந்தம்ஒவ்வொரு ஓரமும்(அத)யோசனை விஸ்தீர்ணம்.
அந்த அச்சுக்கரணத்தின் கத்திரியாகாரம்போல மேரு
வின்மேற் கங்கணத்திற் பொருந்தியிருக்கும். அந்த அச்
சின்மேற்பலகையின்விசாலமான கதுமை (உத) யோச
னை அந்தப்பலகையின்மத்தியில் விசுவகர்ம்மன் நிர்ம்மி
த்த மகாவிசால வுந்நதமுள்ள விமாந நவரத்திநமய தி
வ்வியசிங்காதநத்தினில் சூரியனிருப்பன்.

தபிநி,தாப்பிநி,தூம்பிர,மரிசி,சௌலிநி,ருசி,சுஷு
முனை, போதக,விசுவபோதிநி, தாரணி, க்ஷம,பிரபாவெ
ன்னுந் துவாதசகலாவர்த்தனுகி இமகிரணம்(௩௱௩௰௩)
உஷ்ணகிரணம் (௩௱௩௰௩) வருஷகிரணம் (௩௱௩௰௪)
பீசபூதகிரணமுண்டு.இது ஸஹசிர கிரணமாய்க் காலக
ர்ம்மாத்மா இரணியமயகசமுக ரோமங்களின்கமலாதிக
ந்தரித்தசதுர்ப்புசங்களும் கிரீட கேயூர குண்டலாதி அ
நேகாபரணம், வஸ்திரகந்த மாலிகாதிகளால் அலங்கிரத
மானசிந்தூரவர்ணத்தில்(௯த)யோசனைதீர்க்கசரீரத்தோ
டு(உ௰எத) யோசனை யகலமான பிரபாமண்டலங்கூடி
(௩௬த)யோசனை விசாலமாகி விளங்கும். மற்றந்தச் சூரி
யன் ரதத்தின் ஈசாந தண்டத்துநுதியின் நுகமத்தியத்
தில் ஒருகுதிரையும், அந்தநுகத்துக்கு இடம் வலத்தில்
மும்மூன்று குதிரைகளும்,இப்படியேழு ஆகாசகமநமா
குங்குதிரைகளைச் சர்ப்பக்கயிறுகொண்டுகட்டிக், குலா
லசக்கரந் திரிவதுபோலப் பிரதக்ஷணமாகத் திரிந்திரு
க்கும். அவன்ரதம் நரருடைய சுவாச மொன்றுக்கு
(உ௰கத) யோசனை நடக்கும்.நாழிகையொன்றுக்கு (எஎ)
லக்ஷத்து (உ௰௬த)யோசனைநடக்கும்.இப்படியே இரவு
ம்பகலுந்திநமொன்றுக்கு (௪௬௩) கோடியே (௫௬) ல
க்ஷம் யோசனைநடக்கும். இப்படிநடக்கும், பகலொன்
றில் பூருவதிக்கிலிருந்துபச்சிமத்திக்கிற்கெய்தப்பகலும்,

மேருமறைவாகிப் பச்சிமந்தொடங்கிப் பூர்வதிக்குக்குப் போக ராத்திரியுமாம். மேருவின் தக்ஷணத்திற் பகலாயின் உத்தரத்திலிருளும், மேருவின் உத்தரத்திற் பகலாயின் தக்ஷணத்தி லிருளுமாம். பகலிரவின் சுவரூபம் பிரதமசிருட்டியினில் பிதாமகன் தமோமயமான தேகந்தரித்து ராக்ஷசரை நிர்ம்மித்து, அந்தத்தேகம்விட அதேமத்திய லோகத்துக்கு இருளாயிற்று.

பிர்ம்மா சத்துவமயசரீரந்தாங்கித் தேவதைகளைச் சிருட்டித்து அந்தச்சரீரம்விடப் பகலாயிற்று.

மற்றந்தச் சதுர்முகன் சாத்வீக சரீரங்கொண்டுபிதுர்க்களைப்பெற்று அந்தத் தநுவிட்டதே பகற்சந்தியா சுவரூபமாயிற்று.

மற்றந்தக் கமலாசநன் ராசதகாயங் கைக்கொண்டு நரரைக்கற்பித்து அந்தச் சரீரம்விட்டதே ராத்திரிக்கவதியாயிற்று.

இந்தப் பிரகாரத்தினுல் திவாராத்திரிகளை நடத்துஞ் சூரியன்தனக்கு மத்தியில்வந்த ராக்ஷசரைச் சங்கரித்து இப்படிச்சஞ்சரிப்பதற்கான நாழிகைதிநம்பக்ஷம் மாதம் வாசரங்கள், யுகங்களின் லக்ஷணம் பின்னே சொல்லுகிறேன்.

அந்தச் சூரியன் திரியுமிடத்தில்சயித்திராதி பன்னிரண்டு திங்களில் கிரமத்திருந்தொவ்வொருவன் அதிபதிகளாகி அந்தச் சிங்காசநத்திலேறிச் சஞ்சரிக்கும், துவாதசாதித்தரின் சரித்திரம் நாமதேயம் நிறம்முறையே எப்படியென்றுல் தாத்துரு, அரியமன், மித்திரன், வருணன், இரணியன், பூஷன், அஞ்சுமான், சக்கரன், சவித்துரு, துவஷ்டா, பகவான், திவாச்சுவாகனென்னுந் துவாதசாதித்தரைப் புலஸ்திய, மார்க்கண்ட, அத்திரி, வசிஷ்ட, ஆங்கிரச, பிருகு, பாரத்துவாச, கௌதம, காசிப, அகத்திய, சமதக்கினி, கௌசிகரென்னுந் துவாதச ரிஷிகள் கிரமத்தில் கீர்த்திப்பர்கள். வாசுகி, கங்க, வீர, தக்ஷக, நாக, எலாபசத்திர, சங்கபால, ஐராவத, தநஞ்சய, மகாபத்ம, கார்க்கோடக, கம்பல, அஸ்தனென்னுந் துவாதச சர்ப்பங்கள் முறையே அவரவர்வாசிகளுக்குப்பந்திக்கப்பட்ட அதிகாரிகள்.



மற்றுந் தும்புரு, நாரதர், ஆஆ, ஊஊ, விஸ்வாவசு, அத்திரசேந, வசிருசி, சருவாசு, சித்திரசேந, ஊளுக, திருதராட்டர, சூரியாவாச ரென்னுந் துவாதசகந்திருவர் அநுக்கிரமத்தில் பாடல்பாடுவார்.

குருதஸ்தலே, குஞ்சிகாஸ்தலே, மேநகை, சகாகந்நியை, பிரமோசாந்தி, அநுமோசாந்தி, விஸ்வாசி, கிருதவாசி, ஊர்த்துவாசி, பூருவசித்தி, திலோத்தமை, கிருதாவாசி யென்னும்(௰உ)அப்சரஸ்திரீகள் நர்த்தநஞ்செய்வார்.

ரதப்பிரது, ரதாவெளசு, ரதசித்திரன், ரதஸ்தவா, விருத்து, அருண, சுவேஷண, சேநசிது, தாஷ்க, அரிஷ்டநேமி, ருதுசது, சத்தியசிதுவென்னுந் துவாதசாரதிகளுண்டு.

பிரகதி, பவரு, கிய, வத, தாப, வியாக்கிர, குருநஅபசுவாதவிதியுக்த, திவாகர, பிரதவேதந, யக்ஞவேதனென்பவர் துவாதச ராக்ஷதர்களாகிய மெய்க்காவலர்களுண்டு.

அங்குஷ்டப்பிரமாணராய்ச் சூரியகிரணம் புசித்துக்கொண்டு கோவின்பாதப்பிரமாண ஸ்தலத்தில் பரமபவித்திரோதங்களால் ஸ்நாநபாநாதிகளுள்ள மகாரிஷிகளான(௬௰௲)வாலகில்லியராகிய ஆதித்தரின் சபாநாயகர்.

மேல்துருவன், பிரிவாகனென்னு வாயுவின் ரச்சுவைப் பிடித்து அந்தரத்தில் நடத்துவிப்பனென்பதே சூரியசித்தாந்தமாகும்.

மேலும் சூரியனுக்குமேல் ஒருலக்ஷ யோசநாந்தத்தினில் சிரவாசிகளான கிரது, தக்ஷ, ஒபு, ஸசுவி, சத்தியகாம, கால, துநீருச, புரூரவ, அத்திரவனொன்னும்விசுவதேவதைகளுடனேயும் அக்கிநி ஷ்வாந்தமுதலான பிதுர்த் தேவதைகளுடனேயுங்கூடிச் சந்திரனானவன் அமிருத, மாத, பூஷா, துஷ்டி, புஷ்டி, ரதி, திருதி, சசிந, சந்திரிகா, சாந்தி, சோதித, ஸ்நாஸ்ரீ, அங்கத, பூர்ண, பூர்ணாமிருத, தாமதாயினியென்னுஞ் சோடசகலாபரிதனாகித், தவளவர்ணமய சரீரத்தோடு சகலஔஷதீஸ்வரனாகிப், பிரகாசித்திருப்பன். அவன் விமாநம். ரசிதத்தினால் (௩) காலும், (௩௰)குத்துக்காலும் (௰) வெள்ளைக்குதிரைபூட்டிய படிகரசிதமயமாகி யிருக்கும்.

அந்தவிமாநம் சூரியன்ரதத்துக் கேற்றுக்கிரணமாம். அந்தப்புஷ்ப காருடனான சந்திரன் கிரணாமிருதத்தைக்கிருஷ்ணபக்ஷ பாட்டியமிமுதலாக அமாவாசியைபரியந்தம் அக்கிநியாதி சகல முக்கியதேவர்களும்,பிதுர்களும் பாநஞ்செய்து க்ஷயமானபின் சூரியன்கலைகள் சுஷுமுனைஞாளமென்னுங் கிரணசூத்திரத்திலிருந்து அந்தச்சந்திரன் சுக்கிலபக்ஷபாட்டியமிமுதல் பூரணைபரியந்தம் திநந்திநம் வர்த்தித் திருப்பன்.

மேல்சந்திரன் விமாநத்தை துருவன் ஸடவாஹாவென்னும் வாயுக்கயிற்றினால், பிடித்து நடத்தாநிற்பன். பின்னையந்தச் சந்திரன்மேல் ஒருலக்ஷயோசநாந்தத்தில் முல்லைப்பூப்போல வெண்மையான சந்திரன்போலக் காந்திமயமான புஷ்பகாரூடனாகி யிருக்கும், நக்ஷத்திரமண்டலத்தின்மேல் துருவன் விவஹாவென்னும் வாயு சூத்திரத்தினால் பிடித்து நடத்தாநிற்பன். பின்னையந்தநக்ஷத்திர மண்டலத்தின்மேல் இரண்டு யோசநாந்தத்தில் பத்மராகவர்ணமயனான செவ்வாயிருப்பன்.



அவனுக்கு எட்டுக்குதிரை பூட்டியநான்குபவளக்காலுள்ளபவளவிமாநமுண்டு.

அவனுக்குமேல் இரண்டுலக்ஷ யோசநாந்தத்தில் பச்சைவர்ணமுள்ள புதனிருப்பன். அவனுக்கு பிங்கல வர்ண (௰) குதிரைபூட்டிய நான்குபச்சைக்காலுள்ள ரத்திநவிமாநமுண்டு.

அவனுக்குமேல் இரண்டுலக்ஷயோசநாந்தத்தில் தக்தகாஞ்சநவர்ணமுள்ள பிரஹஸ்பதியிருப்பன். அவனுக்குக் குங்குமவர்ணமுள்ள(௮)குதிரைகள் பூட்டியநான்கு மாணிக்கக்காலுள்ள சுவர்ணரதமுண்டு.

அவனுக்குமேல் இரண்டுலக்ஷயோசநாந்தத்தினில் ரசிதவர்ணமுள்ள சுக்கிரனிருப்பன்.அவனுக்குச் சித்திரவர்ண(௰)குதிரைகள் பூட்டியவயுடைய நான்குகாலுள்ள ரசிதவிமாநமுண்டு.

அதற்குமேல் இரண்டுலக்ஷயோசநாந்தத்தில் பிங்காஞ்சநவர்ணமும் குரோதத்திருஷ்டியுமுள்ள பயங்கரமூர்த்தியான சநியேச்சுவரனிருப்பன். அவனுக்குக் கிருஷ்ணவர்ணமுள்ள(௮) குதிரை பூட்டிய நீலக்கால் நான்குள்ளஇரும்புவிமாநமுண்டு.

பின்னுமிந்த மங்களாதி பஞ்சகிரகங்களின் மேலே துருவன் பதாவாஹனென்னும் வாயுக்கயிற்றினால் கட்டிப்பிடித்துருசுவக்கிரகதிகளால் நடத்துவான். அதன்மேல் முறையே அஞ்சநவர்ணம் தாம்பிரவர்ணமுள்ள ராகுக்கேதுக்களிருப்பர். அவர்களுக்கு எட்டுக்குதிரைபூட்டிய வச்சிரக்கால் எட்டுள்ள எஃகுரதமுண்டு.

இவர்களின்மேல் துருவன் பரிவாகனென்னும் வாயுச்சூத்திரம் பிடித்து நடத்தாநிற்பன். மேலும் திவ்விய தேககாந்திதரான சமஸ்த கிரகங்களுள்ளே முதல் சொன்னசூரியமண்டலத்தினிலிரட்டி சந்திரமண்டலம். இந்

தவிரண்டுஞ் சமானமானது ராகுமண்டலம். சந்திரன்
சோடசாங்கிசமே சுக்கிரன்மண்டலம். அந்தசுக்கிரன் நா
லுபாகத்தி லொருபாகங்குறைந்தது, பிரஹஸ்பதி மண்
டலம். அந்த பிரஹஸ்பதிமண்டலத்தின் நாலிலொன்று
குறைந்தது சனிமண்டலமதற்குச் சமானம் மங்களன்ம
ண்டலம். அதற்கு,நாலிலொன்றுகுறைந்தது புதன்மண்
டலம். அந்தப்புதனுக்குச் சமானமான மற்றுள்ளநக்ஷ
த்திர மண்டலங்களுள்ளே (ள) யோசனை(அ௰)யோசனை
(ரு௰)யோசனை யகலமுள்ள மண்டலமல்லாமல் அதற்கு
க் குறைந்த நக்ஷத்திர மண்டலங்களில்லை யென்றறிக.

மேலும் மத்தியத்தில் சந்திரசூரியர்கிராணங்களெ
ப்படியாமென்றால் எப்போதும் பூரணை, அமாவாசி
யைகளில் சந்திரசூரிய ரிருந்தராசியில் ராகு கேதுக்கள்
வரின் கிராணங்களுண்டாம். மேலும்பூரணை இராத்திரி
யோடும், அமாவாசியை பகலோடுமுடியின் கிராண
முண்டாம்.

பின்னும் அந்தச்சனிமண்டலத்தின் மேல் இரண்டு
லக்ஷ யோசநாந்தத்தில் அகஸ்தியர், மரிசி, அத்திரி, ஆ
ங்கிரச, புலஸ்த்திய, கௌசிக, வசிஷ்டரொன்னுஞ் சத்த
ரிஷிகள் மண்டல மிருக்கும்.

இப்படிச்சொன்ன பூலோகத்தின்மேல் புவர்லோ
கத்தின் சத்தரிஷிகளின் மண்டலபரியந்தம் விசித்திர
மாகியிருக்கும் ஸ்தாநங்களெல்லாம் மருதாதாரத்தின்
மேகாசிரயங்களாகப் பின்னந்த இருஷிமண்டலத்திலி
விருந்து பின்சொல்லும் ருத்திரலோக பரியந்தமும்தோ
ன்றப்பட்டஸ்தாநங்களெல்லாம் பவநாதாரத்தின் விமா
நங்களே யென்றறியவேண்டும்.

மற்றந்தச் சத்தரிஷி மண்டலத்தின்மேல் ஒருலக்ஷ
யோசநாந்தத்தினில் சிங்சுமார சக்கரமிருக்கும். அந்தச்



சிங்சுமாரசக்கரம் முதலையாகாரமாய்த் தர்ம்மஸ்சுவரு
பனன மகாவிரஷபேச்சுவரனும். அந்தச்சீர்மேவிய ஈச்
சுவரன் தர்ம்மமே மூர்த்திசி. பிரம்மனே ஊர்த்தம். யக்
ஞமே அதா. விஷ்ணுவே இருதயம். சங்வர்ச்சரமே கர்
ப்பம். அச்சுவினிதேவதைகளே பூர்வ்வபாதத்துவயங்கள்.
அத்திரியேமத்தியம். மித்திராவரணரோ அபரபாதத்துவ
யங்கள். அக்கினியே வாலடி. இந்திரனே வால்மத்தியம். பி
ரசாபதியே வாலின் அக்கிரம். அபயமேவாலினுதியாயி
ருக்கும். அந்தவாலின்நுனியில் ஸ்தம்பாகாரசூத்திரம், வி
ஸ்வகர்ம்மனிர்ம்மிதமாம். அதில் துருவனிருந்துமுற்
சொன்ன எழுவாயாதி சூத்திரங்கள்பிடித்து அந்தக் கி
ரகாதாராதிகளை நடத்தாநிற்பன்.

## புவர்லோகாதிலக்ஷணங்கள்.

மற்றிந்தப்பிரகாரத்தில்புவர்லோகத்தினுக்குமேல்
(அரு)லக்ஷயோசனையில்சுரலோகமிருக்கும். அதற்குக்க
ர்த்தாஇந்திரனும் அவன்இருள்மயசரீரத்தோடுஏகமுக,
சதுர்ப்புஜ சகஸ்திரலோசநங்களின் வஸ்திராபரண கந்
தமாலியாதிகளால் அலங்கிருதனாய்த் ததீசிரிஷியின் மு
ள்ளந் தண்டெலும்பிற்செய்தவச்சிராயுதம்பிடித்துச், ச
சிதேவிசகிதனாகிச் சகலஐஸ்வரிய சம்பந்நனாகிக் சகலம
நுமுனி தேவதைகளோடு ஓலக்கத்திருப்பன். மற்றந்தத்
தேவதைகள் அசாந தேவதைகளென்றும், கர்ம்மதேவ
தைக ளென்றும் இரண்டுபிரிவினராவர். அவருள் சிரு
ஷ்டிப்பிராரம்பத்தில் அந்தப்பதமெய்தினவர்களே அ
சாநதேவதைகள். மநுஷராய்ச்சம்பித்தபின் அசுவமே
தாதி எக்ஞம்பண்ணி இஷ்டபூரிதாதி கர்ம்மங்களால்
அந்தப்பதம் பெற்றவர்களே கர்ம்மதேவதைகள். அந்த
க் கர்ம்மதேவதைகள் இந்திரன், அக்கினி, இயமன் முத
லானவர்களே யாவர்.

அந்தஅசாநதேவதைகளானாலும் அமிர்தமயசரீரத்தில் கந்தாபரணமான லாவணியத்தினில் அநுபூஷலோசநங்களின்மகதைச்சுவரியத்திலிருந்து சுரஸ்திரிகளின் சம்போகத்தோடு மகாசுகத்தினிலிருப்பர்.

அவர்களுண்ட சுதைமுதலான ஆகாரம் மதனாம்புவாய்ப்போமல்லது மலமூத்திராதி பரிணாமமில்லையென்று தெளியவேண்டும். மற்றுமந்தச் சுரலோகத்தின்மேல் இரண்டுகோடி யோசநாந்தத்தில் மகாலோகமிருக்கும். அதற்கு மிருகண்டுவினாத்மசனான மார்க்கண்டமுநி அதிபதியாகி மரீசிமுதலான முநிகளுடன் கூடிப் பரமேஸ்வரன் ஆராதனை பலத்தினால் நித்தியத்துவம் பெற்றுச் சுகசுவரூபியாகியிருப்பன்.மற்றந்த மகாலோகத்தின்மேல் எட்டுக்கோடி யோசநாந்தத்தினில் சநலோகமிருக்கும். அதற்கு வசிஷ்டாதிரிஷிகள் அதிபதிகளாவர். பிதுருஜந்ம சநங்களுடன் கூடித் தபோராச்சியஞ் செய்திருப்பார்கள்.

அங்குரிஷிகள் பிதுரு பிதாமக ரென்பவர்கள் பூலோகத்திற் பிராமண கோத்திர மாவதால் பிதுருலோகமென்பதாம். மற்றந்தச் சநலோகத்தின் மேலே பன்னிரண்டுகோடி யோசநாந்தத்தில் தபோலோகமிருக்கும். அதில் பிரம்மாவின் மாநசபுத்திரரான சநக, சநந்தந, சநற்சுஜாத, சநற்குமாரரென்னும் ராஜரிஷீச்சுவரர்கள் அதிபதிகளாகி யோகநிஷ்டராகி யிருப்பர். மற்றதிலிருந்து மேலேபதினாறுகோடி யோசநாந்தத்தினில் சத்தியலோக மிருக்கும்.அதற்கு ரஜோகுணத்தில்சகத்துற்பத்தியர் கர்த்தராதலால்பிதாமகனே கர்த்தனும் அவன் சுவர்ணமயகாந்தி சரீரத்தினில்சதுர்முகலோசநாட்டகத்தோடு, யக்ஞசூத்திரமான அக்ஷமாலிகாபாலதண்டகமண்டலங்களுள்ள வாமதக்ஷண கரசதுஷ்டயமும் திவ்வியவஸ்திராபரண கந்தபுஷ்பாதி மாலிகாலங்கி



ருதனாகிச் சரஸ்வதி சகிதனாகி, மூர்த்திசுவரூபனாகிவேதபுருஷனென மரீச்சியாதி நவப்பிரம்மர்கள் சகலமுநிசநங்கள் வாசவாதி சகல சுரசமூகத்தோடு அவர்களால் சேவைசெய்ய விருப்பன். மற்றந்தப் பிர்ம்மனுக்கு (௬௪) சித்திகளுண்டு. எவையெனின்.

### பிர்ம்மனுடைய(௬௪)சித்திகள்.

பிசாசாதி தேவதா தாரதம்மிய பதங்களை அறிவிப்பேன். அவையெப்படியெனில் ஸ்தூலனாதல், சூக்ஷ்மனாதல், பாலனாதல், யௌவநனாதல், விருத்தனாதல், நாநாசாதி ரூபமெய்தல், பிருதுவி புறம்பாகமிக்க நான்குபூதத்தினிற் றேகந்தரிதல், நித்திய சுகந்தம் போகித்தல் இந்தஎட்டும் பார்த்திப சித்திகளாம்.

இவை பிசாசருக்குமுண்டு. சலநிகுஞ்சநஞ் செய்யப், பூதசதுர்சிய சலகமநஞ்செய்ய,அநாதுரசமுத்திரபாநஞ்செய்ய,நிர்ச்சல ஸ்தாநத்தினில் சலதரிசநஞ் செய்யச், சிலாதி தாடநத்தினில் விரணமில்லாதிருக்க, காபுடத்தினிற் சமுத்திரத்தைத்தரிக்க, நிரசவஸ்துவைச்சுரசஞ் செய்ய, அப்புப் புறம்பாகிய மூன்றுபூதத்தினாற் சரீரந்தரிப்பதாகும். இந்தஎட்டும் அபிவ்வியசித்திகள். இதனுடன் பூருவோக்தகுணம்(௮)கூட (௫௬) ராக்ஷஸர் சித்திகளாகும்.

பின்னும் சரீரத்தினில் அக்கிநி நிர்ம்மாணம்,அக்கிநிபயம்,வர்ச்சிதம், சலத்தில்அக்கிநிஸ்தாபநம், பாணிதலத்தினில் பாவகனால் அந்நாதிபசநம், அப்பிரயத்திந சகத்தாபந,அக்கிநிபுறம்பாக மேற்பூதத்துவயத்தில் தேகத்தாரணமென்னும் ஏழும்வேறே அதிசூக்ஷ்மமாகி மறைவாயிருக்கும் அதிநாதவஸ்து விசாரமும் யதார்த்தமாக அறிவதன்மேல் பிரீதியத்நமில்லாமல் தூரதாசக்கிரகணமே சிரவணம். சகல ஜநவிஷய விருத்தாந்தஞா

நமே வார்த்தை. பிரயத்நமில்லாத திவ்வியதரிசநமே தரிசநம். திவ்வியாசஸ்வாதனமே ஸ்வாதனம். சகலலோகாதிகளின் திவ்விய சுகந்தமறிவதே வேதநமென்பவைசடோபசாகங்களாகும்.

இவையெல்லாம் ஒன்றுகவிவ்வெட்டும் தைஜஸசித்திகள்.இவற்றுடன்முதல் (ருசு) குணங்கூட (உசு)யக்ஷகுணங்களாகும். பின்னை மநோசத்துவ பூதாந்தப்பிரவேசம். பர்வ்வதாதிபாரபரணம், குருத்துவ,லகுத்துவ, அஸ்தநிலாதாரண, ஆக்கிராங்குலி, பூகம்பந, வாயுப்புறம்பாக்ககநமாத்திரமே தேகதாரணமென்னு மெட்டும்மாருதாதிசித்திகள் இவற்றுடனே முதல்(உச)குணமுங்கூட (ருஉ)-ம் கந்திருவர்குணங்களாகும்.

பின்னை சாயாவீகிநதை, இந்திரியதிரிசியதை, கெச்சதி, தேஷ்டவிஷயசங்கதி, சயிலலங்கள், சயிலகெர்ப்பீகரண, ஆகாசபிண்டீகரண, அசரீரத்துவமென்னுமெட்டும் அம்பரசித்திகளாம், இவற்றுடனேமுதல் (ருஉ) கூட (சய) ம் இந்திரன் குணங்களாகும்.

பின்னை யதாகாமோபலத்தி, யதாகாமவினிற்கமந, சர்வ்வதிரஸ்கரண, சகல குய்யாத் தரிசந, கர்ம்மாணுகுண, நிர்ம்மாண,வசியத்துவ, பிரியதரிசந, சம்சாரதரிசநமென்னும் எட்டும் மாநஸ சித்திகள்; இவற்றுடனேமுதல் (சய) குணங்கூட (சஅ)ம் சௌமியகுணங்களாகும்.

பின்பு சேதந, தாடந, பந்தந, மோகந, கிரகாண, சமுசார, பரிவர்த்தந, பிரசாதமிருத்து, காலசயமென்னும் எட்டும் அகங்கார சித்திகள். இவற்றுடனே முதல் (சஅ)குணங்களுங்கூட(ருசு)ம்பிரசாபதிகுணங்களாகும்

பின்னும் ஜகர, ஜநந, ஜகத்தி, ரக்ஷ,கரண; ஸம்பகரண, கிரகரண,மோககரண மென்னுமெட்டும், புத்திசித்



திகள் இவற்றுடனே முதல்(ருசு)குணங்கள்கூட (சுச)குணங்களின் சம்பந்நனுகிச், சத்தியலோகத்தினில் பிர்ம்மாவிருப்பன்.இப்படிப்பிருதிவிமுதல் புத்திகடையானஎட்டுத்தத்துவஞ்செய்திருந்து, ஆதிசித்திகளுள்ளபிசாசாதி பிர்ம்மாந்தமானதேவதைகள் பதவி இந்தப்பிரகாரமாகி முந்தப் பிரகிருதி தத்துவாதிகள் செய்திருந்தான். இச்சித்திகளை யுள்ளவனும் விஷ்ணுவாதி மகாபதங்களை நினைப்பதற்குமளவில்லையென்று அறியவேண்டும்.

## தேவாதிஉற்பத்திகள்.

மற்றப்பிரமனிலிருந் தகில தேவதாநவர்க ளுற்பத்திக்கிரமமெப்படியெனின், பிரதமசிருட்டியுள்ள அந்தப் பிர்ம்மன் நேத்திரத்தினில் மரீசிபிறந்தான். இருதயத்தில் பிருகுபிறந்தான். சிரசினில் ஆங்கிரசன்பிறந்தான். உதாநவாயுவில் புலஸ்தியன்பிறந்தான். வியாநவாயுவில் புலகன்பிறந்தான். அபாநவாயு வினிடத்திற் கிருதுபிறந்தான். பிராணவாயுவினிடத்தில் தக்ஷன் பிறந்தான். சோத்திரத்தினில் அத்திரிபிறந்தான். சமாநவாயுவி னிடத்தில்வசிஷ்டன்பிறந்தான். சங்கற்பிதத்தினில் தர்ம்மதேவதைகள் பிறந்தார்கள்.

பின்னை மரீசியாதி வசிஷ்டாந்தமான அவர்களேநவப்பிர்ம்மரொன்பர்.மற்றந்த மரீசிக்குக் காசிபப்பிர்ம்மன் பிறந்தான். அவனுக்கு தக்ஷப்பிர்ம்மன் பிறந்தான். அவனுக்குப் புத்திரியரான, அதிதி, திதி, தநு, கலை, ஆநாயு, சிங்கிகை,முநி, பிரவாகி, அரிஷி,விநுதை, கபிலை, கத்துரு, குரோதையென்னும் (யரு) பெண்களுண்டு.

அவருள் அதிதிக்குத் துவாதசாதித்தர்களும், இந்திராதி (ருரு) கோடிதேவதைகளும் பிறந்தார்கள்.

மற்றந்தச் சூரியனுக்கு வைவஸ்வத மநுப்பிறந்தான். அவனுக்கு இக்ஷுவாகுமுதலான சகலக்ஷத்திரிய

ராஜவர்க்கஞ் ஜநித்தன. மற்றந்த விஸ்வதமநுவின் புத்திரியான இளையென்பவளுக்குச் சந்திரன்சுதனானான்.அவனுக்குப்புதன் பிறந்தான். புதனுக்குப் புரூரவாஜந்மித்தான். அவனுக்கு ஆயுமுதலான பாண்டவரில்சநமேசயன் கடையானவர்கள் ஜநித்தார்கள்.

பின்னை இரண்டாவது திதிக்கு (௫௬) கோடிராக்ஷசர் சந்மித்தார். அவருள் இரணியகசிபனுக்குப் பிரகலாதன், சகலாதன், அநுலாதன், சிபி, பாஷ்கனென்னும் (௫) புத்திரர்களுண்டு. அவருள் பிரகலாதனுக்கு விரோசந, கும்ப,நிகும்பனென்னும்(௩)பிள்ளைகளுண்டு. அவர்களில் விரோசநனுக்கு வலித்திரனும், அவனுக்குப் பாணாசூரன் முதலான (௱) பிள்ளைகளுமுண்டு.

பின்னை மூன்றாவது தநுவென்பவளுக்கு (௪௰) குரூர தாநவர்பிறந்தார். பின்னை நாலாவது கலையென்பவளுக்கு நிவாதகவசர்பிறந்தார்கள். பின்னை ஐந்தாவது அநாயுவென்பவளுக்கு விருத்திராசுரன் முதலான(௪௰) பிள்ளைகள்பிறந்தார்கள்.பின்னை ஆறாவது சிங்கிகையென்பவளுக்கு ராகுமுதலான (௪௰) பிள்ளைகள் பிறந்தார்கள். பின்னை ஏழாவது முநியென்பவளுக்கு நவரத்திநங்களும், தேவகந்திருவரும் பிறந்தார்கள். பின்னை எட்டாவது பிரவாகிக்குச்சிந்தாமணி,சகலலோகங்களும்,விழுபெண்களும்(௰)பிள்ளைகளும் பிறந்தார்கள்.பின்னை ஒன்பதாவது அரிஷிக்கு (௰) அப்ஸரஸ்திரிகளும், தும்புரர் முதலான நாலுபிள்ளைகளும் பிறந்தார்கள். பத்தாவதுவிநுதைக்கு, அநூரன், அல்லது அருணன், கருடன், வச்சிரன், இடி,வருணாதி சகலதேவதைகளும் பிறந்தார்கள்.

பின்னை அந்த இடியுங் கருடனும் உடன்பிறந்தோமென்று பாம்புக்கு வைரியானார்கள்.சலதேவதைகளுட



ன்பிறந்த காரணத்தினால் இடிமழைபொழியும் வேளையில்வந்து கர்ச்சிதஞ்செய்யும்.பதினொன்றாவது கபிலையென்பவளுக்கு அமிருதமும் பிராமணரும்,பிறந்தார்கள்.பன்னிரண்டாவது, கத்துருவென்பவளுக்கு அநந்தன்முதலான (௱) நாகங்களும் ஒருபெண்ணும்பிறந்தன. பின்னைப்பதிமூன்றாவதுகுரோதையென்பவளுக்குச்சமஸ்த பருவதங்களும் லோகபாதகரான சிலகுரோதாத்மர்களும்; துவாதசபுத்திரிகளும் பிறந்தார்கள். அவருள், பத்திரமதை யென்பவளுக்கு, ஐராவதஞ் ஜந்மித்தது. சிதையென்பவளுக்குமற்றக்கயங்கள் ஜந்மித்தன. மாதங்கியிடத்தில் மற்ற அடவிக்கயங்கள் ஜந்மித்தன.கந்திருவவயிடத்தில் குதிரை ஜந்மித்தது.சார்த்தூலையிடத்தில் சிங்கங்க ளுதித்தன. அரியென்பவளிடத்தில் வாநரம்பிறந்தது. மிருகையினிடத்தில் மிருகங்க ளுதித்தன.

மிருகமதையினிடத்தில் காக்கைகளும், விருக்ஷங்களு முற்பத்தியாயின. மிருகுவியினிடத்தில் கரடிகள் சாய்மனா மிருகங்களுதித்தன. சுரசையினிடத்தில் சரபசாதிகளுதித்தன. நலையென்பவளிடத்தில் புஷ்பமில்லாமல்பலமாகும் அரசுமுதலிய விருக்ஷங்களுதித்தன. குயகை யென்பவளுக்குப் பலபுஷ்பங்களுள்ள மரங்களுதித்தன. விரோதையினிடத்தில் தருக்குலம், லதா, நாநாத்திரணாதி சாதிகளுதித்தன. இவைகள் மரீசிப்பிரம்மன் சந்ததிகளாம்.

பிருகுவினுக்குக் கவிபிறந்தான்.அவனுக்குச் சுக்கிரனுற்பவித்தான். அவன் தயித்தியருக்குக் குருவாயினான். ஆங்கிரசனுக்குப் பிரஹஸ்பதி பிறந்தான்.அவன் சுரருக்கு ஆசாரியனானான். புலஸ்தியனுக்கு விசுவாவசுபிறந்தான். அவனுக்குக் குபேரனும் கிந்நாருஞ் சந்மித்தார்கள். மற்றந்த விசுவாவசுவுக்கு ராக்ஷசபுத்திரியா

ன கைகேசி, புஷ்போற்கடையென்னும் இரண்டுபெண்களுண்டு. கைகேசியென்பவளுக்குராவணன், கும்பகர்ணன், விபீஷணனென்னு மூன்றுபிள்ளைகள் பிறந்தார்கள். புஷ்போற்கடையென்பவளுக்குக்கரதூஷண திரிசிரனென்னும் மூன்றுபிள்ளைகளும், சூர்ப்பநகியென்னும் ஒரு பெண்ணும் ஜன்மித்தார். புலஸ்தியனுக்குக் கிம்புருஷசாதியும், வியாக்கிராமிருகங்களும் ஜன்மித்தன. கிருதுவுக்குச் சூரியாக்கினிதேசசுள்ள சிலரிஷிகள் உதித்தார்கள். தக்ஷனுக்கு(டுடு)பெண்கள் பிறந்தார்கள். அவருள், கீர்த்தி, லக்ஷுமி, திருதி, மேதை, உஷை, சிரகதை, கிரியை, லச்சை, புத்தி, மதியென்னும் பதின்மரை அவன்பிர்ம்மன்சங்கற்பஜன்மிதரான தர்ம்மதேவதைகளுக்குக்கொடுத்தான்.

அதிதிமுதலான(மஙூ)பெண்களைக் காசிபப்பிர்ம்மனுக்குக்கொடுத்தான். அசுபதிமுதலான(உஎ)பெண்களைச் சந்திரனுக்குக் கொடுத்தான். தர்ம்மதேவதைக்குச் சாம, காம, அருஷ னென்னுமூன்று புத்திரர் பிறந்தார்கள். சாமனுக்குப் பிரதியும், காமனுக்குக் கிரதியும், அருஷனுக்கு ஆநந்தியும் மனைவியரானர். அவர்கள் தர்ம்மத்துக்குச் சகாயமாகவிருப்பர். அத்திரிக்குத் துருவாசன், தத்தாத்திரி, சந்திரனென்னு மூன்று புத்திருண்டு. வசிஷ்டனுக்குச் சத்தியும், சத்திக்குப், பராசரனும், பராசரனுக்கு வியாஸனும், வியாஸனுக்குச் சுகாதிரிஷி சந்ததியுந் தோன்றினர். இவை நவப்பிர்ம்மராலான சிருட்டிக்கிரமமாகும்.

ஆதிப்பிர்ம்மனுக்குப் பிரஜாபதி பிறந்தான். அவனுக்கு அஷ்டவசுக்கள் பிறந்தார்கள். அவர்களுக்கு முறையே திரவீணன், காலன், ஆவரசன், சாந்தன், புரோசன், அநலன், சோதி, கேவலமுமியும் பிறந்தனர். பிரபாசனுக்கும் பிரஹோர்த்பதியின்உடன் பிறந்தவளான யோகசித்தி யென்பவளுக்கும் விச்சுவகர்ம்மன் பிறந்தான். அவன்தேவதைகளுக்குத் தச்சனானன். விச்சுவகர்ம்மன் தன்மகள் வடபையென்பவளை சூரியனுக்குத்தான். அவளுக்கு அச்சுவனிதேவதைகள்பிறந்தார்கள். அந்த அச்சுவனி தேவதைகளுக்குக் குய்யகனென்னுந் தேவசாதியும், சகலஔஷதங்களுஞ் சன்மித்தன.



பின்னும் ஆதிப்பிர்ம்மனுக்குத் தாத்துருவென்றும், விதாத்துருவென்றும் இருவர்மக்களுண்டு. அவர்லோகத்திற் புண்ணியபாவங்களைநடத்துவிப்பார்கள். அவருக்குஇலக்ஷுமியென்றுஞ், சேஷ்டா தேவியென்றும் இரண்டுசகோதரிகளுண்டு. அவருள் இலக்ஷுமிக்குச் சாதியஸ்வம்பிறந்தது. சேஷ்டாதேவிக்குச் சாத்திராதேவிபிறந்தாள். அவளுக்குக் கௌடி, பயிஷ்டி, மத்துவியென்னுந் திரிவிதசுரைபிறந்தன. அந்தச்சுரைக்கு அதர்ம்மஞ் சன்மித்தது. அதர்ம்மத்துக்குப் பயை, மகாபயை, அந்தகனென்னும் மூன்றுபுத்திரரும், சிலபெண்களும் பிறந்தார்கள். அவரிடத்தில் கிரவுஞ்ச, வாயச, பருந்து, வல்லூறு முதலியநானாபக்ஷிசாதிகள் பிறந்தனவாம்.

## பிர்ம்மாதியர்சுகங்கள்.

சகத்சநகனை பிர்ம்மாதி சுகாதிசயம் எப்படியென்றால், கிருமிகீட பதங்க பசுமுதலான சீவசாதிகளுக்கு விசிட்டமானது நரர்சநநம். அதிலும் ஆயுராரோக்கிய குல பல பராக்கிரம ரூபயௌவநவித்தை கீர்த்திசம்பத்தாதி சௌபாக்கியமொன்றுங் குறைச்ச வில்லாதவனே சப்தசமுத்திராதி யீச்சுவரனை சாருவபூமனுக்குச்சருவசநங்களிலும் நூறுபங்குசுகம். அவனிலும் நூறுமடங்கு மனுஷகந்திருவருக்குச்சுகம். இவரிலும் நூறுமடங்கு தேவகந்திருவருக்குச்சுகம். இவரிலும் நூறுமடங்கு பிதுர்க்களுக்குச்சுகம். இவரிலும் நூறுமடங்கு

தேவதா கனிஷ்டர்களுக்குச்சுகம். இவரிலும் நூறுமட்ங்குதேவதாமத்திமர்களுக்குச்சுகம். இவரிலும் நூறுமடங்கு தேவதாவிசிட்டருக்குச்சுகம். இவரிலும் நூறுமடங்கு இந்திரருக்குச்சுகம். இவரிலும் நூறுமடங்கு பிரஹஸ்பதிக்குச்சுகம். அவனிலு நூறுமடங்கு பிர்ம்மனுக்குச்சுகம். இப்படிமஹா சுகசுவரூபனுகிச் சத்தியலோகத்தில் பிர்ம்மனிருப்பன்.

## வைகுண்டம்.

அந்தச் சத்தியலோகத்தின்மேல்நான்குகோடியோசனாந்தத்தில் வைகுண்டமிருக்கும். அங்கேராஜசசத்துவகுணத்திருந்து சகத்தினுக்குச் சிருஷ்டி திதி கர்த்தனுன நாராயணன் நீலவர்ணமய சரீரத்தில் ஏகமுகம் துவிலோசந சதுர்ப்புசங்களும், சங்கு, சக்கர, கதா, கட்க,சார்ங்கமுள்ள வாமதக்ஷணகரசதுஷ்டயங்களும், வநமாலேயக்ஞோபவீத பீதாம்பர கிரீடகௌஸ்தவாதி யலங்காரங்களால் திவ்வியகந்தபுஷ்பாதிகளில் அதிசய சிங்காரம் பெற்று லக்ஷ்மியுடன்கூடி ஞானசத்திபல ஐஸ்வரிய தசவீரியங்க ளென்னும் வயிஷ்ணவோக்தசற்குணசகிதனுகி மற்ச,கூர்ம்ம,வராக,நாரசிங்க,வாமந, பரசுராம, ரகுராம,பலராம,கிருஷ்ண கலிக்கியென்னுந் தசாவதார யுக்தனுகி, அநிருத்த, ருக்குமாங்கத, பிரகலாத, நாரத, அம்பரீஷ,புண்டரீக, கஜேந்திர, மூத்த, உத்தவ, சங்கேத, பீஷ்ம, விபீஷண, சம்பாதி பாகவதரால் பூச்சியராகி, ஏகதண்டி,திரிதண்டி, முதலான தன்பக்தாளோடு பிர்ம்மேந்திராதிதேவதைகள் செவிப்பவிருப்பான்.

## சண்முகாதிலோகங்கள்.

அதற்குமேல் ஒருகோடி யோசனாந்தத்தில் சண்முகன்லோகமிருக்கும். அதன்மேல் ஒருகோடி யோசனாந்தத்தில் உமாலோகமிருக்கும். அதன்மேல் ஒருகோடி



யோசனாந்தத்தில் காமதேநு லோகமிருக்கும். அதன்மேல் மூன்றுகோடி யோசனாந்தத்தில் சோதிமயமான முக்தித்தானமானருத்திரலோக மிருக்கும். அதுகைலாசமென்றும், பிரதமலோகமென்றும் பெயர்பெற்று அதிசோபையாயிருக்கும். அங்கே சத்துவ ராஜச, தமோகுணத்திருந்து சகத்தின்சிருட்டி திதிசங்கார கிருத்திய கர்த்தனுன ருத்திரனுல், கோக்ஷீர தவளதரமயசரீரத்தின் சடாமகுட சந்திரகலே ஏகமுக திரிநேத்திர நீலக்கிரீவத்தினிருந்து பரசு மிருக வர அபயங்களுள்ள வாமதக்ஷணகர சதுஷ்டயங்களோடு ஸ்வராத்மராமனுனவாஹிய விஷய வியாமோகமில்லாமல் நிக்கிரகம் காட்டும்பொருட்டுப் போர்த்துடுத்த கஜவியாக்கிரசர்ம்மசர்ப்பாபரண பஸ்மோத்தூளந சிரோமாலேகளால் அலங்கிருதனுகிக் கிரிசாசமேதனுகிச் சகலதேவதா சர்வ்வபூமனுகிச் சித்தி, க்ஷமை, திருதி, அதிஷ்டித,ஆத்மபோத, சிருஷ்டி,விராக,தபசு,மதி ஈச்சுவரத்துவமென்னுந் தசக வியாண குணயுக்தனுகி ஸர்வ்வக்ஞத்துவாதி சடாங்க ஞானாதிசட்குண அணிமாதி மகதைஸ்வரியங்க ளோடு கங்காவாலுக சமாருத்திரரும், பிர்ம்மேந்திர உபேந்திரமநுமுநியாதி சகலதேவதா சேஷ்டர்களும் சேவை செய்யவிருப்பன்.

## அஷ்டமாசித்திகள்.

அணிமாதிலக்ஷண மெப்படியென்ருல் அத்தியந்த சூட்சுமமான பிராணிகள் ஆத்மத்துவத்தின் பிரகாசிப்பதே அணிமா.

பிரம்மாண்டாதி சிவாந்தமான (ஙசு) தத்துவங்களிலும் புறம்பேவியாபித்துவர்த்திப்பதேமகிமா.

மகாமேருவையொத்த சரீரமுள்ளவன் பரமாணுப்போலிருத்தலே லகுமா.

பரமாணுச்சமானதேகமுள்ளவன் மேருவைப்போல விருப்பதே கரிமா.

சுவஸ்தானத்தி லிருந்து வேண்டுவ அடைதலே பிராப்தி.

தன்னிச்சை யிலிருந்து ஆகாசகமநாதி சருவசித்தி யடைவதும், சொஸ்ஸரீர பிரகாசத்தினில் சருவார்த்தங்கள் விளங்குவதும் பிராகாமியம்.

ஜகத்துத்பத்தியாதி காரணகிருத்தியமும், சூரியாதிகளைப் பிரேரிப்பதேஈசத்துவம்.

சகல திக்குப்பாலகருடன்கூடிச் ஜகந்தன்னுதீநமாக நடத்துவதே வசித்துவமென்று நிச்சயிப்பதாம்,

மற்றந்த ருத்திரலோகத்தின்மேல் பிர்ம்மாண்டம் ஊர்த்தகடாந்தம் ஒருகோடியோசனை யளவாகியிருக்கும். அதற்குமேல் பிர்ம்மாண்டப்புறவெளியின் அக்கிரப்பிரதேசத்தினில்(௩உ)கோடியோசனைவிசாலஉந்நதமாகிச் சிவலோகமிருக்கும். அதில் சோதிமயமான கோட்டை (௩உ)கோடியோசனை விஸ்தீர்ணமாகியிருக்கும். அதில் விசித்திரரசனையுள்ள எட்டுவாசலுண்டு. அந்தவாசலில் அத்தியந்த பராக்கிரமிகளாகிக் காத்திருக்கும்வைரவலக்ஷண மெட்படியென்றால்.

## அஷ்டவைரவர்லக்ஷணம்.

ரத்தவர்ண தீர்க்கசரீரத்திரிநேத்திர தண்டு கமண்டல பாச சபமாலிகைபிடித்த கரசதுஷ்டயத்தோடு பிராம்மியென்னுஞ்சத்திசமேதனுய் அம்ஸவாகநத்தில் தனக்குச் சமானமான படரேழுகோடியர்சூழ பூருவவாசலில் மகாவைரவனிருப்பன்

இரணிய மயஸ்தூலகாய திரிநேத்திர சூல, டமருக, கட்க, கட்டுவாங்கம் பிடித்த கர சதுஷ்டயத்தோடு



மகேச்சுவரி சமேதனுய்,அசவாகநமேறித்தனக்குச் சமானமான (மகூ) கோடிபடர்சூழ அக்கினி திசைவாசலில் உக்கிரவைரவனிருப்பன்.

பின்னுஞ்சுவர்ண மய மகாமூர்த்தியாய்த் திரிலோசநங்களுடன் வச்சிர,சத்தி, சூல, தண்டம் பிடித்த கரசதுஷ்டயத்தோடு கௌமாரியென்னுஞ் சத்திசமேதனுய் மயூரவாகநமேறித் தனக்குச்சமானரானபடர்(ரு)கோடியர் சூழத்தக்ஷணவாசலில் சண்டவைரவனிருப்பன்.

சுவர்ணமய காந்திச்சரீரத்தோடு திரிநயந சங்கு சக்கர, கதா, சார்ங்கம்பிடித்த பாணிசதுஷ்டயத்தோடு வயிணவியென்னுஞ் சத்திசமேதனுய்க் கருடவாகநமேறித்தனக்குச்சமானமான(ரு)கோடிவைரவர்சூழக்குரோதவைரவன் மகாசோபையுடனிருதிவாசலிலிருப்பன்.

பின்னு மயூரவர்ணமான உந்நதகாத்திரத்துடன் திரியக்ஷமோடு சங்க, கட்க, பலகை முசலம்பிடித்த கரசதுஷ்டயத்தில் வராகியென்னுஞ் சத்திசமேதத்தில் மயிஷவாகநத்தில் தனக்குச்சமானமான (சு)கோடிபடர்சூழப்பச்சிமவாசலில் உன்மத்த வைரவனிருப்பன்.

பின்னும் மாணிக்கவர்ணமய பீநசரீரத்தில் திரிலோசந வச்சிர, சத்தி, தநு, சரம்பிடித்த கரசதுஷ்டயத்தோடு மகேந்திரியென்னுஞ்சத்திசமேதத்தில் கசவாகநத்தில் தனக்குச்சமான மான(ரு) கோடிபடர்சூழ வாயுதிக்குவாசலில் கபாலவைரவனிருப்பன்.

மேலும் தாம்பிரவர்ண மயபயங்கர தநுவோடு அக்ஷத்திரய, சூல, டமருக, கண்டை,கபாலம்பிடித்த கரசதுஷ்டயத் துடன்சாமுண்டியென்னுஞ் சத்தி சமேதத்தின் காக்கைவாகநத்தில் தனக்குச் சமானமான கோடிபடருடன்கூடிஉத்தரவாசலில்பீஷணவைரவனிருப்பன்.

மேலும் ஏமவர்ணமய பிரசண்ட விக்கிரகத்தில் லோசநத்திரயத்தில் கட்க, கதை, கெடக, பாணம்பிடித்த கரசதுஷ்டயத்தின் மகாகாளியென்னுஞ் சத்திசமேதத்தில் தனக்குச்சமானரான (அ) கோடி படர்சூழ ஈசாநவாசலில் ஸாஹர வைரவனிருப்பன்.

மற்றிப்படித் தங்கள்நாமோற்சரண மாத்திரத்தில் சகல விக்கிநங்களையும்பரிகரிக்கும்அஷ்டவைரவர்கள் அதிசோபையாக விருப்பர்.

## வாயிற்காவலர்லக்ஷணம்.

இப்படி அதிசோபந அதிரம்மிய அதிநூதந அதிவிசாலமாகிமணிமய விஸ்வகர்ம்ம நிர்ம்மிதமான அந்தப்புரமத்தியத்தில்மகாதேவன் அரண்மனை (உரு) கோடியோசனை விசாலம்அதற்குச் சதுர்த் துவாரங்க ளுண்டு. பூருவதிக்கின் துவாரருக்குவேதவாசலில் நான்கு அற்புத கூஷ்மாண்ட கணேச்சுவரருடன்கூடி வேத்திரஅஸ்தனுன நந்திகேச்சுவரன்காத்திருப்பன்.

மற்றந்தத்தக்ஷணதிக்கின்து வாரகோபுரமே எசுர்வேதமயமென்ன லக்ஷயோசனை விசாலவுந்நதமாகி நீலவர்ணத்தின் ஆகாரமாகியிருக்கும். அந்தவாசலில் அசங்கியத்ரோம கணேச்சுவரர் சகிதமாகி வீரேச்சுவரன் காத்திருப்பன்.

மற்றந்தப் பச்சிமதிக்கின் துவாரகோபுரமே சாமவேதமயமாகி லக்ஷயோசனை விசாலோந்நதமான ரூப, பிரகாரமாகி யிருக்கும். அந்தவாசலில் அகணித ருத்திர கணங்களுடன்கூடி நீலலோகிதன் காத்திருப்பன்.

மற்றந்த உத்தரதிக்கின் துவாரகோபுரமே அதர்வண வேதமயமாகி லக்ஷயோசனை விசாலவுந்நதமாகிக் குங்குமவர்ண ஆகாரமயமாகி யிருக்கும் அந்தவாசலில்



அபரிமிதப் பிரமதகணசமேதனுகி மகாகாளன் காத்திருப்பன். பின்னையந்த நான்குதிசைவாசலுள்புக்குப்பார்க்கும்போது பார்வைக்கு ஆச்சரியந்தோன்ற வர்ணனைக்கு அநுஉபமையாகிச் சருவேச்சுவரன் சபாமண்டபம் பரிசோபித்திருக்கும். அதனடுவில் கோடி சூரியப்பிரகாசங் கீழ்ப்படத்திவ்வியசிங்காசநம் ஒருலட்சயோசனை விசாலோந்நதமாகி ரஞ்சித்திருக்கும். அந்தச்சிங்காஸநஆக்கிரத்தினில்குணத்திரியா தீதனுனபிரணவாதாரமான பிர்ம்மாதித்திரிதேவர்களால் தொழப்பட்டுத்தனக்கு ஒன்றும் சமானமின்றி ஆதிமத்தியாந்தரகிதனுனசருவாந்தரியாமியான சருவகாரணனுன மாயாவியானஸ்மரண மாத்திரத்தில் பாபக்ஷயஞ்செய்துபோகமோக்ஷப் பிரதனுன சாம்பசிவனுனவன் படிகவர்ண சரீரனுய்ச் சந்திரமௌலியாய்ப்பிரசந்நவதநத்தில் அநந்தகோடி கந்தர்ப்பலாவண்ய திரிநேத்திர நீலக்கிரீவ வர அபயகரத்துவயதவளயக்ஞ உமாசகிதனுன வாமாங்கத்தில் போர்த்துடுத்த வியாக்கிர கச சர்ம்ம கடக மகுட கேயூர குண்டலாதி சர்ப்பாபரண கந்தபுஷ்பாதிகளால் அலங்கிருதனுகிமகேச்சுவர னிப்படிச் சோபையாகி யிருப்பான்.

அந்தச் சிங்காதனத்தின்கீழ் இடவலத்தில் குகனும் கணபதியும் மற்ற இரண்டுபுறத்திலும் தேவர், கந்திருவர் முநிசிரேஷ்டரும், பரிசுவ, பிரசூதி, க்ஷதி, கியாதி, தித்துதி, சம்பூதப்பிரீதி, க்ஷமை, சந்நதி, அநுசூயை, தேவபாகை, அருந்ததி யென்னும் ஏகாதச பதிவிரதையரும், தும்புரு நாரதாதியரும், ருத்திரகணிகையரும், ருத்திரகணம், பிர்ம்மகணம், அரிகணம், பக்தர்கணஞ்சூழக், கோலாகலமாகி, நந்திகேச்சுவராதி சிவகணங்களின் சபாமத்தியில் சகலவரப்பிரதனுகிய சர்வ்வேச்சுவரனுன சாம்பசிவன் பிரகாசித்திருப்பன்.

நந்திகேச்சுவரர், பிருங்கி, மகாகாளர், கிரீடி, கண்டர், காலர், காலகண்டர், கண்டாகர்ணர், சுபோஷ, தண்டிஈசாநியரென்னும் ஏகாதசமுக்கிய கணேஸ்வரர் அநந்த சம்பிரமத்தோடு பூருவதிசை ஓலக்கஞ் சேவிப்பர்.

பிர்ம்மமுநிகள், காலாக்கிநிருத்திரர், வீரபத்திரர் பிநாகி, காலகண்டர், அங்கிரிதராள, கஜகராள, முககராள, நேத்திரகராள, சோத்திரகராள, சண்டமாலாதர, திரிசூலி, விசுவமாலாபதி, அண்டாதிநாத, காலாந்தக, லகுளீச, மயூராநந ரென்னும்பதினெட்டு முக்கிய கணேசர் அசங்கியா கணங்களுடன்கூடித் தக்ஷணதிசை ஓலக்கஞ் சேவிப்பர்.

தண்டதர, தண்டமாத, தண்டவாகு, பிரசண்ட, பிரசண்டார்ச்சித, பிரசண்டகாவர, பல, பலவிகரண, சுமாலிய, சர்வ்வபூத, தமந, மநோந்மந ரென்னுந் துவாதச முக்கிய கணுக்கிர கண்ணியர் அகணித கணஞ்சூழ பச்சிமதிசை ஓலக்கஞ் சேவிப்பர்.

நாராயணன், திக்குப்பாலகர், ஏகாதசருத்திரர், துவாதசாதித்தர், அஷ்டவசுக்கள், பிரபாவ, புஷ்கர, ஆஷாடி, டிண்டி, அமரேச, நைமிஷ, நரகுலனென்னும் துவாதச முக்கியதேவதைகள் அபரிமித தேவதைகள் சூழ உத்தரதிசை ஓலக்கஞ்சேவிப்பர்.

பூர்வ்வோக்த தேவதைகளின் தாரதம்மிய மெப்படியெனின் பிராமணரில், மத்தியகந்திருவர் விசேஷம்; அவரில் தேவகந்திருவர் விசேஷம்; அவரில் தர்ம்மதேவதைகள் விசேஷம்; அவரில் அசாநதேவதைகள் விசேஷம்; அவரில் சுரபதிகள் விசேஷம்; அவரில் பிரஹஸ்பதிவிசேஷம்; அவரில் பிர்ம்மன் விசேஷம்; அவரில்விஷ்ணுவிசேஷம்; அவரில் ருத்திரன்விசேஷம்; ருத்திரனில் சாம்பசிவனுன மஹேச்சுவரன் விசேஷமாமென்று சுருதிபுராணங்கள் சொல்லுகின்றன.



இப்படிச் சகலதேவதா வல்லவனுன குணதீதனுன மஹேச்சுவரனைப் பூசிக்கும்விதம் எப்படியெனின்.

சாம்பசிவ மஹேச்சுவரனென்னுமிருவருக்கும்லிங்கலக்ஷணமான ஏகாதிகரணத்தில் பூசைசெய்வதனுல்.

பிரணவ பஞ்சாக்ஷர மந்திரங்களாற்செய் உபயபூசை சமானமாகும் இது ஐந்துவகையாம்.

கேவலருத்திரபூசையே கநிஷ்டமாம். அந்தஇருவரில் ருத்திரப்பிரதாநமான பூசையே மத்திமமாம். சிவருத்திர சம்மிதமான பூசையே உத்தமமாம். கேவலச்சிவப்பிரதானமான பூசைமத்திமோத்தமமாம்.

அந்தமஹேச்சுவர நிருபாதிகமானசிதாநந்தபூசையே உத்தமோத்தமமாம். இந்த உத்தமோத்தமபூசையே சிவப்பிரீதியாகியிருக்கும். பின்னேவஹ்நி சூரிய இந்திரபிர்ம்மாவிஷ்ணுமுதலானதேவதைகளுக்குச்சிவனுடன் அதிகரணபூசை யில்லையாகிப் பிந்நாதிகரணபிந்நமந்திர பிந்நபூசைக்குக் கர்த்தவ்வியமென்று புராணுேக்தமாகும்.

பின்னே அந்தஅக்கிநி சூரிய இந்திராதி தேவதாபசனையால் பிரம்மபூசைகிட்டும். அந்தப் பிர்ம்மபூசையால் விஷ்ணுபூசனே கிட்டும். அந்தவிஷ்ணுபூசனையால் ருத்திராராதனே கிட்டும். அந்தருத்திராராதனையால் சிவபக்திகிட்டும். அந்தச்சிவபக்தியால் இகபரலோகங்கள் பராபர முத்திசித்திப்பதாகிச் சிவபக்தியே சர்வ்வோத்கிருஷ்ணமென்று நிர்த்தாரஞ் செய்யவேண்டும்.

பின்னேயிப்படிச்சொன்ன பிரகாரம் எண்ணிப்பார்க்கப் பூலோகாதி துருவமண்டல பரியந்தமான புவர்லோகம் (கரு) லக்ஷயோசனையாம்.

அதன்மேல் சுரலோகம் (அரு)லக்ஷ யோசனையாம்.இரண்டுங்கூடி ஒருகோடி யோசநாந்தமாம். மகாலோ

கம் (உ) கோடி யோசனையாம். சநலோகம் (அ) கோடி
யோசனையாம். தபோலோகம் (௰உ) கோடியோசனையா
ம். சத்தியலோகம் (௰௬) கோடியோசனையாம். விஷ்ணு
லோகம் (௫) கோடியோசனையாம். குமாரலோகாதி ருத்
திரலோக பரியந்தம் (௬) கோடியோசனையாம். ருத்திர
லோகாதி பிர்ம்மாண்ட ஊர்த்தகடாந்தம்வரை ஒரு
கோடி யோசனையாம்.

இப்படிப்பூமியாதிபிர்ம்மாண்ட ஊர்த்தகடாந்தபரி
யந்தம் (௫௰) கோடியோசனையாகும். பின்னையந்தக்கடா
தி பூமிபிருஷ்ட பரியந்தம்(௫௰)கோடியோசனையாம்.இப்
படி இரண்டுங்கூடிய பிர்ம்மாண்டகோளகை நூறுகோ
டி யோசனைப் பிரமாணமென்று விவேகிக்க வேண்டும்.

பின்னையிந்தப் பிரகாரத்திருந்து விசித்திர ரசனை
யுள்ள பிர்ம்மாண்டத்தின் விஸ்தீர்ணம்பூர்வ்வாதி திக்
கெட்டுள்ளும், இந்திராதி லோகபாலாஷ்டகர் ரக்ஷித்
துக்கொண்டிருப்பர். இப்படிப்பட்ட பிர்ம்மாண்டங்கள்
அநந்தகோடி யுண்டென்று நிச்சயிக்கவேண்டும்.

பின் இங்கே மாயாத்மா சம்பந்தலக்ஷண காலதத்
துவமே அவுதும்பர விருக்ஷத்தில் ஓரோசமயத்திற்
சநித்திருக்கும். அதிற் சநித்துக்கெடப்பட்ட, தரங்க
ளொன்றுக்கொன்று அறியாது. அதுபோல இந்தச்சக
ல பிராணிகளென்னுஞ் சகவிசாரங்களுள்ளே சிவரசா
ண்டங்க ளென்னும் பலங்களுண் டென்பது உபமா
னமாகும்.

## யோசனையின்பிரமாணம்.

அதற்குமேல் இப்படி யோசனைப் பிரமாணத்திரு
ந்து சமஸ்த தத்துவவியாப்பிய வியாபகஸ்திதி முத
லானவை அறியத்தக்கதாகிய யோசனைலக்ஷணம் யா
தெனின்.



எட்டுப் பரமாணுக்கொண்டது, திரிசரேணுவாம்;
இதேகவாக்ஷ மத்திய கத சூரியப்பிரபையிற் ருேன்றும்
ரசசியாம்.இதுஎட்டுக்கூடி னது வாலாக்கிரமாம்.வாலா
க்கிரம் எட்டுக்கொண்டது லிக்ஷையாம்.லிக்ஷை எட்டு
க்கூடினது யுகமாம்.யுகம்,எட்டுக்கூடினது யவையாம்.
யவை எட்டுக்கூடினது உத்தமமாநாங்குலமாம். யவை
ஏழுகூடினது மத்திமமாநாங்குலமாம். யவை ஆறு கூடி
னது அதமமாநாங்குலமாம் இதேமாநாங்குலப் பிரமா
ணமாகும்.

மாத்திரையங்குலப் பிரமாணமெப்படியெனின், க
ர்த்துருவின் மத்தியமாங்குலியின் நடுப்பருவத்தின் தீர்க்
கமே மாத்திராங்குலமாம். இதற்குக் காற்பங்குகுறைவ
துமத்திமமாத்திராங்குலமாம்.அந்தப்பர்வ்வார்த்தமேஅ
தம மாத்திராங்குலமாம்.தேகலதாங்குலப்பிரமாண மெ
ப்படியெனின், தன்கையிற்கொண்ட பிரதிமையின் தீர்
க்கங்களை ஒவ்வொரு அவயவத்துக்கும் இவ்வளவு இவ்
வளவென்று விபாகிப்பதே தேகலதாங்குலமாம்.

இவற்றுள் உப்பரிகை முதலானவைகளை மாநாங்
குலத்தினுலும், குண்டம், குளம், முதலான அநுக்கிர
க உபகரணங்களை மாத்திராங்குலத்தினுலும். பிரதிமை
யவயவங்களைத் தேகலதாங்குலத்தினுலும் அளவு செய்
வதாம். இப்படி அங்குலபேதங்களை யறிந்துகொள்க.

அஸ்தபேதம் எப்படியெனின். பூர்வ்வோக்தமாநா
ங்குலம், (உ௪) கொண்டது இங்கராத்தமாம், (உ௫)கொ
ண்டது பிரஜாபதிஅஸ்தமாம். பிரஜாபதிஅஸ்தம் (உ௪)
கொண்டது தநோர்முஷ்டி யஸ்தமாம் தநோர்முஷ்டி
யஸ்தம்(உ௬)கொண்டது தநுக்கிராஸ்தமாம். களேபரா
திசேமங்களுக்குக் இங்கராஸ்தத்தினுலும், மனேதேவ

கோட்டம்லிங்காலயங்களுக்குப் பிரஜாபதிஅஸ்தத்தினு லும், பட்டணுதிகளுக்குத் தநோர்முஷ்டி அஸ்தத்தினு லும் க்ஷேத்திரப்பிரமாணயோசனை தநுக்கிராஸ்தத்தி னுலும் அளவிடவேண்டும்.

அந்தத் தநுக்கிராஸ்தம் நான்குகூடினது தநுவாம். தநுஇரண்டு கூடினது தண்டமாம். தண்டம் இரண்டாயிரங் கூடினது கோஷமாம். கோஷம் இரண்டு கூடினது கௌவிய பூதமாம். இது இரண்டுகூடினது யோசனையா மென்றறிவது.

விவேகசிந்தாமணியில்,

ஆ று வ து,

ஊர்த்தலோகஸ்திதியுரைத்த பரிச்சேதம்

முற்றிற்று.

---

உ

சிவமயம்.

ஸ்ரீகுருப்யோநம:

# விவேகசிந்தாமணியில்,

## ஏ ழா வ து,

### அதோமாயாஸ்திதியுரைத்த பரிச்சேதம்.

முன்பரிச்சேதத்தில் ஊர்த்தலோகஸ்திதி தெளிவாய்ச்சொன்னேன். இனியதன் அகிர்ப்பாகத்தின்சம்பந்தமும், ஒழுக்கமாகச் சகலரும் அறியும்படி சொல்லுகிறேன். எப்படியெனின்.

அதனதனில் அதிகமான ஞானதேசோபல ஐச்சுவரியாதி குணவிசிஷ்ட ஊர்த்தலோகஸ்திதியை ஆகமப்பிரமாணத்தினுல் மேற்சொல்லும் புவநபதிகள் உத்தரோத்தர போகங்களென் றறியத்தக்கதாகிப் பூர்வோக்தபஞ்சமகாபௌதிகப் பிரமாண்டமுள்ள அதன் அகிர்ப்பாகத்தின் கேவல பிருதிவுதத்துவத்தில் இந்திராதி தசதிக்கினுள்ளிருந்த இந்திராதி தேவதைகளுக்கு நியந்துருக்களாகிப், பரமஐச்சுவரிய சம்பந்நராகித், தம்முடன் விசித்திரவேஷதாரிகளான மகாபராக்கிரமிகளான, நாநா சத்திரபாணிகளான, கங்காவாளுக சமாருத்திருடன்கூடித், தத்பிர்ம்மாண்ட ரக்ஷகரான சதருத்திரர் நாமதேயங்களெவையெனின்;

க-வது. சதருத்திரர் நாமங்களுந்திக்குகளும்.

கபாலீசன், அசபுத்தன், வைச்சிரரேகி, பராமார்த்தன், பிரபூதி, அவ்வேயன், சாஸ்துரு, பிநாகி, திரிதேசன், வந்திதரென்னுந் தசருத்திரர், இந்திரதிக்கினிருப்பர்.

அக்கினி, ருத்திரன், ஹுதாசி, பிங்கலன், ப்ரதகன், ஹ்ரஸ்வலன், தஹன், பெப்பிரு, பஸ்மாந்தகன், க்ஷயாந்தகன் என்னுந்தசருத்திரர் அக்கினிதிக்கினிருப்பர்.

யாம்மியன், மிருத்து, காதாத்துரு, விதாத்துரு, கத்துரு, காலன், தர்ம்மன், அதர்ம்மன், சையோக்தன், வியோக்தன்என்னுந்தசருத்திரர்இயமன்திக்கினிருப்பர்.

நைருதன்,மாரணன்,அந்துரு,குரோரதிருஷ்டி,பயாநகன், ஊர்த்தசபன், விருபாக்ஷன், தூமன், லோகிகன், தௌஷ்டிரிகன்,என்னுந்தசருத்திரர்நிருதிதிக்கிலிருப்பர்

பலன், அதிபலன், பாசஸ்தன், மகாபலன், சுவேதன், செயபத்திரன், தீர்க்கபாகு, செலாந்தகன், வடபாமுகன்,பீமன்என்னுந் தசருத்திரர்வருணதிக்கினிருப்பர்.

சீக்கிரன், லகு, வாயுவேகன், சூக்ஷ்மன், தீக்ஷணன், க்ஷயாந்தகன், பஞ்சாந்தகன்,பஞ்சசிகி, கபர்த்தி, மேகவாகநன் என்னுந் தசருத்திரர் வாயுதிக்கினிருப்பர்.

சடாமகுடதாரி, நாநாரத்திநதாரி, நிதிசாரூபன், வாநதந்நியன், சௌமியன், தேகன், பிரசாதக்கிருது, பிரதிகாலன், க்ஷ்வரன், காமரூபன் என்னுந் தசருத்திரர் குபேரதிக்கினிருப்பர்.

வித்தயாதரன், ஞாநதரன், சர்வ்வவிக்நன், வேதபாரகன், மாத்துரு, விருத்தபிங்களன், க்ஷபூதபாலன்,பலிப்பிரியன், சர்வ்வவித்தியாவிதாத்துரு, சுகதுக்கன் என்னுந்தசருத்திரர் ஈசாநதிக்கினிருப்பர்.

அநந்தன், தீரன், பாலகன், விரஷன், விரஷதரன், சுவரீயன், கிராசன், சுபலோகிதன்என்னுந் தசருத்திரர், பிர்ம்மாண்ட அதோபாகத்திலிருப்பர்.

சம்பு, விபு, கணுத்தியக்ஷன், திரியக்ஷன், திரிதசன்,வந்திதன், சம்ஹரன்,விவாஹரன்,நபலிப்பிசு,விசக்ஷணன்என்னுந்தசருத்திரர் ஊர்த்தப்பிரதேசத்தினிருப்பர்



## வீரபத்திரகுய்யர்கள்.

பின்னும், இப்படியிருந்து இந்திராதி லோகப்பாலாஷ்டகரின் பிர்ம்மாண்ட சுதர்களால் முறையே பூச்சியரான, தம்நாமோச்சாரண ஆராதனைகளால் இஷ்டார்த்தப் பிரதரான சர்வ்வக்ஞரான சதருத்திரருக்குக் கர்த்தரான வீரபத்திரன் நீலவர்ணமய சரீரத்தோடு சடாமகுட ஏகமுகதிரிநேத்திர திவ்வியாங்குலிகளின், கட்க, பலகை, சாப, பாணங்களுள்ள வாமதக்ஷணகர சதுஷ்டயத்துடன், வஸ்திர, கந்த மாலிகாபரணங்களால் அலங்கிருதனுகிப், பத்திரகாளிசகிதனுகித், துஷ்டநிக்கிரக, சிஷ்டபரிபாலகனெனப் பிருதீவியாதி சூக்ஷ்ம பூதவர்க்கத்திலிருப்பன்.

## அப்புதத்துவம்.

அதன்மேல் ஸ்தூலரூபபிருதீவு தத்துவத்துக்கப்பால் தசகுணம் அதிகமாக ஆவரித்திருக்கும், அப்புதத்துவத்தினில், அமரேசன், பிரீரிபாசன், நயிமிசன், புஷ்கரன்,ஆஷாடி, டிண்டி, பராபூதி,நரகுலன் என்னுங் குய்யாஷ்டகரிருப்பர்.

## தேயுதத்துவம்.

பின் அந்த அப்புதத்துவத்துக்கப்பால் தசகுணமதிகமாக ஆவரித்திருக்கும், தேயுதத்துவத்தினில், அரிச்சந்திரன், ஸ்ரீசைலன்,கல்ப்பமாநன், மாதகேச்சுவரன், மகாகாளன்,மத்திமன், கேதாரன், வைரவன் என்னும் அதிகுய்யாஷ்டகரிருப்பர்.

## வாயுதத்துவம்.

பின் அந்தத் தேயுதத்துவத்துக்கப்பால் தசகுணமதிகமாக ஆவரித்திருக்கும் வாயுதத்துவத்தினில், கயன், குருக்ஷேத்திரன், நாகலண்டன், கலவிமலன், அஷ்டஹாசன்,மகேந்திரன்,வீமன் என்னுங் குய்யாத்குய்யாஷ்டகரிருப்பர்.

## வியோமதத்துவம்.

மற்றந்த வாயுதத்துவத்துக்கு அப்பால் தசகுண மதிகமாக ஆவரித்திருந்த வியோமதத்துவத்தில் வஸ்திரிபாதன், ருத்திரகோடி, அவிமுத்தன்,மகாபலன்,கோகர்ணன், பத்திரகர்ணன், சுவர்ணுக்ஷன், ஸ்தாணு, என்னும் பௌத்திராஷ்டகரிருப்பர்.

பின்னும் இப்படிப் பூர்வ்வோக்தலோகபாலாஷ்டகருடன் கூடிப் பஞ்சாஷ்டகரான நாற்பதுபுவநாதிபதிகளே சர்வ்வக்ஞத்துவ, சர்வ்வகர்த்திருத்துவ சஹிதராகிப் பூலோகத்தினில் அந்தந்த நாமதேயத்தோடு அவதரித்துச்சகல லோகாபிமதப்பலப் பிரதாயகராகி யிருப்பர்.

பின்னு மந்தப் பிருதிவாதி பஞ்சமகாபூதங்களுக்கு முறையே காரணமான கந்தாதி தன்மாத்திரைகளென்னும் ஐந்தனிடத்தில் மந்திரரூபி, சுவாகு, பாசுர, சர்வ்வவிது, அஸ்வேஸ்வரனொன்னும் பஞ்சபுவநாதிபதிகளுடனே முறையே கந்தாங்க, சலோதர, பாநுமாநு, பலவத்தா, சூக்ஷுமநாதுரர் என்னும் ருத்திரர்கள் இருப்பர்.

பின் அந்தத் தன்மாத்திரைகளை ஆவரித்திருக்கும் கர்ம்மேந்திரிய பஞ்சகத்தில், காலதாங்குஷ்டிர,பிங்கலாக்ஷ, ரஷத்திர, கேடிலி, விசாலரென்னும் பஞ்சபுவநபதிகளுடனே, துந்துபி, சமாதான, தூர்ணுக, அருத்திரபிரணவ, கணுநந்தர்களென்னும் ருத்திரர்கள் முறையேயிருப்பர்.

பின்னுங் கர்ம்மேந்திரியத்தின்மேல் சோத்திராதி ஞானேந்திரியங்களும், மநமுமென்னுமாறில் முறையே காமரூபி, பூதவாகன், பிரஜாபதி, கணகவி, துரக, அநுபம, குணயிதர்என்னும் புவநபதிகளுடன், யோமாசார சருவாங்க, பிரகாசக, மகாவக்கிர, நிலுமாக, சங்கற்பனொன்னும் ருத்திரர்கள் முறையேயிருப்பர்.



பின்னும்அந்தக் கந்ததன்மாத்திராதிமநசாந்தமான சோடச விகாரங்களுக்குக் காரணமான பூர்வ்வோக்தமான ஆகாசத்திருந்தப்பால் தசகுணமதிகமாக ஆவரித்திருந்த ஆங்காரதத்துவத்திருந்து சாகலண்ட, துகூஷரண்ட,மகுட,மண்டலேச்சுவர, காளாஞ்சந, சிங்ககர்ம்ம,ஸ்தூலேச்சுவரர் என்னுந் தாணுவாஷ்டகரிருப்பர்.

## புத்தியாதிதத்துவங்கள்.

பின் அப்புத்தி தத்துவத்திருந்தப்பால் தசகுணதிகமாக ஆவரித்திருந்த குணதத்துவத்தினில் அக்கிருதகிருத, வைரவ, பிர்ம்ம. விஷ்ணு, குமார, உமை, ஸ்ரீகண்டனொன்னும்யோகாஷ்டகரிருப்பர்.

பின் இந்தக்குணதத்துவத்துக்கப்பால் தசகுணோத்தரமாக ஆவரித்திருக்கும்பிரகிருதி தத்துவத்தினில், குரோதச, சண்டஸண்ட, சங்வரத, சோதிபிங்கல, சுராக, பஞ்சாந்தக, ஏகவீர, சிகேசனொன்னும் மகாதேவாஷ்டகரிருப்பர்.

பின் இப்படிப் பிர்ம்மாண்டாதி பிரகிருதி கடையானதத்துவங்களே தசகுணோத்தர வுத்தரமாகி யிருப்பதென்று தெளியவேண்டும்.

பின் அந்தப்பிரகிருதி தத்துவத்துக்கப்பால் நூறுமடங்கு ஆவரித்திருக்கும் புருஷதத்துவத்தினில் சர்வ்வேந்திரிய, சர்வ்வதநு, சர்வ்வாந்தக் கரணங்கள் ஆசிரயமென்னு மருத்த ரிருப்பர்.

அங்கே புருஷனுனல் நித்தியவியாபக சைதந்நியமயனுகிக் காரியமயனல்லவாகிலும்முன்னேசொல்லுவேன். ராகாதி கலாந்தமான பஞ்ச கஞ்சுக யுக்தனுவதால் உபசாரத்தில் தத்துவங்களுடனே யெண்ணிக்கைபட்டவனுகிப் புவநாசிரயனேயாம்.

எப்படியெனின் கங்கையினிடத்தில் ஊரிருக்குமென்பதுபோல லக்ஷணவிருத்தியினுல் தற்சமீபத்தின் பி

ரகிருதி மஸ்தகத்துள் அந்தப் புவநங்க ளிருக்குமென் றுவிபாகித்துச் சொன்னேன்.

பின்புருஷதத்துவத்துக் கப்பால்நூறுமடங்குஆவரித்திருக்கும்ராகதத்துவத்தினில்வாமதேவ,பீம,உக்கிர,பவாய,சர்வ்வேச்சுவர,ஏகவீர,பிரசண்ட, ஈச்சுவர,உமாபத்துருசய, அநந்த, ஏக,சிவரென்னும் ருத்திரரிருப்பர்.

பின் அந்த ராக தத்துவத்துக்கப்பால் ஆயிரமடங்கு ஆவரித்து வித்தியாதத்துவத்தில் மகாதச, மகாதேவ, பவ, உப்பவ, ஜோதி பிங்கக்ஷண, ஈச்சுவர, புவநேச்சுவர,அங்குஷ்டமாத்திரமென்னும் ருத்திரர்,சங்குருஷ்ட, சூதருஷ்ட, சுரூப, ரூப, வர்த்தந, மநோந்மந ரென்னும் ஸ்கீச பஞ்சகருங்கூடி மகாவீரிய, கல்லியாண, பிங்கல, பெப்பிரு, வீர, பிரபாந, மேகாதித, மந்தக,தாஹாரகக,சாஸ்திரிகாரக ரென்னும் ஆசாரிய தசகரிருப்பர்.

மற்றந்த வித்தியாதத்துவத்திற் கப்பால் லக்ஷமடங்காக ஆவரித்திருக்கும் நியதிதத்துவத்தினில் சூத்திரவடருத்திர, புல்லூருபுகு, நீலலோகித, சோதிரூப, பரமேச்சுவர, பரமபிங்கேக்ஷண, வாமதேவ, சருவ, பவ, உத்துபுவ, வச்சிரதேக, பிரபு கிரம, விக்கிரம, சுப்பிரபவென்னும் ருத்திரரும், ஸ்தாபக. வர்க்காக்ஷ, யம, திரிசிரீ சிரீபுஷ்டரொன்னுஞ் சில்பி ருத்திரர் ஐவரிருப்பர்.

இந்தச்சகத்தின் அசீ,மசீ,கிருஷீ,வாணிச்சிய,தேவ நிர்ம்மாணமென்னும் பஞ்சகிருத்திய நியமகராயிருப்பர்.

மற்றந்த நியதி தத்துவத்துக்கப்பால் லக்ஷமடங்கு ஆவரித்திருக்குங் காலதத்துவத்தினில்,மாயிய,ஆலாஹல,குரோதந,வடவாமுக, உச்சிருஷ்ட, சாபர, சண்டமாதங்க,கோரரூப, சுத்த, புத்த, பிரபுத்த, பிரசாந்த,பரமாத்தும, சீவ, சுசீவ, பொப்புரு, நிமல, அக்ஷர, சம்பு என்னும் ருத்திரரிருப்பர்.



மற்றந்தக் கால தத்துவத்துக்கப்பால் தசலக்ஷமதிகமாய் ஆவரித்திருக்கும் கலைதத்துவத்தில் ககநேச, சாத்திய, விஷ்ணு, ஹர, தச, ஈசாந, மஹாவீரிய, திரிகால, கோபதிகளென்னும் ருத்திர்களிருப்பர்.

அந்தக்கலைதத்துவத்துக்கப்பால் கோடிகுணமதிகமாகி ஆவரித்திருந்த மாயாதத்துவத்தில், அநந்த,திரிகால,கோத்துரு, க்ஷேமீச, பிர்ம்மபதி, துருவ,தேசோதீப, சககேசரொன்னும் ருத்திரரிருப்பர்.

அந்தப்பிரகாரமான பிருதிவீயாதி மாயாந்தமானசமஸ்ததத்துவங்களில் இருப்பரொன்று சொல்லும் ருத்திரர் நாமதேயங்களால் அங்கங்கு புவநங்களாகி யிருக்கும். அந்தப்புவநங்கள் அசங்கையானதாகியிருக்கும், ஆதலால் முக்கிய புவநங்களை யெடுத்துச் சொன்னேன் அந்தப் புவநங்களெல்லாம் விசித்திர, நதி, நதம், நந்தநம், சரசு, புரம், பிரகாரம், துவாரம், வீதி, மந்திரம், பிரசாதாதி ரசனைகளின் கீதவாத்திய நிருத்தங்களின் வநிதாதி சகல சுகபோக சாதநங்களின் சம்பந்நராகி யக்கிய தபோதாநாதி சத்கிரியைநிஷ்டையிலிருந்து எய்தத்தக்கதாகி யிருக்கும்.

விவேகசிந்தாமணியில்,

ஏழாவது,

அதோமாயாஸ்திதியுரைத்த பரிச்சேதம்

முற்றிற்று.

---

உ

சிவமயம்.

ஸ்ரீகுருப்யோநம:

# விவேகசிந்தாமணியில்,

## எட்டாவது,

## சுத்தமாயாஸ்திதியுரைத்த பரிச்சேதம்.

இப்படி அதோமாயாசத்த பதார்த்தந்தெரிவித்தேன். இனி ஊர்த்தப் பிரகிருதியான நாததத்துவாதீகம் வர்ணிப்பேன் சகலருமறியும்படி அதெப்படி யெனின்.

### மாயாதிதத்துவங்கள்.

பூர்வ்வோக்த மாயாதத்துவத்திற் கப்பால் தசகோடி அதிகமாக ஆவரித்திருந்தசுத்தவித்தியாதத்துவத்தில் வாம, சேஷ. ருத்திரகால, கலவிகரண, பலவிகரண, பலப்பிர்ம்மத, நாத, சர்வ்வபூததமந, மநோந்மந, திரிகுணி, பிர்ம்மவேதாளி, தாணுமதி, அம்பிகை, ரூபிணி, ஸ்வாலைநந்திநி, வித்தையாபதியென்னும் புவநங்களிருக்கும்.

இவ்விடத்தில் காமிகாதி வாதுளாந்தமான இருபத்தெட் டாகமங்களும் மநநத்திராணதர்ம்மமுள்ள ஞாநசத்தி, அதிகமான கிரியாசத்தி நூநமான சத்தகோடி மகாமந்திரங்களிருக்கும். அவற்றில் மூன்றரைக்கோடி மந்திரங்களே பரமேச்சுவரன் நிரதிகரணதீக்ஷைக்கே சாதநங்களாகி யிருக்கும். மிக்க மூன்றரைக்கோடி மந்திரங்கள் குருசுவரூபமான ஈச்சுவரன், சாதிகரண தீக்ஷைக்கே சாதநங்களாகியிருக்கும்.

### (ருக) ருத்திரருத்திரிகள் நாமங்கள்.

மற்றந்த வித்தையாதத்துவத்தில் ஸ்ரீகண்ட, அநந்த, சூக்ஷ்ம, திரிமூர்த்தி, அமரேச, அரபீச, பராபூதி, திதீச, தாணுக, அரசேங்கிடேச, புவுரீக, சத்தியோசாத, அநுக்கிரக, ஈச்சுவர, அக்குரோர, மகாசேந, குரோ



தச, சண்டேச, பஞ்சாந்தக, சிவோத்தம, ஏகருத்திர கூர்ம்ம, ஏகநேத்திர, சதுராநந, அசேச, சரு சோமேச்சுவர, லாங்குலி, தாருக, அர்த்தநாரீஸ்வர, உமாகாந்த, ஆஷாடி, டிண்டி, அத்திரி, மீந, மேஷ, லோகித, சகிஸ்த, கலண்ட, ததுவிலண்ட, மகாதாள, வாலி, புசங்கேச, பிநாகேச, கஷ்கச, பக, சுவேத, பிருகு, லகுலி, சீவ, சம்வர்த்தரென்னும். அகாராதி க்ஷகாராந்தமான ஐம்பத்தொரு அக்ஷரமாத்திருகா மூர்த்திகளாகும் ருத்திரர்கள்,

பூரணோதரி, வீரசேநி, சாலமலி, லோலாக்ஷி, வர்த்துளாக்ஷி, தீர்க்கநாசிகை, தீர்க்கமுகி, கோமுகி, தீர்த்தசிம்சு, குண்டோதரி, அர்த்தகேசி, விகிர்தமுகி, சுவாலாமுகி, உலூகமுகி, ஸ்ரீமுகி, வித்தையாமுகி, சரஸ்வதி, மகாகாளி, சர்வ்வசித்தி, சமந்மிதிகௌரி, திரிலோக்கிய, வித்தைய, மந்திரசத்தி, ஆத்மசத்தி, பூதமா தேவாம்போதரி, திராவிணி, நகரீகேசரி, மஞ்சரிரூபிணி, விநாசேகாரோதரி, பூததிநி, பத்திரகாளி, யோகிநி, சங்கிநி, கர்ச்சிநி, காளாராத்திரி, கூர்த்தநியகபர்த்திநி, வாசந்மயை, சயை, சுமூகை, டஸ்வரிய, ரேவதி, மாதவி, வாருணி, ரக்ஷோவதரணி, சதாசைலக்ஷ்மி, பிநாகி, வியாபிநி, மாயாநி, விதைஎன்னும் ஐப்பத்தொரு சத்திகளுடனே கிரமத்திருந்து கூடி ரத்தாங்கச்சவியுள்ளவரான சூல கபாலபாணிகளாய்த் தம்மூர்த்தித்தியாந நாமோச்சாரண மாத்திரத்தில் சர்வ்வசித்திப் பிரதாயகராகி யிருப்பர்.

மற்றந்தவித்தையாதத்துவத்துக்கப்பால் நூறுகோடிமிகுதியாக ஆவரித்திருந்த ஈச்சுவரதத்துவத்தினில் அநந்த, சூக்ஷ்ம, சிவோத்தம, ஏகநேத்திர ஏகருத்திர திரிமூர்த்த திஸ்ரீகண்ட சிகண்டிகமென்னும் புவநங்களிருக்கும்.

முறையே அவற்றில் அந்தந்த நாமதேயங்களுள்ள ஞாநாசத்தி, நூந கிரியாசத்தி வாகுல்லியமான அஷ்டவித்தேச்சுவர ரிருப்பர். அவருள்முதல் அநந்தனென்

பவன் அதோமாயா க்ஷோபகனாகிச் சகலாத்மருக்கும் போகமோக்ஷப் பிரதனாயிருப்பன்.

மற்றந்த ஈச்சுவர தத்துவமென்னும் பிந்துவின் அதிகாராவஸ்தோபாதியின் பரசிவன்தானே செகத்திரார்த்தனாகிச் சோதிமய மந்திரசரீரத்திருந்து, ஜடாமகுட ஏகமுகதிரிநேத்திர வராபய அஸ்தங்களுடைய திவ்விய வஸ்திராபரண கந்தமாலியாதிகளால் அலங்கிருதனாகி அம்பிகையென்னுஞ் சத்திசகிதனாகி வெவ்வேறுதோற்றும், சோமதரேச்சுவரன்உமாசமேதத்துவ,ரிஷபாரூடனர்த்தவிலாசத்துவ, விவாஹோச் சாஹித்துவ, பிக்ஷாடநத்துவ, காமாரித்துவ, காலாரித்துவ, திரிபுராரித்துவ, ஜலந்தராரித்துவ, அசாரித்துவ, வீரபத்திராவதாரத்துவ, அரித்துங்கிஷத்துவ, அர்த்தநாரீசத்துவ, கிராதரூபத்துவ, கங்காளத்துவ, சண்டேசாநுக்கிரகத்துவ, விஷாபாஹாரத்துவ, சக்கரபாத ரூபத்துவ, விக்கினேச்சுவரபிரசாத விமுத்துவ, உமாகுமாரசகிதத்துவ, சுகப்பிரத்துவ, ஏகபாதத்துவ, தக்ஷணாமூர்த்தி சுவரூபத்துவ, மஹாலிங்கோற்பவ ரூபத்துவங்களென்னும் பஞ்சவிம்சதி மூர்த்தி விலாதரனாகியுஞ், சகலாதிகாரியதீச்சுவரன் பிரவர்த்தனப் பிரபாவனாகியுஞ்சகத்தில் சிருஷ்டி, ஸ்திதி, சங்காரங்கள் செய்கிறவனாகியும், தன் தியாநபூஜாநவிதருக்கே போகமோக்ஷப் பிரதனாகி, மகேச்சுவர தத்துவனாகியு மிருப்பன்.

பின் அந்த ஈச்சுர தத்துவத்துக்கப்பால் சகஸ்திரகோடி அதிகமாக ஆவரித்திருக்கும் சதாசிவதத்துவத்தில் நிவிர்த்தி, பிரதிஷ்டை,வித்தை, சாந்தி, சாந்தியாதீதை, பௌத்திராங்க,சாதாக்கிய, தொநிபதிகளென்னும் புவநங்களிருக்கும். அவற்றில் ஞாநக்கிரியாசத்தி சமானரான நித்தியசுகிகளான அணுச்சதாசிவரிருப்பர்.

அந்தச் சதாசிவதத்துவமென்னும் பிந்துவின்போகாவஸ்தையும், ஆதியில் பரசிவன்தானே யோகிகள்



தியாநபூஜார்த்தமாகி ஸ்படிகவர்ணமய சரீரியாய்ப் பஞ்சசடாமகுடங்களும், சந்திரகலையும், பஞ்சமுகபஞ்ச தசலோசநங்களும், சூல, பரசு, கட்க, வைச்சிர, அபயங்களுள்ள தக்ஷணபஞ்ச அஸ்தங்களும், சர்ப்ப, பாச, தண்ட, வரதாக்கினியுள்ள வாமபஞ்ச கரங்களு முள்ள சர்வ்வலக்ஷண சம்பந்நராகித் திவ்விய வஸ்திராபரண கந்தமாலியாதிகளால் அலங்கிருதனாய் மநோன்மணியென்னுஞ் சத்திசகிதனாகிச் சத்தியோசாதாதி முப்பத்தெட்டுக்கலையான வித்தாய்க் கர்ம்மசாதாக்கிய, கர்த்துருசாதாக்கிய, மூர்த்திசாதாக்கிய, அமூர்த்தி சாதாக்கிய, சிவஸாதாக்கிய மென்னும் பஞ்சமூர்த்தி பேதங்களைத் தரித்துச் சகளநிஷ்கள போகஉததியுக்த மூர்த்தியாகித் தன் தியாநபூஜாவிதருக்கே, தர்ம்மார்த்த காமமோக்ஷங்களைக் கொடுக்குஞ் சதாசிவதத்துவங்களாகும்.

அந்தச் சதாசிவ தத்துவத்துக்கப்பால் ஒரு அற்புதம் அதிகமாக ஆவரித்திருந்த சத்திதத்துவத்தினில், இந்திகை, தீபிகை, ரோசிகை, மோசிகை, ஊர்த்துவகாமிநி, வியோமரூபி, அநாதை, அநாசிருதை யென்னும் புவநங்களிருக்கும்.

அவற்றில் மகா சுகமோகிகளான அபரமுத்த சீவரிருப்பர். அந்தச் சத்திதத்துவத்துக்குஅப்பால்அசங்கையாக ஆவரித்திருக்கும் பரசிவத்துக்கு நித்தியாதிஷ்டானமான சிவதத்துவமென்றுசொல்லப்படும்,பிந்துவானதும்பரிபூரணபரஞ்சோதிசுவரூபமாகியிருக்கும். அந்துவென்னும்லயா அவஸ்தோ பாதியில்,பரசிவன்தானே சிவ, பராத்பர,சூக்ஷும, நித்திய,சர்வ்வத்துவ, அவைய,அநந்தித,அநுபம்மிய,அப்பிரமாண, அநாமயனென்னுந் தசநாமத்திருந்து பரங்,கூடங், சரீரஸ்தம்,லிங்கக்ஷேத்திரம்,அநாதிவஸ்துவென்னும் பஞ்சசௌக்யையுள்ள லிங்கசுவரூபமாய் நிஷ்களலயசத்தி ஈச்சுரதத்துவமாகி யிருப்பர்.

மற்றந்த பிந்துவையுட் கொண்ட சர்வ்வக்ஞத்துவ, நித்தியதிருத்தத்துவ, அநாதி சித்தபோதத்துவ, சுதந்தரத்துவ, அலுப்தி சத்தியத்துவ, அநந்தசத்தியத்துவமென்னும் சடாங்கரூபிணியான, பரப்பிரகாசமான, சித்சத்திபரசிவனுக்கே சாக்ஷாத்சரீர விந்திரிய அந்தக்கரண ஆசிரயாதிகந்தானேயாய், அக்கினி, அக்கினியுஷ்ணம்போலச்,சூரிய,சூரியகிரணம்போலப்பரசிவனுடனே தானேதாதாத்மியசம்பந்தத் திருந்திசைந்து தானென்றானாலும். ஞாத்துருவகர்த்திருத்துவாதிவியாபார உபாதிபேதத்தினால் இச்சாசத்தி,ஞானசத்தி,கிரியாசத்தி, வாமி,சேஷ, ரௌத்திரி, காலி, கலவிகரணி, பலவிகரணி, பலப்பிரமதந்நி, சர்வ்வபூததமனை,மனோந்மணி, முதலான அநேகநாமங்களுள்ளவளாய்ப்,பத்திவத்சிலையாகியிருப்பாள்.

இந்தச்சத்தியென்னும் திவ்விய தேசோமண்டலமத்தியில் சத்துச்சித்தாநந்த நித்தியபரிபூரண திவ்வியதேஜோமய சத்திய சுத்த சுவயம்பிரகாசசிந்மய சுவரூபனான ஸ்ரீகுருசம்புலிங்கம் பிரகாசித்திருப்பன்.

இப்படிச் சொன்ன சகல தேகாதிவிஷயங்களே காலாக்கினிமுதலான சகலபுவனங்களை ஆசரித்துக் கொண்டிருக்கும். அந்தப் புவனாதிகள் பூமியாதிதத்துவங்களை ஆசரித்துக்கொண்டிருக்கும். அந்தத்தத்துவங்கள் நிவிர்த்தியாதிகலைகளை யாசரித்துக் கொண்டிருக்கும். அந்தக்கலைகள் பிந்துவை ஆசரித்துக்கொண்டிருக்கும். அந்தப் பிந்துசித்சத்தியைஆசரித்துக்கொண்டிருக்கும். அந்தச்சித்சத்தி ஸ்ரீகுருசம்புலிங்கத்தை ஆசரித்துக்கொண்டிருக்கும். அந்த ஸ்ரீகுருசம்புலிங்கம் சர்வ்வாசிரயமுந் தானாகித்தானென்றும் ஆசரியாது நிர்விகாரசுவரூபமாய்ச் சர்வ்வாத்மருக்குஞ் சுககரமாகிப் பிரகாசித்திருக்கும்.

விவேகசிந்தாமணியில். சுத்தமாயாஸ்திதியுரைத்தபரிச்சேதம்.

முற்றிற்று.

உ

சிவமயம்.

ஸ்ரீகுருப்யோநம:

# விவேகசிந்தாமணியில்,

## ஒன்பதாவது,

## சீவர்புவநாந்தரப்பிராப்தியுரைத்த பரிச்சேதம்.

இப்படி யகிலபுவனமத்தியைத் தெளியச்சொன்னேன். இனிச் சீவர் புவநத்திற் பொருந்துங் கர்ம்மபலம் விடாதே அநுபவிப்பதைவிரித்துச் சொல்லுவேன் அதெப்படியெனின்.

### ஆத்மாஉண்டென்பது.

நாம்பாரித்தலோகத்தில் ஆத்மா அநாத்மா விவேகசூநியரான மூடசநங்கள் பிரத்தியக்ஷ மானதற்கே யுடன்பட்டு அநுமாநப் பிரமாணங்களை உதாசீநஞ்செய்து, நான் நொய்யன், நான்தீர்க்கன், நான் சிவப்பன், நானிளைத்தேன், நான்தோன்றினே னென்பன முதலாகத் தம்மநுபவங்களால், தேகத்தைப் பிளந்துபார்க்கில் ஒரு ஆத்மனைக் காணக்கூடாது என்னும் உத்திகளால் தேகமே ஆத்மனென்று சொல்லிப்பின் விளங்கியிருக்குந் தீபங்கெட்டதன்மேல் அதற்கு வேறுதோற்றமில்லை யென்பதுபோலத்தேகமழிந்தால் வேறொருத்தனில்லையாகிச் சுவர்க்காதிகளில் பொருந்துவமற்று ஜந்மிக்கத்தநுவில்லை யதனால் தேகமே ஆத்மா, மரணமே மோக்ஷம், சுகமே சுவர்க்கம், துக்கமே நரகம், இவையன்றி வேறொன்றுமில்லை யதனால், விதிநிஷேத புண்ணியபாபமில்லையென்று நாஸ்திகபுத்தியுள்ளவர்களாகி யிருப்பர். அதற்குப்பரிகாரமெப்படியெனின் உலோகத்தில் ஒன்றினொன்றில்லாதே பாலிய யௌவந வார்த்திகங்களென்னும் நாநா அவஸ்தையெய்தும். இந்தத்தேகத்துள் ஒருவன் ஆத்மனென்பது பாலியத்தில் நானநுபவித்த அர்த்தம்

வார்த்தீபத்தில் ஸ்மரித்திருப்பதனால் அநுபவித்தவனு ம், நினைத்தவனும் ஒருத்தனிருந்தானாகும். அதற்குப்பி ரத்தியக்ஷப் பிரமாணசித்தியாவ தெப்படியோ அப்ப டிப் பூர்வ்வத்தினில் பொன் பொன்னவாவுள்ள சரீரங் களில் ஆத்மனொருவனே யென்பது முன்னிவன் புண் ணியாதிகன், பாபிஷ்டன் என்னும் லோகப் பிரசித்த மான வார்த்தை, சுகதுக்க தாரதம்மியத்தினால் அறிய த்தக்கதாகியும், அப்போபிறந்தகன்று தாய் முலை யுண் ணுவது பூர்வ்வ சமுஸ்கார திருஷ்டாந்தமாகும். அத னால் தன்ஜாதிஸ்மரணை சொல்லுவது யோகசித்தர்களு க்குண்டாகையாலும், மிருத்துவாகிக் கூடிச்சைதந்நிய ம்பெற்று இயமலோகாதிகளில் தமக்கானவாதை முத லானகுறிகள் காட்டுவர். அது பிரத்தியக்ஷங்காண்பாரா கியும், ரதிகாம,பலிகாம, ஹந்துகாமாதிக் கிரகாவிசிஷ்ட ரும், மந்திரவாதிகளால் பேசுவித்து முன்னாள் இந்தப்பி ரகாரத்தவன் இப்போது நானிப்படியானேன், இனிநா னெப்படியாவனோ வென்று பூர்வ்வஸ்திதி சொல்பவர் சொல்லும், பிர்ம்மராக்ஷஸ், பூதங்கள் சொல்லுங்கேட்ப வரும், பின் இந்தத் தேகோத்பத்தியென்னும் அது பூர்வ்வ சந்மத்தில் கர்த்துரு செய்த கர்ம்மாதீநத்தால் இங்கே அவனுக்கு அநுபோக சாதநமாகியே ஜந்மித்த தென்னும் பிராரத்துவம் உடன்படாதே தானே ஆயிற் றுயென்னையேல் காரணமில்லாமல் சகலகாரியமிப்போ ஆக்வேண்டுமென்கிற அகிருதாப்பியாகம ரூபவாதையு ண்டாகியும், பின்பு தீக்குவெப்பம், கோகிலத்துக்குச் சுஸ்வரம் சகஸமானதுபோலப், புருஷன் வீரியத்துக் குத் தேகமாவது சுபாவமென்னையாயின் திநந்திநம் வீ ணாகும் வீரியத்தில் அதுஆகாதாகியும் பின்லோகத்துள் சர்வ்வஜந்மமெல்லாம், வெகுபிரயாசத்தினில், யக்ஞ, தா ந, விரத, உபாசநாதிபுண்ணிய பலமும் மேலநுபவத்



தில் இல்லையாயின். கிருதவிநாசநமென்னும் தோஷமு ண்டாகியும், பின் என்மனை, என்தநம், என்பது எப்படி யோ அப்படிப்போல என்தேகமென்னு மிடத்தில் தே கதேகிகள் பேதஞ்சொல்லும் யுக்திகளுண்டாகி அத னால் பின்தேகாத்மனல்ல பூதகாரியமான காரணமாகிக் கடம்போல வென்னுமநுமான முண்டாகியும் பின்னும் சாஸ்திரோக்தமான, துலாபார மென்னும் தடாங்கிகி தீக்ஷை பெற்றவனுக்கு மந்திர சமுஸ்காரத்தினால் பாப க்ஷயம் பிரத்தியக்ஷமாவதுபோலச், சந்திரசூரிய கிரஹ ணங்கள்சொல்லுஞ் சாஸ்திரந்தப்பாதது போலத்தேகா ந்நியயோந்நிய மாத்மனென்னும் ஆகமப்பிரமாணத்தினா ல் பொய்யில்லாததாகித் தேகவிலக்ஷணனாகியிருக்கும் ஆத்மனொருவனுண்டென்பதே சித்தமாம்.

அந்தத் தேகாந்நியோந்நியமான ஆத்மன் நித்திய வியாபக சைதந்நியரூபனானாலும், தன் அஞ்ஞாநபலத் தில் கர்ம்மாதீநத்தால் ஈச்சுவரப் பிரேரேபணையினால் க டாகாசத்தைப்போலச் சூக்ஷமசரீரத் திடையாட்டமே தன்னுடைய ஆட்டமாகிச் சகலலோகங்களில் சுகதுக்க ங்களை முத்தியாகும் பரியந்தம் அநுபவித்திருப்பனென் பதே சத்தியம்.

லௌகிகரடையும்பதவி.

அதெப்படியெனின் கர்ம்மபூமியென்னும் இந்த லோகத்தில் நடை வாவி கூப தடாகாதி பூர்ணபுண்ணி யமென்னும் பெயர் உள்ளன நான்செய்தேனென்னும் புண்ணிய விசேஷத்தில் தற்பரனான லௌகிகர்க்கு ஜோதிஷ்டோம அசுவமேதயாகாதி இஷ்டியென்னும் பெயருள்ள கருமநைஷ்டிகருக்கு வாமநாசிகாபுட இ டையென்னு நாடிமார்க்கத்தில் பிராணத்தியாக மாக முதல் தூமத்தையெய்தி அந்தத்தூமத்திருந்து ராத்திரி ராத்திரியினிருந்து கிருஷ்ணபக்ஷம், கிருஷ்ணபக்ஷத்தி

ருந்து தக்ஷணாயநம் தக்ஷணாயநத் திருந்து சம்வற்சரம்,
சம்வற்சரத்திருந்து பிதுர்லோகம், பிதுர் லோகத்திருந்
து ஆகாசம்,ஆகாசத்திருந்து சந்திரன்,சந்திரனிலிருந்து
அதன்மேல் முறையே சுவர்க்கலோகப்பிராப்தியாகும்.

## தேகோற்பத்திவிபரம்-

அந்தச் சுவர்க்கலோகாதிகளில் இந்திரன் சாலோ
கசாமீப்பியாதி பதஸ்திதராகிப், பின் அங்கே, பிரியவிஷ
ய,போகக்ஷய,துக்கமும் அங்கியரதிசய சுகமுங்கண்டு,த
ரிக்கப்போகாததுக்கமும்,பதநபயதுக்கமென்னும் துக்க
த்திரயம் வந்து வந்து அடிக்கடி மநதைமூடிக்கொண்டு
வசிதாதி மகாசுகபோகமுமுண்டு தீர்ந்து புநரா வீர்த்
தியாகுஞ் சமயத்தில், முதல் ககநம். அந்தக் ககநமெய்
தித் தூம்பிரவர்ணமாகும் சூக்ஷ்மம் அந்தக் ககநத்திரு
ந்து வாயுவும், வாயுவிலிருந்து தூமமும், தூமத்திலிரு
ந்து மேகமும், மேகத்திலிருந்து விருஷ்டியும் விருஷ்டி
யிலிருந்து சாலியாதி தாநியமும். சாலியிலிருந்து அங்நரூ
பமும் முறையே யெய்தும். பின்னந்தப் பஞ்சபூதாத்
மகமான அங்நமே, பக்ஷ, போச்சிய, லேஹிய, சோஷி
ய, பிசில, பாநியமென்னும் ஷடுவிதமாகி யிருக்கும்.

அதனைச்சாயாபதிகள்புசிக்க அதுஉதராக்கிநியால்
பசனப்பட்டுக்கிட்டமென்றும்,ரசநமென்றும்இருதிறமா
ம்.அக்கிட்டமேமலமூத்திரமாககுதகுய்யத்துவாரத்தில்
அபாநவாயுவின் வியாபாரத்தால் புறப்பட்டுப்போகும்.

அந்தரசம் நாபிஸ்தாநத்திருந்துசமாநவாயு சர்வ்வா
ங்கத்துக்கும் பகிர்ந்து கொடுக்க அந்தரசம் அங்கங்கேப
ஸீசி ரசமென்றும், கிட்டமென்றும் இரண்டுவிதமாம்.

அந்தக்கிட்டமலம், சர்ம்மவியர்வு, மலமூத்திரம், சி
ங்குவைமலம், தந்தமலம், நாஸீகமலம், நேத்திரமலம்,
சோத்திரமலம், குதமலம், குய்யமலம், நகமலமென்னு
ம், அவாத சயலரூபத்தில் உலைந்து போமென்றறி.



மற்றயரசமே ஸ்தூலரசம்,சூக்ஷமரசம் எனத்துவி
தமாம். அவற்றுள் சூக்ஷமரூபரசத்தில் பிராணேந்திரிய
அந்தக்கரணாதிகளெல்லாம் பரிபோஷணமாம். ஸ்தூல
ரூபரசத்தில் உதிர, மாமிச, மேதை, மூளை, அஸ்தி, மற்
சை, சுக்கிலமென்னுஞ் சத்ததாதுக்கள் வர்த்திப்பதாய்
அந்தச்சீவன் அந்தந்தத்தாதுமயனாகிப் புருஷ கர்ப்பத்
தில் மாசத்திரயமிருந்து, மேல் ஸ்திரீபுருஷ சம்போக
சமயத்தில் அந்தப்பிண்டமே காலகர்ம்மவசத்தால் சுக்
கில சம்பந்தத்திலிழிந்து ஸ்திரீகள் ருது மதியான திந
ந்தொடங்கிப் பதினைந்து திநபரியந்தம் துத்திப் பூப்போ
ல விகசிதமாயிருந்து நிர்த்தோஷமான கர்ப்பாசிரயமெ
ன்னுங் கோஷமும் வாயுவசத்தில் பிரவேசமாகும்.

அந்தவ்ாயு விகாரத்தால் சுக்கிலம் இரண்டாகிச்; ச
ராயுவென்னும் மாமிச கஞ்சுகமாசிரய மாகி யிரண்டு
பிள்ளைகளாம். உதராக்கிநியிலிருந்து அங்நாதிகமெல்லா
ம் பசஸீப்போவதனல் அந்த சுக்கிலபிண்டம். சுஸ்தி
தமாகியிருக்கும் அதெப்படியெனின், அச்சுக்கிலமய பி
ண்டத்துக்கே வங்நிசிகை பொருந்தாமல் நீர்ப்பொட்ட
ணமிருக்கும். அதன்மேல் அக்கிநி ஊர்த்தமுகமாகி வா
யுவில் நிரோதித்துக் கொண்டிருக்கும்.

இதன் கீழிருந்த சுக்கிலபிண்டம் வெந்து கெடா
து; சுத்தியில் விழுந்த சுவாதுதகம் வலிந்து முத்தாவ
துபோல, அந்தப் பிண்டமயமான புருஷன் வீரியம், ஸ்
திரியின் ரத்தத்துடன் விரவி ஒருதிநத்துக்குள் கலநமா
கும். கலநம், ஐந்துதிநத்துக்குள் புற்புதமாகும். பத்துத்
திநத்துக்குள் ரத்தாத்மகமாகும். பதினைந்து திநத்துக்
குள் மாமிசமாகும்.இருபது திநத்துக்குள் வலிந்திருக்கு
ம். இருபத்தைந்து திநத்தில் பஞ்சாங்குரந் தோற்றும்.

ஒருதிங்களில் சிரசுதோன்றும், இரண்டுதிங்களில்
புஜங்களுதிக்கும். மூன்றுதிங்களில் பாதாங்குர கேசகு

ய்யாதிகள் உண்டாம். நான்குதிங்களில் நாசி, அக்ஷ,சு
ரோத்திராதி ரந்திரங்களுண்டாம். ஐந்துதிங்களில், ஸ்க
ந்தசடராதிகளாம். ஆறுதிங்களில் குதகர பாதாங்குலிக
ளுண்டாம். ஏழுதிங்களில் சர்வ்வாங்கங்களும் பூரணமா
கிச் சேதனம்பிறந்து தாயுண்ட அந்நரசம் நாபிசூத்திர
த்தினால் உண்ணும். எட்டுத்திங்களில் அந்தக்கர்ப்பாசி
ரயமென்னும் ரௌரவ நரகத்தின் மலமூத்திராதிகளி
னால் சிக்கிச் சலதாரைக் கும்பிப்புழுப்போல மகாதுக்
கமநுபவித்து விசாரித்துப்பார்த்து முன்னான் இந்தக்
கர்ப்பாசிரயத்தின் புரம்விட்டு ஸ்ரீகுருவைச்சேர்ந்து, சி
வபத்தி, சிவஞானம், சிவத்தியானம், சிவார்ச்சனை, சிவவி
ரதம், சிவமகேச்சுவரரின்சமற்சகத்தினால், சற்குணச
ம்பந்நனாகிச், சந்ம, சேனா, மரணரூப சமுசார சாகரமு
ம், தாண்டுவேனென்று தன்பூர்வ்வ பாரஸ்திதிகளைக் க
ர்ப்போபநிஷ சந்மத்தினால் நினைத்திருக்கும்.

பின் அந்தமாதாவுண்ட மதுர, ஆம, மல, திப்தி,
கடு, கஷாய, லவணமென்னும் ஷடுவிதரசாந பரிணம
பேதத்தில் சுவேத, பீத, கபோத, அரீத, கிருஷ்ண, பர
ஞ்சிருஷ்டமென்னும் ஷடுவித வர்ணமாகிச், சுக்கிலாதி
கத்தில் புருஷன், சுரோணிகாதிகத்தில் ஸ்திரி, சுக்கில
சுரோணிதசமானத்தில் நபும்ஸகமாகிச், சுபகர்ம்மத்தி
ல், சுலக்ஷணசரீரமும் ஈநகர்ம்மத்தில் பெதிராந்த பங்
குலனாகிச் சுக்கிலசுரோணிதத்தினால் முறையே மும்மூ
ன்றுரோமநாடி அஸ்தி, ரத்த, மாமிச, தொக்கு, சக்ஷுஈ
கோசயுக்தமான அங்கப்பிரத்தியாங்க மெல்லாம் சம்பூ
ர்ணமாகி ஆயுஷ்மி,கர்ம்ம, திரவிய,வித்தைய, மரணமெ
ன்னும் ஐந்துவித லிகிதம்பெற்றுப் பரிதாபாசவங் கொ
ண்டிருக்கும். நவமாசமுநிறைந்துமேல் ஒருகோடி முற்
கா அடிபட்டதுபோல அடித்துக்கீழ்நோக்கச்செய்யும்,
பிரசூதவாயுவின் காற்றினால் திரும்பித்தீர்க்கப் பிராந்தி



பிறந்துமுதல் விவேகங்கெட்டு, உவமிக்க ஒண்ணாதவே
தனையோடு இரும்புக்கம்பியைக் கம்பியச்சில் வாங்குவ
துபோல யோநித்துவாரத்தில் புறப்பட்டு, மூர்ச்சித்து
மெல்லமெல்ல அறிவாகிக் கிரமத்தில், சாதி சமஸ்கார
த்தையளவிட்டுத் தநுர்வாதம், டாகிநி, பாலக்கிரகாதிக
ண்டங்களைக்களைந்து,பாலலீலைமுதலானவிநோதங்களை
ச்செய்து விருத்த சங்கயத்தில் அந்தந்தபாஷைகற்று,
கர்ப்பத்துள்மூன்றும், புரத்தில் மூன்றுமாகவர்த்திக்கு
ம், சாயதே, அஸ்திதே, விபரணமதே, விவர்த்ததே, அ
பக்ஷியதே,விநசியதே யென்னுஞ் சட்பாப,விகாரங்களா
யப், புண்ணியவிசேஷத்தினில்பிராமணதிவிசிஷ்டசந்ம
ம், பாபவிசேஷத்தினில் சுணக, சூகர மென்னு ஈநயோ
நி சந்மமாகிக், கர்ம்மவிசித்திரத்தில், புருஷனேஸ்திரியா
கிஸ்திரீயே புருஷனாகிப்பிறந்து பின்னிங்குச்செய்யும்பு
ண்ணியத்தின், தேவத்துவமும், பாபத்தில்ஸ்தாபரத்து
வமும், புண்ணியபாபசமாநத்தில் மநுஷத்துவமும், மு
ன்பெறப்பட்டவனாகி, இந்தப்பிரகாரஞ் சுவர்க்காதிலோ
கங்களிலெய்தி மற்றுஞ் சந்மித்தவனே பிதுர்யாநமாம்.

இந்தப்பிர்ம்ம, விஷ்ணு, ருத்திராதி சகுணதேவ
தாமூர்த்தி உபாசகரான அந்தப் பக்தருக்குத் தக்ஷண
நாசிகாபுடத்தில் பிங்கலையென்னும் நாடி மார்க்கத்தில்
பிராண வியோகமாகலும், முதல்சுவாலையைப் பொருந்
துவது, அந்தச்சுவாலையிலிருந்து, திவசம், அந்தத்திவ
ஸத்தில் சுக்கிலபக்ஷம், சுக்கிலபக்ஷத்தி லுத்தராயண
ம், உத்தராயணத்தில் சம்வற்சரம், சங்வற்சரத்தில் வாயு
வாயுவில் சூரியன் சூரியனில் சுதாங்கிசு, சுதாங்கிசத்தின்
மின், மின்னில், இந்திரன், இந்திரன்மேல் ஏறிமுறையே
பிர்ம்மா, விஷ்ணுதேவதாப் பிராப்தியாகும்.

## சாலோகாதிலக்ஷணம்.

அங்கங்கேபிரமன்காமதேனுஹம்சாதிவாகநங்களின்அ
ந்தந்ததேவதாலோகங்களினில்இருப்பதேசாலோகமாம்

அந்தப்பிர்ம்மா சம்பந்தமானவிசாத்திரியாதி மந்திரசத்திகளென்னும்படியேதெனின்.அந்தந்தத் தேவதைகளின் அத்தியந்த சாமீப ஸ்திதியே சாமீப்பியமாம். சீவசம்பந்தமான ருத்திராணுகளெப்படியெனின் அந்தந்தத்தேவதாகாரத்துவமே,சாரூப்பியமாம். பின்விஷ்ணு சம்பந்தமானசிசுபாலாதிகளெப்படியெனின் அந்தந்தத் தேவதைகளுடனே ஏகதேகலக்ஷணமேசாயுச்சியமாம். மற்றந்தச்சிவசம்பந்தமான நந்திகேச்சுவ ராதிகள்போல அந்தந்தத் தேவதா சமானைஸ்வரியமே சாரூப்பியமாம், இந்தப்படி எய்தும் பத தாரதம்மியத்தால் ஐந்துவிதத்தில் அந்தந்தத் தேவதாலோகத்தினில் மகாசுகியாகி சுகத்திலிருந்து அங்கே பிரளயகாலத்தில் அந்தத்தேவதைகளுடன் கூடி, அல்லது வைராக்கியத்தி லிருந்தாலும் சம்மியஞானபலத்தால் நிசமோக்ஷமாகும்.

பின் எங்கேயானாலும் அங்கேயிருந்திங்கேவந்த ரூபம் ஆவிருத்தி லக்ஷணசமுசார மோகமில்லாமல், செகத்திரார்த்தராய் உபயகுல சுத்தரான ஸ்திரிபுருஷர் கர்ப்பத்திலானாலும், சம்பிரதாய சித்தரான ஆசாரியகுலத்தி லானாலும்,சந்மித்துமேல் ஞானாக்கிரதாய சம்பந்நராகிச் சகலகைவல்லியம் பெறுபவரோ தேவயானமாவர்.

இயமநியமாதிஅஷ்டாங்க யோகசித்தரானயோகீச்சுவரருக்குரேசகாதிசப்தபிராணாயாமபலத்தால்சுஷுமுணாநாடி மார்க்கத்தினில்,சிரோரந்திரத்தினில்பிராணோத்கிராந்தமாகிச்சகர்ம்மத்திருந்து சுயவிச்சையா லோகப்பிராப்திநிஷ்காமத்திருந்து பிர்ம்மலோகாதிவிவாதாநமில்லாமல் தத்துவாதீதமான சிவதத்துவப்பிராப்தியாகும்.

விசிஷ்டஞான தீக்ஷாசம்பந்நருக்குச் சீவன் முத்திசித்திப்பதற்காகிப் பூரணசுவரூபத்தினில் ககநம்போலக்கமநாகமநமில்லாதவனாகி நாடிமார்க்கநியமமில்லாமல்,



காசியிலானாலும், ஹீநாசிரயத்திலானாலும், அறிவுமறப்பினிலானாலும் மேல் எப்படியாவதுபிராணத்தியாகமானாலும்மேலானநிஜமோக்ஷசித்தியாமென்பதே சித்தமாம்.

கர்ம்மபத்தி யோகஞானாதி புண்ணிய ஹீநரான பாபாத்மருக்குத் திரண்ட நீண்டபுழுப்போல யாதநாசரீரம் பிடித்துக் குதகுய்யத்திற் பிராணம் புறப்பட்டுப்போய்மேல் நீலாத்திரியானகாருடல் செங்கண்கோரதாடைபாசதண்டகரத்துவய ரத்தவஸ்திராபரண ரத்த சந்தனரத்தபுஷ்பங்களால்அலங்கிருதரான உக்கிரகண்டக,அதியுக்கிரகண்டக,உக்கிரசண்ட,அதியுக்கிரசமக்கிர,உதம்பலாதி யியமதூதர் அதிபயங்கர மார்க்கத்துள்ளிழுத்துக் கொண்டு போய்த் தண்டதரன்சந்நிதியில்நிறுத்திச்,சித்திரகுப்த ஞணையிலிருந்து, அந்தந்தப் பாபாநுசாரமான மகாவதை கொடுத்துப் பூர்வ்வோக்த நரகாகாரத்தினில் கொண்டுபோய் வீழ்த்துவ ரென்பதுசித்தமாம்.

மேலும் சாமாந்ய ஜீவன்களுக்குக் குதகுய்யத்திருந்து சீவன்போகப் பிசாசே பிராப்தியாகும். சுசோத்திரத்திற் பிராணன்போனால் பிதுர்லோகப்பிராப்தி. சிங்ஙுவையிற் பிராணன்போனால் தயித்தியலோகப் பிராப்தியாகும். நேத்திரத்தில் பிராணன்போனால் சுவர்க்கலோகப்பிராப்தியாம்.நாசிகையில் பிராணன்போனால் மத்தியலோகப்பிராப்தியாம்.பசுக்களால் பிராணன்போனால்காமதேநு லோகப்பிராப்தியாகும்.

நாநாமதஸ்தர் அடையும்முத்திவிபரம்.

மேலும் இப்படிக் கௌள, யாமளாதி மதாந்தர அபிமாநிகளுக்குப் பிசாச பதவி பிராப்தியாம். சார்வாக, ஜோதிஷ, பூர்வ்வமீமாங்கிகளுக்கு ஸ்தூலபூதாந்தரப் பிராப்தியாம். சுமார்த்தருக்குத் தன்மாத்திரா பிராப்தியாம்.இந்திரியசைதந்நியருக்கு இந்திரியப்பிராப்தியாம். மந

சைதந்நியருக்கு மஹப்பிராப்தியாம். ஆங்கார சைதந்நிய
ருக்கும், பிராணசைதந்நியருக்கும் ஆங்காரதத்துவப் பி
ராப்தியாம். பௌத்த,நையாயிக,வைசேஷியருக்குப் புத்
திதத்துவப் பிராப்தியாம். ஆருகதருக்கும்,சப்தசம்போ
க வாதிகளுக்கும், குணதத்துவப் பிராப்தியாம். பாஞ்ச
ராத்திரிகளுக்குப் பிரகிருதி தத்துவம் பிராப்தியாம். சா
ங்கியருக்குப் பிரகிருதி மஸ்தகத்தில் புவநமே பிராப்
தியாம். அத்வைதிகளுக்குப் புருஷதத்துவமே பிராப்தி
யாம். புராணிகருக்கு ராகதத்துவமே பிராப்தியாம். கா
பாலிகர்க்குக் காலதத்துவமே பிராப்தியாம். பாசுபதர்க
ளுக்கும், உற்பத்திசாமியவாதிகளுக்கும், ஆவேசசாமிய
வாதிகளுக்கும்,மாயாதத்துவப் பிராப்தியாம்.மகாவிரதி
களுக்குச் சுத்தவித்தையா தத்துவப் பிராப்தியாம்.சிவப்
பிரயோஜககர்த்திருத்துவவாதிகளுக்கும்,ஈச்சுவரதாசிந்
நியகர்த்துருத்துவவாதிகளுக்கும்,ஈச்சுவரதத்துவப்பிரா
ப்தியாம். காருட தக்ஷிண, வாம,பூததாந்திரீகருக்கு நிவ
ர்த்தியாதி புவநப்பிராப்தியாம். சுத்தசாத்தீகருக்குச் சத்
திதத்துவப்பிராப்தியாம். சைவருக்குப்பரசிவசமாந தத்
துவப்பிராப்தியாம். வேத வேதாந்த ஆகமபுராணங்களி
ன் சாராசாரமாய் அதிக ரகசியார்த்தப்பிரதிபாதகரான
வீரசைவமார்க்கத்தில் லிங்காங்க சம்பந்திகளான ஷடு
ஸ்தலஞாநிகளுக்குச் சர்வோற் கிருஷ்டமான அவிரள
சிவஐக்கியப் பிராப்தியாமென்று அறியவேண்டும்.

விவேகசிந்தாமணியில்,

ஒன்பதாவது,

சிவர்புவநாந்தரப்பிராப்தியுரைத்த பரிச்சேதம்

முற்றிற்று.

---



சிவமயம்.

ஸ்ரீகுருப்யோநமஃ

# விவேகசிந்தாமணியில்,

## பத்தாவது,

### சகலாகமக்கிரமவர்ணனையுரைத்த பரிச்சேதம்.

மதசம்பந்தமான ஜநங்களுக்கு இகலோகசுகம் பர லோககதி யிப்படியென்று முன்பரிச்சேதத்தில் சொன்னேன். இந்தப்பரிச்சேதத்தில் பின்னும் அவர்களுக்கே அந்தக்காலகர்ம்ம நியமநிர்ச்சித்த அறிவு இப்படியிருக்குமென்று சொல்லுவேன்.

### காலவிபரம்.

அந்த ஆநந்தம் எப்படியெனின், காலமென்பதே மாயாகாரியமாம். அது ஸ்தூலகாலமென்றும், சூக்ஷம காலமென்றும் இரண்டுவிதமாகி யிருக்கும். அவற்றுள், லௌகிககாலமே ஸ்தூலகாலமாம். அத்தியாத்மிககால மே சூக்ஷமகாலமாகும். இவையே மநுஷர் பிதுர்க்கள், தேவதைகள், பிர்ம்மாதிகளின் சம்பந்தத்தினால் வெகுவிதமாகிச், சகல ஆத்மாதிகளுக்கும், நாநாவிவகாரங்களில் எண்ணிக்கைபடும்.

### க-வது. ஸ்தூலகாலலக்ஷணம்.

அந்தஸ்தூலமான லௌகிககாலத்தின் லக்ஷணம் எப்படியெனின். கண்ணின் ஒருநிமைப்பில்நான்கிலொன்று திருட்டு; திருட்டு இரண்டுகொண்டது லவம்; லவம் இரண்டுகொண்டது, நிமிஷம்; நிமிஷம் பதினைந்து கொண்டது காஷ்டம்; காஷ்டம் முப்பது கொண்டது,

கலே; கலேபதினேந்துகொண்டது லக்ஷணம்; லக்ஷணம்
ரண்டுகொண்டது, முகிருதம்; முகிருதம் நான்குகொ
ண்டது நாழிகை; நாழிகை எட்டுக்கொண்டது சாமம்;
சாமம் ஒன்றுக்கு ஜோதிஷர் ஏழரைநாழிகை என்பர்.
சாமம்; எட்டுக்கொண்டது பகலுமிரவுமாகிய ஒருதிந
மாம். அந்தத்திநம், நாயிறு, திங்கள், செவ்வாய், புதன்
வியாழம், வெள்ளி, சநிஎன்னும் ஏழுதிநம் ஒருவாரமா
ம். திநம் பதினேந்துகொண்டது பக்ஷமாம்; இப்பக்ஷம்,
சுக்கிலபக்ஷம் கிருஷ்ணபக்ஷம் எனவிரண்டாம்;

## திதிகளின்தேவதைகள்முதலியன.

அந்தப்பக்ஷத்துள், அக்கிநி அதிதேவதையானபா
ட்டியமி; சூரியன் அதிதேவதையான துதியை; குபேரன்
அதிதேவதையான திரிதியை; விக்கிநேச்சுவரன் அதி
தேவதையான சதுர்த்தி; லக்ஷுமி அதிதேவதையான
பஞ்சமி; சண்முகன் அதிதேவதையான சஷ்டி; சரஸ்வ
தி அதிதேவதையான சப்தமி; ருத்திரன் அதிதேவதை
யான அஷ்டமி; துர்க்கை அதிதேவதையான நவமி; ம
நு அதிதேவதையான தசமி; இந்திரன் அதிதேவதையா
ன ஏகாதசி; விஷ்ணு அதிதேவதையான துவாதசி; கா
மன் அதிதேவதையான திரயோதசி; ஈச்சுவரன் அதிதே
வதையானசதுர்த்தசி; சந்திரன் அதிதேவதையானபௌ
ர்ணிமிஎன்னுஞ் சுபாசுப பதினேந்துதிதிகளும், சுத்தமெ
ன்னுஞ் சுக்கிலபக்ஷமாம். முற்கூறிய கிரமப்படி பாட்டி
யமிஆதி-சதுர்த்தசி அந்தமான தேவதைகளும், அமா
வாசியைக்கு அதிதேவதை பிதுர்க்களுமாகும். இதுப
குளமென்னுங் கிருக்ஷ்ணபக்ஷமாம்.

பின்னந்தப் பக்ஷத்துவயத்தினில் மேஷாதி பன்னி
ரண்டுராசிகளும், அச்சுவினிமுதல் இருபத்தேழு நக்ஷத்
திரங்களும், விஷ்கம்பமாதி இருபத்தேழு திநயோகங்க



ளும், சகுநியாதி கிமுஸ்துக்கிநமீருகிய நான்கும் உவா
ச்சூழ்ந்த ஸ்திரகரணங்களாம். மற்றயஏழுஞ் சரகரணங்
களாம். இவை ஒவ்வொன்றும் திநசங்கியையான அறுப
துநாழிகையென்னும் ஸ்தூலசங்கியையாய் க்ஷய, விருத்
தி, சமமாய்ச் சுபாசுபரூபத்தில் வர்த்தித்திருக்கும். அவற்
றுள் ஸ்திரகரணமே சதுர்த்தசிபூரணே அமாவாசியைக
ளில்வர்த்தித்து ஒவ்வொருதிதிக்கும் இவ்விரண்டு கர
ணங்களாக முப்பதுநாழிகைக் கொன்றாக விருத்திக்ஷ
யப்படியிருக்கும்.

இப்படித்திதி வார நக்ஷத்திர யோக கரணங்களெ
ன்னும் பஞ்சாங்க யுக்தமான பக்ஷத்துவயத்தால் ஒவ்
வொருமாசமாகும். அந்தமாசமே, சைத்திர, வைசாக,
ஜேஷ்ட, ஆஷாட, சிராவண, பாத்திரபத, ஆஸ்வீஜ,
கார்த்திக, மார்க்கசிர, புஷ்ய, மாக, பால்குண மென்னு
ம் பன்னிரண்டாம்.

அந்தமாதங்கள் இரண்டுகொண்டது ருதுவாம்.
அந்தருது ஏமந்தருது, சசிருது, வசந்த ருது, கிரீஷ்ம
ருது, வருஷருது, சரருது, என ஆறுபிரிவினதாகி மார்
க்கசிர முதலாக இவ்விரண்டுதிங்களாம். இருதுமூன்று
கொண்டது, அயநமாம். அவ்வயநம், தக்ஷணயநம், உத்
தராயணம் என இரண்டாம். அவ்வயநம், இரண்டுகொ
ண்டது வருஷமாம். அவ்வருஷம். பிரபவமுதல்-அக்ஷ
யபரியந்தமான அறுபதாம். அவை சுபாசுபங்களுள்ள
தாகி உத்தம விம்சிகை, மத்திமவிம்சிகை, கநிஷ்டவிம்
சிகை என இருபதிருபதாம்.

## மநுஷகற்பம்.

பின்னும் அந்தத்திதி, பக்ஷ, மாச, ருது, அயந, வ
ருஷங்களே மநுஷருக்குப் பூர்வோக்த சூரியனுடை
ய இடையாட்டமே பிரமாணிக்கும்.

## ௨ - வது. சூக்ஷமகாலலக்ஷணம்.

### பிதுர்கற்பம்.

தேவதைகளுக்கு இடைபிங்கலை யெனச்சூரியசந்திரரேசக பூரகமென்னும் இடையாட்டத்தினுல் லக்ஷித்துக்கொண்டிருக்கும்; லௌகிகரான மநுஷரின் ஒருமாதம் பிதுர்களுக்கு ஒருதிநம். அத்திநம் முந்நூற்றறுபது ஒருவருஷம். அந்தக்கிரமத்தில் அவர்களுக்குச் சதாயுளென்றறிவது.

### தேவகற்பம்.

தக்ஷணாயநமே தேவர்களுக்கு ராத்திரி. உத்தராயணமே திவா. இத்திவாராத்திரி கூட ஒருதிநமாம். அத்திநம் முந்நூற்றறுபது கூடினது திவ்வியவருஷமாம். அத்திவ்வியவருஷம் நூறு அவர் ஸ்திதியாகும்.

### யுகங்களின் அளவுமுதலியன.

பின்மநுஷவருஷத்திலே,கிருதயுகாதியுகங்கள் பிரவர்த்தித் திருக்கும். எப்படியெனின், கிருதயுகம். (௰௭ லக்ஷத்து ௨௰௮௲)வருஷமாம். திரேதாயுகம் (௰௨லக்ஷத்து, ௯௰௬௲) வருஷமாம். துவாபரயுகம் (௮லக்ஷத்து ௬௰௪௲) வருஷமாம். கலியுகம் (௪லக்ஷத்து ௩௰௨௲) வருஷமாம். கிருதயுகத்தில்தர்ம்மதேவதை நான்குபாதத்தோடும், திரேதாயுகத்தில் மூன்றுபாதத்தோடும், துவாபரயுகத்தில், இரண்டுபாதத்தோடும்; கலியுகத்தில், ஒருபாதத்தோடு மிருக்கும்.

கிருதயுகத்தில் யோகமும்; திரோதாயுகத்தில், ஞாநமும்; துவாபரயுகத்தில், யக்ஞமும்; கலியுகத்தில், தாநமும்;ஈச்சுவரக்ஷேத்திரயாத்திராதிகளும் முக்கியமாகிப் போகமோக்ஷங்களுக்குச் சாதநமாம்,



கிருதயுகத்தில் தபசுமுதலிய சகர்ம்மபலன் பத்து வருஷத்தில் சித்தியாம். திரேதாயுகத்தில் ஒருவருஷத்தில் சித்தியாம். துவாபரயுகத்தில் ஒருதிங்களில் சித்தியாம். கலியுகத்தில் ஒருதிநத்தில் சித்திப்பதாகி ராகத்துவேஷமில்லாத மநது அசத்தியதுஷ்கிருத மில்லாத புத்தி. ஹிம்சாதி கல்மஷமில்லாத காயகமென்னுந் திரிகரண சுத்தரான மகாபுருஷருக்கு இந்தக்கலியுகத்தில் சீக்கிரமே போகமோக்ஷங்க ளுண்டாகும்.

அந்தச் சதுர்யுகங்களையும் வெவ்வேறுக்கி முந்நூற்றறுபதிற் களைந்துநின்றது தேவதைகள் திவ்வியவருஷமாம். அது கிருதயுகத்துக்கு (௪௲௮௱) வருஷமும்; திரேதாயுகத்துக்கு (௩௲௬௱) வருஷமும்; துவாபரயுகத்துக்கு (௨௲௪௱) வருஷமும்; கலியுகத்துக்கு (௧௨௱) வருஷமுமாம். இவைகளைக் கூட்டின்(௰௨௲) வருஷமாம்.

### பிர்ம்மகற்பம்.

இச்சதுர்யுகங்களுங் கூடினது ஒரு திவ்விய யுகமாம். இத்திவ்வியயுகம் இருபத்தொன்றுகூடினது மந்வந்தரமாம். மந்வந்தரம் பதினன்கு கூடினது சிருட்டிகற்பமாம்.அந்தச்சிருட்டிகற்பமே திவ்வியயுகமாம்.இது ஆயிரங் கூடினது பிர்ம்மாவுக்கு ஒருதிநம். இத்திவசமொன்றுக்குள் பதினன்கு மநுக்களுக்கும், அநேகஇந்திரர்களுக்கும் அதிகாரஞ் சமாப்தியாகி வேறே அதிகாரிகள் பிறப்பார்கள்.

பின்னும் அந்தப்படி திவ்வியயுகமே பிர்ம்மாவுக்கு ஒருராத்திரியாகும். இப்படி யிரவும்பகலுங் கூடினது ஒருதிநமாம். இத்திநம் முந்நூற்றறுபது கூடினது ஒருவருஷமாம். இப்படி நூறுவருஷங்கூடினது பிர்ம்மாவின் ஸ்திதி. அந்தஸ்திதியுள் அநேகமநுக்களுக்கும் அநந்தசக்கரருக்கும் அதிகாரஞ் சமாப்தியாகி வேறு வேறதிகாரிகளுதிப்பர்.

## விஷ்ணுகற்பம்.

பின்னும் அந்தப்பிர்ம்மன் ஸ்திதியென்பதே விஷ்ணுவுக்கு ஒருமாதமாம் அந்தமாசம் ஒன்றினுள் பிர்ம்மன் அதிகாரஞ் சமாப்தியாகி வேறு அதிகாரிகளுதிப்பர். அந்தப்படி பன்னிரண்டு மாதமாயின் ஒருவருஷம். அந்த வருஷம், நூறுகொண்டது விஷ்ணுவின் ஸ்திதி. அந்தஸ் திதியில் அநந்தபிர்ம்மாதிகளுக்கு அதிகாரஞ்சமாப்தியாகி வேறதிகாரிக ளுதிப்பர்.

## ருத்திரகற்பம்.

அந்த விஷ்ணுவின் ஸ்திதியென்பதே ருத்திருக்கு ஒருமாதமாம். அந்தமாதம் ஒன்றினுள் விஷ்ணு அதிகாரஞ் சமாப்தியாகி வேறொரு அதிகாரியுதிப்பன். அந்தமாதம் பன்னிரண்டுகூட ஒருவருஷமாம். அந்தவருஷம் நூறானல் ருத்திரன்ஸ்திதி. அந்தஸ்திதியுள் அநந்த நாராயணருக்கு அதிகாரஞ் சமாப்தியாகி வேறே அதிகாரிகளுதிப்பர்.

## ஈச்சுவரகற்பம்.

அந்தருத்திரன் ஸ்திதியென்பதே ஈச்சுவரனுக்கு ஒருதிநம்; அந்தத்திநம் ஒன்றில் ருத்திரர் அதிகாரஞ்சமாப்தியாகி வேறுஅதிகாரிகளுதிப்பர். அந்தத்திநம் மூன்நூற்றறுபதாயின் ஒருவருஷமாம். அந்த வருஷம் நூறுயின் ஈச்சுவரன் ஸ்திதி. அந்தஸதிதியுள் அசங்கையான ருத்திருக்கு அதிகாரஞ் சமாட்தியாகி வேறு அதிகாரிகளுதிப்பர்.

## சதாசிவகற்பம்.

பின்னந்தஈச்சுவரன் ஸ்திதியே சதாசிவனுக்கு ஒருநிமிஷம். அந்தநிமிஷத்துள் ஈச்சுவரன் அதிகாரஞ் சமாப்தியாகி வேறு அதிகாரிகளுதிப்பர். இந்தக்கிரமத்தி



ருந்தேற்றிய்நாழிகை சாமம், திநம், பக்ஷம், மாதம், வருஷங்களும் அந்தப்படி வருஷநூறு சதாசிவஸ்திதி அந்தஸ்திதியுள் அநேக ஈச்சுவர ரதிகாரஞ் சமாப்தியாகி வேறதிகாரிகளுதிப்பர். பின் அந்தச் சதாசிவன் ஸ்திதியென்பதே விந்தோபாதியின் மந்திரமூர்த்தி யத்துவமுமூக்ஷுர்களின் தியாநபூசார்த்தமாகி, உருக்கொண்டு சகளநிஷ்களனாகி மஹேச்சுவர சதாசிவ சிவசுவரூபனான பரசிவனுக்கு ஒருதிருட்டுமாத்திரையென்பதும் ஆரோபிதமாகும். இவற்றுள் அநந்த சதாசிவருக்கு அதிகாரஞ்சமாப்தியாகி, வேறுஅதிகாரிகளுதிப்பர்.

## பிரளயவிபரம்.

பின்னும் இப்படியே சங்காரக்கிரமத்தினில், சுவர்க்கமத்திமபாதாளமென்னும்லோகத்திரயசங்காரமே அதமப்பிரளயமாம். மேலாகிய மகாலோகஸ்திதி யுண்டாயிருக்கும். பின்னும் அந்தப்பிருதீவியாதி பிரகிருதி அந்தமான இத்தத்துவங்கள் சங்காரமே மத்திமப்பிரளயமாம். மேலாகிய ராகாதிதத்துவ புவநஸ்திதியுண்டாயிருக்கும். விசிஷ்டபரிபாகதாரதம்மிய அபேக்ஷையைப் போதிப்பதற்கு யோக்கியராகப் பின் பிருதீ வியாதி சிவதத்துவாந்தமான சகல தத்துவாதி சடத்துவாவையுட்கொண்டு பிந்து நின்ற அவஸ்தையையே மகாப்பிரளயமாம்.

பின் அந்தமகாப் பிரளயத்தில் பரசிவன் மலவிசிஷ்டபரிபாக தாரதம்மிய அபேக்ஷயினைப்போதிக்க யோக்கியரான அநுக்கிரக ஏகரசிக சத்திமாத்திரத்தின் போதத்துக்கு உபயோக்கியராகி சமஸ்கரிசி சசநிபிடதர மலபரிபாகத்திருந்து ரோதகத்துக்கு யோக்கியரான ரோதகாசத்திமாத்திரத்தில் ரோதித்திருக்கும் தன்மிகள் மநத்தாம் மலபரிபாகமுடன் கூடினதந்ம உபாதஸ்தி

